சிவமயம்.

ஸ்காந்த புராணத்தில் சிவரகஸ்ய கண்டத்தில் உத்திரபாகத்தில்

காலகூடாசன க்ஷேத்திரம் என்கிற

# சிவக்ஷேத்திரமகாத்மியம்





விநாயகர் வெண்பா.

வானுடைநம் பாதவநாடரும்
மோனஞானம் முழுதும் உணர்ந்திட
கானமேவுதடை விகடாசலத்து
ஆனைமாமுகத்து அண்ணலை ஏற்றுவாய்

## முதல் அத்தியாயம்.

வரங்கடந்தருளமெனமூது வானவர் முனிவோர்
கரங்கடலை முகிழ்த்திடக் கருணை செய்தவிச்சை
யுரங்கடந் துரையுணர் வெலாங் கடந்தரு மறையின்
சிரங் கடந்தவனிருப்பது திருக்கயிலாயம்.

வரங்கள் அளித்தருளுமென்று அயன் முதலிய முதிய தேவர்கள் முனிவர்களும் கைகளை தமது சிரசுகளின் மேற் குவித்துவைத்துக் கொண்டு துதிசெய்ய கிருபைசெய்து பாச வலியைக் கடந்து மனவாக்குகளையும் கடந்த அரிய வேதத்தின் சென்னியையுங் கடந்த பரம சிவன் வீற்றிருப்பதற்கு இடமாயிருப்பது திருக்கைலாசமென்னும் திருமலை.

இந்திராதி தேவர்கள் பதவியும், தாமரைப்பூவில் வாசம் செய்யும் பிரமனது பதவியும், சக்கிராயுதத்தையுடைய திருமாலினது பதவியும், ஆகிய இவையெல்லாம் நாசமுறுங்காலத்தும் நாசமில்லாததாய் ஊழிதோறும் அம்மலை வளரா நிற்கும்.

பின்னும் அரம்பையர்கள் நடனம் செய்யும் ஒளியும், வீணை முதலிய நரம்புக்கருவிகளின் ஒலியும், மத்தளம் முதலிய சதார் கருவிகளின் ஒலியும், அநேகம் யானைகள் வீறிடும் ஒலியும், அருவியாற்றின் ஒலியும், நீங்காமல் ஆகாயத்தினும், திக்குகளிலும் சென்று நிரம்பி நிற்கும்.

பின்னும் கோட்டுப்பூ நிலப்பூ நீர்ப்பூ கொடிப்பூ ஆகிய நால்வகை மலர்களைக்கொண்டு சிவபெருமானுடைய திருவடிகள்மேல் அருச்சிக்கின்ற மகரிஷிகள் கூட்டங்களும் ஒருபக்கத்தில் சூழ்ந்திருக்கப்படும்.

யானைகளும், புலிகளும், படங்களையுடைய பாம்புகளும், தங்கள் முன்னோர்களாகிய ஐராவதம் முதலியனவும், வியாக்ரபாதரும், பதஞ்ஜலியரும், போற்றதலான திருநேத்திரதாரியாக மெய்ஞ்ஞான தபோதனர்களை நினைத்து பக்தி பண்ண மேலுலகமும் இவ்வுலகமும் புகழ்த்தக்கது.

எப்பொழுதம் அளவு சொல்லப்படாத பெருமையையுடைய அந்த வெள்ளியங்கிரிமேல் நீலகண்டனாகிய தேவனைக்காத்த அந்தப்பரம சிவன் கோவிலுக்கு முன்னே சிவதீர்த்தங்களில் சிறந்ததாயிருக்கும் தீர்த்தக்கரையில் சந்திரகாந்தக்கல்லினால் நவரத்தினங்களை பதித்து தேவதச்சனால்செய்த ஆயிரங்கால்மண்டபமொன்றுண்டு. அதில் வெங்கையாசனத்தின் மேல் பதினெண் புராணங்களும் அருளிச்செய்த சூத புராணிகர் எழுந்தருளி இருந்தார்.

ப்ரணம்ய முனயஸ் ஸர்வே ஸ ஹிதம் மதிமதாம் வரம்

ஸர்வவேதார்த்த தத்வஜ்ஞம் ஸர்வசாஸ்திரவிசாரகோவிதம்

ப்ரணம்ய பரயா பக்த்யா பப்ரச்சுர் வினயாந் விதா:

அப்போது அந்தச் சிவதீர்த்தத்தில் வந்து ஸ்நானம் செய்து சந்தியாவந்தனம் முதலிய நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு சந்திரசேகரனை தியானித்து துதித்துக்கொண்டு சம்புபத்தன், சதாநந்தன், உத்தமன் க்ரோதரன், உக்கிரவீர்யன், பிரசண்டன், முதலான முனிவர்களெல்லோரும் சகலமான வேதங்களை ஆராய்ந்து பார்த்து தத்வங்களெல்

லாய் உள்ளபடி அறிந்து பரமசிவனிடத்தில் மிகுந்த அன்பினரான சூதமாமுனிவரை வணங்கி துதித்து மிகவணக்கமாய் ஒரு கார்யத்தை வினவுவராயினர்.

முனய ஊசு

பகவந் ஸர்வதத்வஜ்ஞ பவதாகருபயாவயம்

ச்ராவிதா: நிகில க்ஷேத்ர தீர்தானாம் வைபவம் மஹத்

வேதம் ஆகமம் புராணம் ஸ்மிருதி முதலாகச் சொல்லுகின்ற சாஸ்திரங்களின் நிச்சயார்த்தம் உலகங்களை எல்லாம் பெற்ற பார்வதீநாயகனே பரம் என்று ஆராய்ந்தறிந்த பெருமையையுடைய மெய்ஞ்ஞான மகர்ஷியே! அஞ்ஞானமாகிற இருளில் ஆழ்ந்துகிடக்கின்ற அடியோங்கள்மேல் க்ருபை கூர்ந்து சிவபெருமான் வாசம் பண்ணுகிற தலங்கள் எல்லாம் அறிவில்லாத போகத்தையும், மோக்ஷத்தையும் அடையச் செய்வனவென்று அந்தத் தலங்களுடையவும், தீர்த்தங்களுடையவும் காரணத்தையும் மகிமையையும் எங்கள் மனத்துக்கிசைய அருளிச் செய்தீர்.

அப்புண்ணிய க்ஷேத்திரங்களுக்குள் காலகூடாசனக்ஷேத்திரம் என்று பெயர்பெற்ற ஒரு மிகப்பெருமை பொருந்திய சிவஸ்தலம் இருப்பதாகவும் அதினருகே அரண்யநதி (காட்டாறு) என்று பெயர்பெற்ற புண்யநதி ஓடுகிறதாகவும் அருளிச்செய்தீர் ஸ்வாமி. அப்புண்யக்ஷேத்திரத்திலுடையவும், அப்புண்ய நதியினுடையவும் மகிமையை விசேஷமாக தேவரீரிடத்தில் கேட்கிறதற்கு விரும்பி வந்திருக்கின்றோம். எங்கள் மேல் க்ருபைவைத்து கூறியருளவேணும்.

தத க்ஷேத்ரம் பவித்ரம் கஸ்மாத் காலகூடாசனாபிதம்

ப்ரோக்தா நத்யா அரண்யாக்யா கஸ்யா ஜன்மகுதஸ்தலாத்

ஸர்வமேதத் வை முனே விஸ்தராத் வக்து மர்ஹஸி

உலகத்தில் புண்ய க்ஷேத்திரங்களும் புண்யநதிகளும் அநேகம் இருக்க இந்தக் காலகூடாசன க்ஷேத்திரத்திற்கும் அரண்யநதிக்கும் மற்றுமுள்ள புண்ய க்ஷேத்திரங்களைவிட அதிக மகிமை எவ்விதம் கிடைத்தது? அப்புண்யக்ஷேத்திரமானது எக்காரணத்தினாலே காலகூடாசன க்ஷேத்திரம் என்றுபெயர்பெற்றது? அப்புண்யநதியானது எக்காரணத்தாலே அரண்யநதி என்று பெயர்பெற்றது? அப்புண்ய நதியானது

எங்கே உத்பத்தியாகிறது? இதை எல்லாம் விஸ்தாரமாக கூறியருள வேணும் என்று பிரார்த்தித்தார்கள்.

இதிப் ருஷ்டோ மஹாபாகை: முனிபிஸ்தத்வ தர்சிபி
சூத: ஸர்வார்த்த தத்வஞ்ய: வேதவேதாங்க பாரக:
தத்ஸர்வம் வத்துமாரேபே ரஹஸ்யம் பரமார்த்தம்

தத்துவார்தத்தை உள்ளபடி அறிந்துக்கொள்ளவேணுமென்று விருப்பம் கொண்டு வந்திருக்கின்ற மிக்க பாக்யவந்தர்களாகிய அம்மாமுனிவர்களால் ப்ரார்திக்கப்பட்ட சூதமகர்ஷியானவர் ஸகலமானதத்வார்த்தங்களேயும் பெரியோர்டத்தில் கேட்டறிந்தவராகையாலே மிக்க ரஹஸ்யமாய் ஒருவருக்கும் உணரலாகாத அப்புண்யக்ஷேத்திரத்தினுடைய மகிமையும், அப்புண்யநதியினுடைய மகிமையும் முறையே சொல்லத் தொடங்கினர்.

சூத உவாச

அஹோ தன்யதமாயூயம் யக்ஷேத்ரச்ரவணோத் ஸுகா:
குப்தம் விஷாசன க்ஷேத்ரம் குப்தாரண்யஸ்ரவந்த்யபி

"ஓ முனிவர்களே! நீங்கள் மிக்கபாக்யவந்தர்கள். காலகூடாசன க்ஷேத்திரமென்ற புண்யக்ஷேத்திரம் கொடிய காட்டுவழியில் இருக்கிறஏகாந்தமான ஒருசிவஸ்தலம். ஆயினும் அதின்பெருமையைக் ஒருவரும் அறியமாட்டார்கள். அந்த புண்ணியக்ஷேத்திரத்தின் பெருமையை கேட்க உங்களுக்கு இவ்வாறு அவா உண்டாயிற்றே. இதுவும் பாக்யம் தான்.

யஸ்ய ச்ரவண மாத்ரேண த்ரிவர்க: ப்ராப்யதே ந்ருபி:
யஸ்யாஸ்தரங்கபவன ஸம்ஸ்பர்சா தேவ தேஹினும்
நச்யந்தி பாதகாண்யாசு மஹாந்த்யபி நஸம்சய:

உலகத்தில் மற்றுமுள்ள புண்ய க்ஷேத்திரங்களேக் காட்டிலும் இந்த காலகூடாசன க்ஷேத்திரத்திற்கு ஓர் அற்புதமான விசேஷமுண்டு. அதாவது உலகத்திலுள்ள சிவஸ்தலங்களுக்குள் மிகப்பெருமைவாய்ந்த சிதம்பரம் தரிசிக்க முக்தியைத் தரும். காசி அங்கு இறக்க முக்தியைத் தரும். காளாத்தி பூஜிக்க முக்தியைத் தரும். இந்த காலகூடாசன புண்ய க்ஷேத்திரமோ வென்றால் அதின் மகிமையை கேட்ட உடனே இகபர போக மோக்ஷங்களே கொடுக்கும். அதாவது காலகூடாசன க்ஷேத்திரமென்று கேட்டவளவிலேயே அன்னத்தைப் பெறுவார்கள்.

காலகூடாசன க்ஷேத்திரமென்று தியானித்தவர்களே பொருளைப் பெறுவார்கள். இந்த க்ஷேத்திரத்தை தர்சித்தவர்களே இன்பகலத்தை பெறுவார்கள்.

கங்கை யமுனை முதலிய புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வதாலும் அத்தண்ணீரை சிரஸில் தெளித்துக்கொள்வதாலும் நமது தீவினைகள் எல்லாம் தீயினில் தூசாகும். அங்ஙனம் இப்புண்ய க்ஷேத்திரத்தில் ஓடுகிற அரண்யநதியில் ஸ்நானமும் செய்யவேண்டாம். அப்புண்ய தீர்த்தத்தை சிரஸில் தெளித்துக்கொள்ளவும் வேண்டாம். அப்புண்ய நதியின் அலைக்காற்று நம் உடம்பில் பட்டாலே எல்லா தீவினைகளும் விரைந்து ஓடிப்போம் என்பதில் ஸந்தேகமே இல்லை.

அத்ராகவஹம் ஸுராஸ்ஸர்வே ஸாயபாகத்ய பக்திதம்
விஷாஸனம் நமஸக்ருத்ய ஸஜுத்வாயாந்திஸவகம் பதம்

இவ்வாறு இப்புண்ய க்ஷேத்திரத்தின் மகிமையை அறிந்து முப்பத்தி முக்கோடி தேவர்களும் தினந்தோறும் ஸாயங்கால வேளையில் இப்புண்ய க்ஷேத்திரத்திற்கு வந்து காலகூடாசன பரமசிவனை தொழுது ப்ரதக்ஷணம் பண்ணி அர்ச்சனைசெய்துவிட்டு தங்கள் உலகங்களுக்குப் போவது வழக்கம்.

அத்ர க்ஷேத்மஹாபாகா: முனயோந்தர்தி மாச்ரிதா:
ஸாயம் ப்ராதக்கால கூட விஷ பூதகளம் சிவம
பூஜயந்தோ பாவயந்த: மனஸா வீதகல்மஷா:
வஸந்திச்ரத்தயஸ்ரயஸ்யாம் அரண்யாயாம் க்ருதாப்லவா:

மேலும் மிக்க பாக்யவந்தர்களாகிய பலமாமுனிவர்கள் தங்கள் தவத்தின் மகிமையினாலே ஒருவர் கண்ணிற்கும் புலப்படாமல் உதயகாலத்திலேயும் ஸாயங்காலத்திலேயும் இந்த அரண்யநதியில் ஸ்நானம் செய்துகொண்டு தங்கள் மானஸத்தீவினைகளை எல்லாம் அகற்றி காலகூடாசன பரமசிவனை தண்டனிட்டு அர்சனை செய்துகொண்டு யோகமார்க்கத்திலே தவம் செய்து வருகிறார்கள்.

யோகமார்கப் விஷ்டானாம் த்வராயா ஸித்தி தம்பதம்
யோகேக மாமாம் ஸித்திம் ப்ராப்னுவந்தி நஸம்சய:

இந்த புண்ய க்ஷேத்திரத்திலே இருந்துகொண்டு யோகமார்க்கத்திலே இழிந்து தவம்புரியும் யோகிகள் எளிதாகவே சித்தியைப்பெறுவார்கள்.

ஸித்தி உண்டாகுமோ உண்டாகாதோ என்று ஸந்தேகப்படவேண்டியதே இல்லை.

ஸோம வாரேத்ர யோதச்யாம் சுக்லாயாம் யோகிசேஷத:
ப்ரதோஷே சங்கரம் த்ருஷ்ட்வா விஷாசன ஸுராதிபம்
ஸாரூப்யம் பரமம் கத்வா வஸந்த்யத்ராதந்திகே

சுக்லபக்ஷ த்ரயோதசி திதி கூடிய திங்கள்கிழமை ப்ரதோஷகாலத்தில் இந்த புண்ய க்ஷேத்திரத்தில் எவன் காலகூட பரமசிவனை தர்சனம் செய்கின்றானோ அவன் ஸாரூப்யம் என்னும்படியான முக்தியைப் பெற்று ஞானானந்தமயமாகிய பெருமை பொருந்திய பரமசிவனருகே கைலாயத்தில் அனேக காலம் வசிப்பர்.

க்ருஷ்ணாயாம் தந்த்ரயோதஸ்யாம் மந்தவாரோ யதாபவேத்
ததாப்ரதோஷவேளாயாம் விஷாசன மஹேசிது
தர்சனம் பூஜனம் த்யானம் ஏகைகம் துர்லபம் ந்ருணாம்
ஸாலோக்யம் சைவ ஸாமீப்யம் ஸாரூப்யஞ்ச க்ரமாத்பலம்
த்ருதீயம் லபேத மோக்ஷதம் ந ஸம்சய:

மேலும் இந்த புண்ய க்ஷேத்திரத்திலே இருந்து க்ருஷ்ணபக்ஷ த்ரயோதசி கூடிய சனிக்கிழமை ப்ரதோஷகாலத்தில் காலகூடாசன சிவபெருமானை தர்சனம் செய்கின்றானோ அவன் ஸாலோக்யம் என்னும்படியான முக்தியைப் பெறுவன். எவன் அர்ச்சனை செய்கின்றானோ அவன் ஸாமீப்யம் என்னும்படியான முக்தியைப் பெறுவன். எவன் யோக மார்க்கத்திலே இருந்து தியானம் செய்கின்றானோ அவன் ஸாரூப்யம் சாயுஜ்யம் என்னும்படியான முக்திகளை பெறுவான். இவைகளுக்குள் அப் புண்ய க்ஷேத்திரத்தில் இருந்து பரமசிவனை தியானம் பண்ணும்படி நேரிடுவது மிக அரிது. அங்ஙனம் தியானம் செய்யும்படி நேரிட்டால் பாசவினைகளை வென்று பரமசிவன் திருவடிகளைச் சேர்ந்து பேரின்பமுற்று வாழ்ந்திருப்பார்கள் என்பதில் ஸந்தேகமே இல்லை.

அத்ரேதி ஹாசம் வக்ஷ்யாமி ச்ருவத்தகநாசனம்

பிரமஹத்தி. திரவ்யசோரம். கள்ளுண்டல், குருபத்னியை புணர்தல், முதலிய பாபங்களெல்லாம் இப் புண்ய க்ஷேத்திரத்தின் மகிமையை கேட்டவர்களுக்குத் தீரும் என்பதற்கு உதாரணமாக ஓர் இதிகாஸம் சொல்லுகிறேன் கேளுங்கள்.

சந்திர காந்தபிதே க்ராமே தண்டகாரண்ய மத்யகே
த்விஜாதிஸ் ஸோமகோ நாம துராசாரோ துராக்ரஹ:
க்ரூரா ஸங்க: ரதோ நித்யம் நிஷித்த த்ரவ்யபக்ஷக
ஆம்ச்ராத்தம் ஸதாக்ருண்வந் நித்யம் ஜீவனமாசரத்

தண்டகாரண்யத்தில் சந்திரகாந்தம் என்னும்படியான சிறிய கிராமம் ஒன்றிருக்கின்றது. அந்த கிராமத்தில் ஸோமகன் என்னும்படியான ஒரு பிராமணன் இருந்தான். அவன் மிக குரூரமான குணமுடையவன். பிராமண வர்ணத்திற்கு செய்யவேண்டிய ஸந்தியாவந்தனம் முதலிய நித்ய கர்மங்களில் ஒன்றையும் செய்கிறதில்லை. அவன் எப்போதும் பிறர்க்கு உபத்திரவமே செய்வது வழக்கம். ஜந்துக்களை ஹிம்சித்து மாமிசத்தை சாப்பிட்டு வயிற்றை வளர்ப்பது, பொய் சொல்லுகிறது. மோசம் செய்கிறது, ஆம்சிராத்தம் வாங்குகிறது, பரஸ்திரிகளை அபஹரித்துப்போவது, முதலிய கொடிய நடத்தைகளை உடையவனாய் ஜீவித்துவந்தான்.

ஏவம் பஹுதிதே காலே கதே ஸ்வபநதூர்ஜித:
தினே தினே க்ஷீணதனு ஸக்ருமிவ்ரணபீடித:
விரூபோ விகலாங்கச்ச ம்ருத: காலவசாத்தத:

இங்ஙனம் வெகுகாலம் சென்றபின்னர் இவன்செய்கின்ற தீயவினைப் பயனால் பல துன்பங்களுக்கு இவ்வுலகிலேயே ஆளாகி கொடிய ரோகமுண்டாய் அதனால் உடம்புநாளுக்குநாள் மெலிந்துபோய் புழுக்களும் தோன்றி வெளிவதற்கு இடமாகி விகாரமான ரூபத்தை உடையவனாய் உடம்பெல்லாம் வெடித்துப்போய் நடக்கவும்கூட சக்தியற்றவனாய் பசி தாகம் பிணி மூப்பு இவைகளால் மிகவும் தகர்ப்புண்டு இறக்கும் தருணம் நேர்ந்து இறந்துவிட்டான்.

நரகே யாதனா புக்த்வா சிரத்கோரதரா ப்ருசம்
கர்ம சேஷவசாத் ப்ரம்மராக்ஷஸோ தண்டகாவனே
பூத்வா நிராஹாரோ வ்யசரத் க்ஷுத்தருஷார்தித

அதன்மேல் ரௌரவம் முதலிய வெந்நிரயங்களில் விழுந்து அவற்றில் பலவகைப்பட்ட யமவேதனைகளைப் பலவாறாக அனுபவித்துவிட்டு மீண்டும் இவ்வுலகில் பிறந்து தண்டகாரண்யத்தில் பிரம்மராக்ஷஸ சரீரத்தை அடைந்து பசிதாகமும் முதலியவைகளால் வருத்தமடைந்து கொடிய காட்டில் சுற்றித் திரிந்துவந்தான்.

காஹாரோலயேதேக்வாபி ந பாதும் ஜலமப்யஹோ

எங்குச் சுற்றித் திரிந்தாலும் ஆகாரம் கொஞ்சம்கூட கிடைக்காமலும் தாகத்தை தீர்த்துக்கொள்ள கொஞ்சம் ஜலமும் கிடைக்காமலும் மிக வருத்தத்துடன் அக்காடு முழுமையும் சுற்றித் திரிந்துக்கொண்டிருந்தான்.

யத்ரக் வாபிஸ் ரோதேச பாதும் கச்சதி சேத் ஜலம்
தஸ்ய சக்ஷு பதாதிதம் தத்க்ஷணே பாப வைபவாத்

காட்டில் எங்கேயாவது குளங்களிலோ கிணறுகளிலோ ஜலத்தைக் கண்டு அதை எடுத்துக் குடிக்கலாம் என்று எண்ணி அணுகிச் சென்றால் கொடிய பாபியான இவன் கண்ணுக்கு புலப்படாமல் அஜ்ஜலம் மறைந்து போய்விடும்

ஏவம் வர்ஷகணே தீதே கதாசன யத்ருச்சயா
ஆயாந்தம் கும்பஜன்மானம் முனிமயோக விதாம்வரம்
பஸ்மத்ரி புண்டவிலஸத்தனும் ருத்ராக்ஷ பூஷிதம்
ருத்ஷ்ட்வாத்ருஷ்டதுரோ பக்ஷமாகாம்க்ஷ ப்ராத்ரவத்சனே

இங்ஙனம் அநேக வருஷங்கள் சென்றல்லவாரே ஒரு நாள் தெய்விகமாக பஸ்மம், ருத்திராக்ஷம், த்ரிபுண்டரம் இவைகளைத் தரித்துக்கொண்டு தவமே ஓர் உருவம் கொண்டதோ வென விளங்கிவரும் வருவதுபோன்ற அகத்திய மாமுனிவரைக் கண்டு பசியின் கொடுமையினால் அவரை அடித்துக் கொன்று தின்று விடவேண்டுமென்று ஆவல் கொண்டு ஓரே பாய்ச்சலாய் எதிர்த்து ஓடிவந்தான்.

தஸ்ய ஸான்னித்ய மாத்ரேண க்ஷுத்ருண் மாங்கிய முபாகதா
ப்ராம்ஜலி தூரத தஸ்தென அதிவ வினமாங்கிதரு

ஆனால் அம் மாமுனிவரின் தவத்தின் மகிமையினால் அவ்வண்ணம் நடக்கவில்லை. ஏனென்றால் அம் மாமுனிவரை அணுகிச் சென்றவளவிலே வாரே இவன் பசியும் தணிந்து பசியினால் உண்டான வருத்தமெல்லாம் நீங்கி அவரை அடித்துக் கொன்று தின்று விடவேண்டுமென்கிற எண்ணமெல்லாம் மாறிப்போய் அவரைப் பார்த்து தண்டனிட்டு வணக்கமாய் கை கூப்பிக்கொண்டு தூரத்திலேயே நின்றுக் கொண்டிருந்தான்.

ஸோயம் முனிவரோத் த்ருஷ்ட்வா கோரரூபம் நிசாசரம்
கோவஸீதிக்ருபயா ப்ருச்சத் கோனதம் ரூபமீத்ருசம்
ப்ராப்தம் கோரதாம் நீசம் இதிப்ருஷ்டோ நிசசர:
முனினா காந்த ரூபேண ப்ரோவாசேதம் ப்ரஹ்ருஷ்டதீ:

அகத்தியமாமுனிவர் இதைக்கண்டு மிகவும் விபரீதமடைந்து விகாரமாயும் பயங்கரமுமான உருவத்தை உடைய பிரம்ம ராக்ஷஸனைப் பார்த்து க்ருபை கூர்ந்து "ஓ பிரம்ம ராக்ஷஸனே நீயார்? எக் காரணத்தினாலே இவ்விதமான விகாரமாயும் பயங்கரமுமான ரூபத்தை அடைந்தாய் என்று கேட்டார். இதைக்கேட்டு அந்த பிரம்மராக்ஷஸன் மிக்க ஸந்தோஷமடைந்து வாரீர் முனிசிரேஷ்டரே சொல்லுகிறேன் கேளும்

ஜானேர்யஹம் ப்ரம்ஹராக்ஷ இதி கேனதமீத்ருசம்
ஜன்ம பாபேன ஸம்ப்ராப்தம் இதிநாஹம் நசக்னுவே
அஹர் த்வா மசிதும் க்ஷீப்ரம் பிபாஸோதாக்ஷதாகபம்
த்வக்த்ருஷ்டி மாத்ராத் சந்தேர மே நஷ்டைக்ஷணேனக்ஷிதித்
அதோமாம் க்ருபயா ப்ரம்மன் ராக்ஷஸதயாநிதே (ந்தே

நான் ஒரு ப்ரம்ஹ ராக்ஷஸன் என்று மட்டும் தெரிந்துக் கொண்டிருக்கிறேனே தவிர நான் யார் என்றும் எக்காரத்தினாலே இந்த பாப ஜன்மம் எனக்கு உண்டாயிற்று என்றும் தெரிந்துகொள்ள என்னால்முடியவில்லை. நான் ஒரு ப்ரம்ம ராக்ஷஸனாய் இத்தண்டகாரண்யத்தில் வெகுகாலமாக பசியினாலும், தாகத்தினாலும், மிக வருத்தமடைந்து நாவுலர்ந்துப்போய் இராப்பகல் சுற்றித்திரிந்துகொண்டு இருக்கிறேன். எங்கு சுற்றித்திரிந்து பார்த்தாலும், ஆகாரமே கிடைக்கவில்லை. நா வறட்சியைப்போக்க தண்ணீரும் கிடைக்கவில்லை. கொடும் பசியினால் வருந்தி இக்கொடிய காட்டுவழியில் தேவரைக்கண்டு அடித்துக்கொன்று தின்றுவிட ஆவல்கொண்டு ஒரே ஓட்டமாய் ஓடிவந்தேன்.

"ஸ்வாமி! என்னமாயமோ தெரியவில்லை. தேவரீருடைய கடாக்ஷம் அடியேன் மீது விழுந்தவுடனே என்னுடைய பசியும் தாகமும் எங்கே போ மாயமாய் பறந்துபோய்விட்டன. கருணைமிக்கவரான ஓ மா முனிவரே! கொடிய தீவினையேனை அடியேனை இக்கொடிய பாப ஜன்மத்திலிருந்தும் காப்பாற்ற வேணும்,, என்று கெஞ்சிக் கேட்டேன்

இதி ஸம்ப்ரார்த்திதோ தஸ்ய: ஸ்வயம் த்யானமேவ சத
பூர்வஜன்மக்ருதாத் பாபாத் ப்ரபதம் தேஹருபமித்ருசப்

இங்ஙனம் அந்த பிரம்ம ராக்ஷஸ்விஞலே கெஞ்சி கேழ்க்கப்பட்ட அகஸ்திய மாமுனிவர் பரிதாபமான அம்மொழிகளைக்கேட்டு இறக்கம் கொண்டு ஞானதிருஷ்டியிஞலே அவனுடைய வரலாற்றை தெரிந்துக் கொண்டு அடே பிரம்மராக்ஷஸ்ஸே! நீ பயப்படவேண்டாம். உன்னுடைய வரலாற்றை நான் அறிந்துக்கொண்டிருக்கிறேன். நீ முன் ஜன்மத்தில் செய்த மாளாத தீவினைகளின் பயஞக இக்கொடிய பாப ஜன்மத்தை அடைந்து மிக துன்பங்களை அனுபவிக்கின்ருய்

தத்ர ஜன்மனி விப்ராய சிவபக்தாய ஜாதுசித்
ப்ராந்தாய தபன ஜ்யோதிர்ப்பாலிடாய ஸ்வமேயுஷே
நிவாஸம்த ரஸஹித ஸக்ஞானஸ்ய வைபவாத்
ப்ராப்தோ நுஜைத்வயா ஸங்க: மயோ கோரதரேவனே

தண்டகாவனத்தில் சந்திரகாந்தம் என்னும்படியான கிராமமொன்றுண்டு. நீ முன் ஜன்மத்தில் அந்த கிராமத்தில் ஸோமகன் என்னும்படியான பிராமணனாய் பிறந்திருந்தாய். அப்போது பிராம்மண வர்ணத்தில் பிறந்தும் பிராம்மண வர்ணத்திற்குரிய நித்யகர்மங்களைச் செய்யாமல் தீயகுணமுடையவனாய் மாளாததீவினைகள் செய்துபோந்தாய். அத்தீவினைகளின் பயனுக அஜ்ஜன்மத்திலே பலதுன்பங்களை அனுபவித்து கொடிய நோயினுல் இறந்து யமதண்டனைகளுக்கு உட்பட்டு மீளவும் இக்கொடிய பாபஜன்மத்தை அடைந்து பலவாறு துன்பப்படுகின்ருய். நீ செய்த தீவினைகளைப் பார்த்தால் அம்மாதிரி எத்தனையோபாபயோனிகளில் பிறந்து அனுபவித்துப்போந்தாலும் மாளாததுபோல் தோன்றுகிறது.

ஆனுலும் நீ பயப்படவேண்டியதில்லை. உனக்கு நல்லகாலம் நெருங்கியது. முன் ஜன்மத்தில் நீ ஒரு புண்ய காரியம் செய்திருக்கின்ருய். அதாவது ஒருநாள் நடுப்பகலில் இத் தண்டகாவனத்தில் மின்னலையொத்த திருமேனியை உடையவரும், அழகிய கொன்றைமாலையைத் தரித்த சடைமுடியை உடையவருமாகிய சிவபெருமான் திருவடிகளுக் கன்பனுகிய ஒரு மஹான் வெய்யலின் கொடுமையினுல் அடிகொதித்து தரையில் கால் பாவமாட்டாமல் தத்தளித்து நாவுலர்ந்தும், தலை சாய்ந்தும், இடறிக் கீழே விழுவதும், துள்ளி எழுந்தோடுவதுமாக இக்கொடிய காட்டுவழியில் வழிநடந்து சென்ருன், அச்சமயத்தில் நீ அதைக் கண்டு மனமிறங்கி அம்மஹானுக்கு இடம் கொடுத்து தண்ணீரளித்து விடாயைத் தீர்த்து, மாவு, மோர், முதலியவைகளை அமுது

செய்துவைத்து உபசரித்து, அவரைக் காப்பாற்றினாய். அங்ஙனம் பரம பக்தனாகிய அடியானுக்கு, நீசெய்த பணிவிடைகளால் சிவபெருமான் திருவுள்ளம் உகந்து (நீசெய்த பல தீ வினைகளைக் கருதாது உன்னை மன்னித்து பரிபூர்ணகடாக்ஷம் செய்தருளினார் அடியார்க்கு அன்பனாகி அடியார்களின் குற்றங்களை பொருக்கும் தன்மையை உடைய பரம' சிவன் திருவருளினால்தான் இக்கொடிய காட்டு வழியில் என்னைச்சந் திக்கும்படி நேரிட்டது. இல்லாவிடில் இக் கொடிய காட்டு வழியில் இக் கொடிய வேளையில் இக் கொடிய பாப ஜன்மத்தை உடைய நீ என்னை சந்திக்க ஹேது உண்டோ?

ஸஹை வாகச்ச விப்ரேந்த்ர விஷாசி க்ஷேத்ரமுத்தமம்
தத் க்ஷேத்ர கமனாதேவ பாதகம் நச்யதித்ருவம்

சிவபெருமானடியார்க்கு அன்புடன் பணிவிடைகள் செய்த பாமனே நான் காலகூடாசன க்ஷேத்திரம் என்கிற புண்ணியக்ஷேத்திரத்திற்குப் போகின்றேன். என்னுடன் கூடவா. அந்த புண்ணிய க்ஷேத்திரத்தை தர்சனம் செய்வதினாலேயே உன்னுடைய பாபங்களெல்லாம் நசித்துப் போய்விடும். என்றார்.

இத்யுக்த ஸஹஸா ப்ரஹ்ம ராக்ஷஸோ ... முனிந்த் : ... க்ஷேத்ரம் ... ஷஸா

இம்மொழிகளைக் கேட்டு பிரம்ம ராக்ஷஸன் அதிக ஆனந்தமடைந்து அந்த அகத்திய மாமுனிவரைப் பின் தொடர்ந்து சென்றான். அகத்திய மாமுனிவரும் அந்த பிரம்மராக்ஷஸனைக் கூட்டிக்கொண்டு காலகூடா சன புண்ய க்ஷேத்திரத்திற்குச் சென்றார்.

ஸம்ப்ராப்தோ ... வசத: ததா க்ருஷ்ணத்ரயோதசீ
பந்தவாராயுதா ... புக்தி முக்தி பலப்ரதா

தெய்வச் செயலாக அன்றபதினம் பேரின்பவீட்டைத் தர வல்ல க்ருஷ்ணபக்ஷ த்ரயோதசி கூடிய சனிக்கிழமையாக நேர்ந்திருந்தது.

தஸ்யா மரண்ய வாஹின்யாம் தோயமயீவர: ஸுதி:
ஸங்கல்ப பூர்வக ப்ருசோ ... வாசமர்ஷணி
ஸ்நாத்வா ஸந்தர்ப்பயித்வத தேவாந் பித்ருகணாந் ...

சவநெறியில் பன்னாள் வழுவாது நின்று ஸத்குணத் துதிசெய்து பூதவுடலை இம்மண்ணிடை நீத்து விண்ணுலகிற் தேவர் குழாங்களில்

தர்சனு தேவ ஸம்த்யக்த ப்ரம்ம ராக்ஷஸ விக்ரஹ
ப்ராப்த திவ்ய தனுஸ்ஸேயம் துஷ்டாவ பஹுபிஸ்தவை

காலகூடாசன க்ஷேத்திரத்திலே காலகூடாசன சிவபெருமானை தர்சனம் செய்த தத்க்ஷணமே தீவினைகள் எல்லாம் தீர்ந்து அந்த பிரம்ம சரீரம் போய் திவ்யமான சரீரத்தை அடைந்து திவ்யமான ஆடைகளையும் திவ்யமான ஆபரணங்களையும் புஷ்ப மாலைகளையும் அணிந்து தேவேந்திரனேடொத்த மேனியாய சிவபெருமானை துதிசெய்யத் தொடங்கினன்.

நமஸ்தே தேவேச நமஸ்தே கருணாநித
த்ரயஸேத்புஸ்த ஸர்வான் த்ரஸ்தான்கோரவிஷாக்னித
நமஸ்தே த்ருஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரவாரிணே
விஷாந்தவ்யாப்தி ஸம்தஸ்த சிவாஸ்ப்ருஷ்டகளாயச
ம்ருகண்டு ஜனுஷே தீர்கமாயுர்விதராதஸதே
மாண்டகாயித காலகாலாது சம்யோ நமோநம:

யாவையும் படைப்பாய் போற்றி யாவையும் துடைப்பாய் போற்றி யாவையும் அளந்தாய் போற்றி! யாவையும் புணர்ந்தாய் போற்றி! நாககங்கணு போற்றி! பக்துடைய அடியார்க்கு எளியனுய் நின்றபரமனே போற்றி! அமுதம் கொள்ள அலைகடலைக்கடைந்தபோது தோன்றிய காலகூட விஷத்தைக்கண்டு இமையவர் நடுங்க பிரமன் துடிக்க திருமால் மயங்க அவ்விஷத்தை உண்டு உலகத்தை காற்றருளிய வீராதி வீரனே போற்றி ! தன்னையும் பேணுத பிறரைக்காற்றருள வேணுமென்றும் கருணையால் காலகூட விஷத்தை அமுதுசெய்த போது விடத்தை விழுங்கியதால் என்னவருகிறதோ என்று பயந்து உமாதேவி கண்டத்தை அழுத்த அதினுல் கருநிறத்திய கந்தரச்சுந்திர கடவுள் என்ற திருநாமம் பெற்ற பரமோதாரனே போற்றி ! ம்ருகண்டு மாமுனிவரின் புதல்வனுகிய மார்கண்டேயனுக்கு நீண்ட ஆயுளை தந்தருளிய சந்திரசேகரனே போற்றி! என்று பலவாறு தோத்திரங்கள் செய்து பெருகிய அன்பு இரண்டு கண்ணின் வழியிலும் வருவதுபோல ஆனந்தக் கண்ணீரொழுக ஆனந்தக்கடலில் முழுகினுன்.

இதிஸ்துதோ திவ்யவபுர்தன்
பூர்வஜன்மக்ருதவஹ ப்ராணி பத்ய முாதனு

ப்ரஸன்ன சேதாஸ்தமு வாச தேவ:
விஷாசனோ வாசமீமாம் ப்ரஸன்னும்

இங்ஙனம் போற்றி போற்றி என்று பாடி பரமன் சேவடிகள் தன் சிரசின் மேல்பட விழுந்து பலதடவை சேவித்து எழுந்து வலம் செய்யும் திவ்யமான சரீரத்தை உடைய பிரம்ம ராக்ஷஸனாலே துதிக்கப்பட்டு சிவபெருமான் அவன்மீது இன்னருள் சுரந்து திருவாய்மலர்ந்தருளினார்.

ஸ்ரீ சிவ உவாச

போபோ புருஷசார்தூல மத்தர்சன விபாவஸா:
பாதகைக: பலா லானும் பாபம் பஸமாகரோத்க்ஷணாத்

வெயிலின் கொடுமையினால் தத்தளித்து மிக துன்பமுற்ற என் பக்தனுக்கு பேருதவி செய்த மகாபுருஷனே! நீ செய்த பேருதவிக்கு ஓர் கைமாறு காணேனில்லேன். இந்தத் தலக்ஷேத்திரத்தில் இந்த பிரதோஷ வேளையில் என்னை தர்சனம் செய்த மகிமையினால் பாதகங்கள் மகா பாதகங்கள், உபபாதகங்கள் என்ற பலவகைப்பட்ட உன்னுடைய அநேககோடிக் கணக்கான பாபங்கள் எல்லாம் கழிந்துபோயின.

ஸாலோக்ய முக்திஸ்தே தத்தா க்ருபாபூர்ண ஹ்ருதாமயா
கத்வா கைலாஸ மதுனு மமாந்திக சிரோபவ

மனமுகந்து உன்னை பரிபூர்ணமாக கடாக்ஷித்துவிட்டேன். இனி பயப்படவேண்டியதில்லை. ஸாலோக்யம் என்னும்படியான முக்தியைத் தந்தோம். இக்கணமே கைலாயமென்ற திருமலைக்குச் சென்று அங்கே என்னுடன் பேரின்பமுற்று வீற்றிருப்பாயாக.

அத்யைவமுனினானேன குருணானுமதோபவான்
யோகினாமபி துஷ்ப்ராபே வஸமேஸ்படிகாசலே

காலதாமதம் வேண்டாம். இப்பொழுதே உன்னுடைய அஞ்ஞான மாகிர இருளை கடத்தி நல்வழி காட்டியருளிய மெய்ஞான மகர்ஷியாகிய அகத்திய மாமுனிவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அநேக காலம் பல துன்பங்களைக்கடந்து பலநியமங்களுடன் தவம் செய்து சித்தி பெற்ற மகாயோகிகளாலும் சுலபமாய் அடைய அரிதான என்னுடைய வாஸ ஸ்தலமாகிய கைலாயமலைக்குப் போய் சேர்வாயாக,

கைலாஸவாசம் ஸஹஸ்ரம் பரிவங்முக்தி: க்ரமேணவை

இங்ஙனம் ஸாலோக்யம் என்கிற முக்தியைப் பெற்று என்னுடன் கைலாய மலையில் அநேக காலம் இருந்து பிறகு க்ரமமாக ஸாமீப்யம் என்கிற முக்தியையும், பின்பு ஸாரூப்யம் என்னும்படியான முக்தியையும் பெற்று பேரின்பமிடு பெறுவாயாக என்றார்.

இத்யுக்த: புருஷ்ஸோத ப்ரணம்யகலசோத்பவம்
ஸ்துத்வா பஹுவிதைஸ் தோத்ரை: ஸம்ப்ராப்பானுமதிம்தத
கைலாஸமகமத் சம்போ: ஆவாஸ ரஜதாசலம்

இங்ஙனம் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிப் பெருங்கருணை நிறம்பி, திருவருள் செய்ய பிரம்மராக்ஷஸன் புளகாங்கிதனாய் முடிமேல் கைகுவித்து வணங்கி எழுந்து கண்ணீர் ததும்ப, பலமுறை துதித்து, ஆனந்தக் கூத்தாடி காருண்யமே ஓர் உருவம் கொண்டதுபோல் நிற்ற அகத்தியமாமுனிவரைப் பார்த்துப் தண்டனிட்டு வாதாபி வில்வலனைக் கொன்ற தருமஸ்வரூபியாய் விந்தியகிரியை யடக்கின தவமலையே அலை கடலைக்குடித்த கருணைமங்கடலே. அருமையான முத்தமிழைப்பொழிந்தமேகமே! தராசுமுனைபோல் தென்திசையைச் சமமாகச்செய்த ஆதாரமே! வல்வினையேனுக்கு அருள்செய்த மாயனே!ஸ்வாமீ என்னையாட்கொண்டமணியே எனக்கு இகபரங்களுக்கும் காரணமாகி என்னுடைய துன்பப் பிறவியான நோய்க்கு அரிய மருந்தானீர். பூதகடலை தவிர்த்தேன். ஐம்புலன்களை வென்றேன். தீவினைகளைத் துறந்தேன். பரமசிவனடிகளைக் கிட்டப்பெற்றேன். முக்தியைப் பெற்றேன் என்று பலவாறு வேண்டிக்கொண்டு அவரிடம் விடைபெற்று சிவபெருமான் நிதயவாசம் பண்ணும் கைலாசத்தை யடைந்தான்.

தத்க்ஷேத்ரப்ராப்தி மாத்ரேண நிஸ்வஸீமானன்தபாகயம்
வஸங்சிரம் தயாம்போதி சிவானுக்ரஹ வைபவாத்
ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் சாபி பூருஷ:

இப்படி காலகூடாசன புண்ய க்ஷேத்திரத்திற்கு சென்ற மாத்திரத்திலேயே அப்புண்ய தவத்தின் மகிமையினால் எத்தனைகாலம் அனுபவித்துப் போந்தாலும் மாளாத்தீவினைகளை மாய்த்து சிவபெருமான்சேவடி சென்னிப்பூவாகி முக்திபெற்று, பேரின்பக்கடலிலாழ்ந்து ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாயுஜ்யம் என்கிற முக்திகளை சிவபெருமானருளினாலே பெற்று வாழ்ந்து போந்தான்.

அகஸ்தியோபி முனிச்ரேஷ்டம் பரம விஸ்மய மாகத
தத்ரைவ வஸதிஸ்மாஸௌ சிவபூஜன தத்பரம்

இதை எல்லாம் கண்ட அர்மாமுனிவர் ஸந்தோஷம் மிக்க அதிசயக் கடலிலே மூழ்கி மெய்ஞான ஸ்வரூபமாய் தன்னையும் மறந்து ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்று பின்பு தேனும் பாலும் கற்கண்டும் அமுதமாகத் தித்தித்து உள்ளமும் உருக்க உள்ளொளியைத் தெரிந்து ஆனந்தமான ஆறு நிரம்பக்கரை புறத்தே கசிவது போல நீங்காத ஞானவாக்கு ஸரஸ்வதி நாவிலே வந்து குதிகொள்ள கும்பிட்ட கைகளும் நடுங்கிய தலையும் நீர்த்தளும்ப அருகின்ற கண்களும் புளகாங்கிதமான தேகமும் நாக்குத் தழதழத்த அன்புள்ள வார்த்தைகளுமாக வணங்கித் துதிப்பவராய் சிவபெருமான் திருவடிகளின்மேலே ஆனந்தக் கண்ணீராட்டிக் சொற்களாகிய மலர்களை அணிந்து தர்போதமாகிய நல்ல அமுதத்தை ஊட்டி தர்ப ஞான ஓமாக்னியை மூட்டிச் சிவபூஜை செயவதன்மேல் முயர்ச்சியுடையவராய் அக்காலகூடாசன சிவபெருமான் சந்நிதியிலேயே காலத்தைக் கழித்துப் போந்தார்.

இதிஹே முனி சார்தூலா க்ஷிதம் க்ஷேத்ர வைபவ
அரண்யாக்ய நதி தீர்த்த வைபவம் வச்மீ ஸாம்ப்ரதம
ச்ருணுதா வஹிதாயூயம் மனஸ நிச்சிதேனவை

கலைவீசு மதிச்சடையோன் பரமபக்தர்களாகிய மாமுனிவர்காள்! சிரேஷ்டர்களா! இந்த க்ஷேத்திரத்தின் மகிமையை இந்த புண்ணிய க்ஷேத்திரத்திர்க்கு நிகரான தலங்கள் எந்த லோகங்களிலு மில்லை. அதர்க்கு அஸ்வே ஒப்பாரம். ஆதலால் இந்த புண்ணிய தலத்தை விட்டு வேறு தலங்களில் சென்று தவ விரதங்கள் செய்பவர் கையில் கிடந்த டால்சோற்றை விட்டு புறங்கை நக்குகின்றவர்களை ஒப்பாவார். ஆதலால் இந்த புண்யத்தலத்தின் மகிமையை சொல்ல வல்லவர் யாவர் ஒருவருமில்லை. இது மிக்க ரகஸ்யமானது. இந்த புண்ய க்ஷேத்திரத்தில் காலகூடாசன சிவபெருமானை காலை மாலை, யுச்சி, யர்த்தசாமம் ஆகிய காலங்களெல்லாம் வணங்கித் துதித்து பூசிக்கிற அன்பரான பரிசுத்த சீலர்கள் சஞ்சித பாபங்களெல்லாம் தீர்ந்து நிர்மலசித்தராய் ஐஸ்வர்யமும் பெருக. பேரானந்தத்தில் மூழ்கி ஆணவகாமிய மாயை களை நீக்கி பாமகிவனுடைய திருவடி நிழலில் வாழ்வார்.

ஆக தர்மஸ்வரூபியாகிய இப் புண்ய க்ஷேத்திரத்தின் திருநாமத்தை காதால் கேட்டாலும் பத்து பிறவிகளில் செய்த பாவங்கள் போம் நினைத்தால் நூறு பிறவிகளில்ச் செய்த பாவநோய் நீங்கும். அப்புண்ய க்ஷேத்திரத்திற்கு புறப்பட்டுப் போவோம் என்று வீட்டினின்றும் வெளியே வந்தால் ஆயிரம் பிறவிகளில்ச் செய்த தீராத பாவங்களெல்லாம் தீரும் அப்பெருமானை தர்சித்தவர்கள் ஆயிரம் அஸ்வமேத யாக பலத்தை பெறுவார்கள். இவ்வாறு தலம், தீர்த்தம், மூர்த்தி என்னும் மூன்றில் முன்னர் தல மான்மியத்தை சொன்னேன். இனி அந்த புண்ய க்ஷேத்திரத்தில் ஓடுகிற அரண்யநதி என்கிற புண்யதீர்த்தத்தின் மகிமையைச் சொல்லுகிறேன். ஞாபகமாய் கேளுங்கள். “ என்று சூத மகா முனிவர் சொல்லி முடிக்கிறார் முதல் அத்தியாயத்திலே.

ஸ்கந்த புராணம் சிவரகஸ்ய காண்டம் உத்தர பாகத்தில்
காலகூடாசன க்ஷேத்திர மகாத்மியம் சொல்லுகிற
முதல் அத்தியாயம் முற்றிற்று.

உ

ஸ்கந்தபுராணே சிவரகஸ்ய காண்டம் உத்திரபாகம்
அரண்யநதி மாகாத்மியம்

## இரண்டாவது அத்தியாயம்.

சூத உவாச.

அஸ்யைவ க்ஷேத்ரவர்யஸ்ய ப்ரதீச்யாய் திசி யோஜனைம்
வம்சபிஸ்ஸம்யு தேதே சே ஹயஸ்திப்ரம் ஹகிரிர் மஹான்

அக் காலகூடாசன புண்ய க்ஷேத்திரத்தினருகில் பெருகி ஓடுகிற அரண்யநதி என்கிற புண்யதீர்த்தத்தின் மாகாத்மியத்தை கேட்டறிய வேண்டுமென்று மிக்க ஆவல்கொண்டு வந்திருக்கும் பரமசிவனடியார்களான மாமுனிவர்காள்! அதின் மாகாத்மியத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

இந்த காலகூடாசன புண்ய க்ஷேத்திரத்திற்கு மேற்கே ஐந்து யோஜனை தூரத்தில் பிரம்மகிரி என்று பிரசித்தமான பெரிய மலை ஒன்று உண்டு.

# சிவக்ஷேத்திர மகாத்மியம்.

பஹு ச்ருங்க பூரிவன குஹாக்ரஹ விராஜித
ஸ்ரோதஸ்வினிதை ஜுஷ்ட பஹு புஷ்ப பலத்ரும
பஹுபா தோமஹாஸானு ஸித்த கந்தர்வ ஸேவித
காமஸேந்த்ர கணாகீர்ண பஹுச்வா பதலங்குல

அம்மலையில், நான்மறைகளும் ஓதியவண்ணம் தவநெறியில் குறைவு படாமல் உலகத்தை எல்லாம் உண்டுமிழ்ந்து காற்றருளிய கருணாநிதியான பரஞ்சுடரை ஹிருதயாரவிந்தத்தில் பதியவைத்து அன்புடன் யோகம் செய்ய இழிந்த யோகிகளுக்கு ஏகாந்தமான பல சிகரங்களும் வேத வேள்விக்குரியதான பலமரங்கள், தர்ப்பைகள், ஸமித்துக்கள், இவைகளை உடைய பல காடுகளும், சுழல்காற்று, காட்டுத்தீ, இடி மின்னல் இவைகளுக்கு அஞ்சாமல் வாசம் பண்ணத்தகுதியான மாளிகைகள் போன்ற பல குகைகளும், அதினருகே பெரும் சுடர் சோதி உருவாகிநின்ற பரந்தாமனது சிவந்த திருக்கண்மலர்களுக்கு ஒருவாறு ஒப்பாகச் சொல்லப்படும் செந்தாமரை மலர் நறு நாற்றம் வீசும் தாமரைப்பொய்கைகளும், செங்கழுநீர் பொய்கைகளும், உணவிற்கு யோக்யமான காய்கனி வர்க்கங்களும் மலிந்துள்ளன.

நற்கர்மானுஷ்டானத்தால் சுவர்கபதவியையும், மோக்ஷபதவியையும் மாந்தர்க்கு எளிதில் அடைவிப்பது அம்மலைஎன்று சித்தர்கள் கந்தர்வர்கள், வித்தியாதரர்கள், பிரம்மரிஷிகள், தேவரிஷிகள், இனமினமாய் வந்து கூடிக்களித்து தவம் புரிபவர்கள். மேலும் அம்மலையில் ஸ்தலமகிமையினால் பக்ஷிகள், மிருகங்கள் எல்லாம் பகையை நீங்கி அன்புகொண்டு வாழ்ந்து வந்தன.

மேலும் அம்மலையில் நானுபக்கமும் நல்லோர் பலர் தவம்புரிந்து வாழ்ந்து வந்தார்கள். அதனால் "நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை, என்னும் ஆன்றோர் அறவுரைப்படி பருவமழை காலந்தோறும் அம்மலையில் பெய்துகொண்டே இருக்கும். அதனால் மலைகளில் நீர் ஊற்றுக்கள் பெருகிக்கொண்டிருக்கும். அதனால் தவம்புரியும் மாந்தர்கள் பூ, காய், கனி முதலிய பண்டங்கள் வேண்டியவரையில் குறைவில்லாமல் நிறையப்பெற்று இன்புற்று வாழ்ந்து வந்தார்கள்.

தத்ர ப்ரம்மா சுராதீச ஸரஸ்வத்யா ஸ்வபார்யயா
ராஜஹம்ஸாளி ஸம்யுக்த மாருஹ்ய ஸயந்தனோத்தமம்

ஸார்தம் தேவைர் திவ்யமுனி ஸங்கைச்சக்ரது முந்தமம்
மாஹேச்வர சிவப்ரீதி சிஷ்ர்ஷாப் ரேரிதஸ்த்வயம்
விதாதும் தத்ரதத்ராலெய அடித்வேமக் நகோத்தமம்
ஸம்ப்ராப்ய பரமம் தோஷம் அகாஹத சதுர்முகஹ

முப்பத்துமுக்கோடி தேவர்களையும் படைத்து நான்மறை ஓதிவைத்த நான்முகக் கடவுள், செவ்வயான சிவந்தசடையிலே பிறையை முடித்த திருமலக்கொழுந்தாகிய சிவபெருமானது வாசனை கொண்டலர்ந்த மலர்போன்ற திருப்பாதத்தை அணுகிச்சென்று பூதவுடலை தவிர்த்து ஒருநாளும் அழிவில்லாத பேரின்பவீடு பெற எண்ணங்கொண்டு, கர்ம போகம் என்கிற அன்றேதிய அறநெறியை உள்ளத்தில் கொண்டவராய், அதிலிருந்து முறைதப்பாமே அனுஷ்டிக்கக் கோரி அதற்குத் தகுதியான இடம் கர்மபூமியான இப்புவியில் எங்கிருக்கின்றது என்று இணைந்தாடும் மடவன்னங்கள் பூட்டிய இரதத்திலே வீற்றிருந்து எங்கும் சுற்றிச்சுற்று ஆராய்ந்து பார்த்து இத்தகைய சிறப்புக்கள் மெலிந்த இந்த பிரம்மகிரிக்கு வாக்தேவியாய் தனது மனையாளாகிய ஸரஸ்வதி தேவியுடனும் மற்றுமுள்ள ப்ரம்மரிஷிகள், தேவர்கள் இவர்கள் கூட்டங்களுடன் வந்து சேர்ந்தார்.

நான்கு வகையான வேதத்தில் கரும நூலென்னும் ஞான நூலென்னும் இரண்டுவகையாம். அதில் கர்மநூலானது பரமனது அர்ச்சனைக்கு வேண்டிய காரியங்களை உணர்த்தும், ஞானநூலானது அவனதுருவில்லா உருவத்தை உணர்த்தும், மரத்தினது வேருண்ட நீரால் கிளை தனித்தாற்போல் இம்முழு முதலாகிய சிவபிரானுந்து உண்ணிக்கின்ற அமுது இவனுருவமாகிய தேவர்களுக்கும் பிறருக்கும் திருப்தியாகும்.

பிரமதேவன் கர்மநூல் எனப்படும் கர்மயோகத்தில் இழிந்து ஞானநாயகனை சிவபெருமான் திருப்பாதங்களை அர்ச்சிக்க, ஓர் யாகத்தைச் செய்யவேணுமென்று எண்ணங்கொண்டு போகத்தாலும், செல்வத்தாலும், மற்றும் பலவகைகளாலும் இம்மலைக்கொப்பான வேறொரு மலை இல்லை என்று கண்டறிந்து அம்மலையிலுள்ள சிறப்புக்களை கண்டு அதிசயித்து பேராநந்தம் கொண்டான.

தஸ்மிந் கிரிவரே ரம்யே யோகிப்ரவர ஸங்குலே
ஸம்பாந்ப தேவபஜனம் ஸம்பாராஞ ஹாரந்தே

பாத்ராணி தர்பானாணி பசூந் ஸோமப யோக்ருதம்
வாஸாம்ஸி தக்ஷிணைகாச்ச யூப்பாங்ஸ மபரத் தரூந்
நவநீதாஜினே க்ருஷ்ணா விஷாணை தீனவனேகிலே

தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர் வாழ்ந்து வேதவேள்வியொலி முழங்கும் அப்பிரமகிரியிலே பிரமதேவன் யாகம் செய்யக் கோரி யாகமண்டபம் ஒன்று செய்துவைத்து ஸ்ருக், ஸ்ருவர் முதலிய பாத்திரங்கள், தர்பை, அரணிக்கட்டை, பசுக்கள், ஸோமலதை, பால், நெய் தக்ஷிணை கொடுப்பதற்கு தகுதியான ஆடைகள், பசுக்கள், யூபஸ்தம்பம் செய்யத்தகுந்த காட்டுமரங்கள், வெண்ணை, மான்தோல், மான கொம்பு முதலிய யாகத்திற்கு உறிய ஸாமான்களை சேகரித்தார்.

எவம் ஸம்ப்ருத்ய கூச்மாண்ட ஹோமாதிந் ஆத்மசுத்திதாங்
விதாயக்ரது ஸங்கல்பம் கர்தும் ஸர்த்விக் மநைதே

இவ்வாறு யாகத்திற்கு வேண்டிய ஸாமக்கிரிகளை சேகரித்து தனக்கும் யாக மண்டபத்திற்கும் யாக ஸம்பாரங்களுக்கும் சுத்தியைத் தரவல்ல கூஷ்மாண்ட ஹோமம் என்கிற சாந்திஹோமத்தை முந்துறமுன்னம் செய்துவிட்டு ரித்விக், அத்வர்யு, ப்ரம்ஹா, உத்காதா முதலியவர்களை வரித்து யாகத்திற்காக ஸங்கல்பம் பண்ணிக்கொள்ள உத்தேசித்தார்.

எதஸ்மிந்தரே வாணீ ஸ்திரிஸ்வபாவ ஹ்ருதாந்தரா
வனம் விலோகிதும் யோஷிக் ஸஹஸ்ர பரிவாரிதா
கத்வா வனம் தாரகதா நதீஷு விபுலாஸுச
வாரிஜானி விசித்ராணி புஷ்பிதாந்தவன்ய பூருஹாந்
பலாணிச விசித்ராணி சேஷாஸ் ஸும்மன ஸஸ்ததா
விலோக்ய விஸ்மயா விஷ்டா காலக்ஷேபம் சகாரஹா

அச்சமயத்தில் அம்மலையில் தோன்றும் இயற்கையின் விநோதங்களைக் கண்டு ஸரஸ்வதி தேவியானவள் மனத்துள் அடங்கா மகிழ்ச்சியும் கொண்டு அம்மலையைச் சுற்றிப் பார்க்கவேணுமென்று ஆவல்கொண்டு தன் பரிஜனங்களுடன புறப்பட்டு அங்கே நீர்மேலுந்த தாமரைப்பொய்கைகள், ஓடைகள், கால்வாய்கள், பூஞ்சோலை, செந்நெல்வயல், வனம், உய்யானம், செந்நெல்பயிர், கரும்புப்பயிர், தென்னை, மா, பலா முதலிய பல விருக்ஷங்களும், தாமரை, முல்லை, மல்லிகை, சண்

பகம் முதலிய பல புஷ்பங்களும், ஆல், அரசு, உதும்பரம் முதலிய யாகத்திற் குரிய பல மரங்களும், மேகமண்டலம் வரையில் அளாவிச் செல்லுகின்ற சோலைகளும், விசித்திரமான மிருகங்களும், பறவைகளும் ஓங்கிவளர்கின்ற வாற்றை கண்ணுற்று உகந்து களித்து சுற்றித்திரிந்துக் கொண்டிருந்தனள்.

விதாதா யாகஸங்கல்பம் விதாதும் தாம் ஸரஸ்வதீம்
யதாஹ்வயத் த்விஸ் திரி ருச்சை ஏஹி வாணிதிஸத்வரஹ

பிரமன் செய்யும் யாகத்தைக் காண பல விடங்களிலிருந்து முனிவர்களும், தேவர்களும் இனமினமாய் வந்துகூட அக்வர்யுக்கள் முன் சடங்குகளை செய்து முடித்துவிட்டு ஸங்கல்பம் செய்துக்கொள்ள இது தக்க முகூர்த்தம், இப்போது தீக்ஷாஸங்கல்பம் செய்துகொள்ளலாம் என்று அறிவிக்க, யாகத்தில் யஜமானன் பத்னியுடன் ஸங்கல்பம் செய்துக்கொள்ளவேணுமென்று கூறியிருப்பதால் பிரமதேவனும் தன் மனையாளாகிய ஸரஸ்வதிதேவியை கூப்பிட்டார். அவள் வரவில்லை. இரண்டுமூன்று தடவைகள் அழைத்துப்பார்த்தார். அப்போதும் காணவில்லை. பிறகு உரக்கக் கூவினர். காணவில்லை. அருகில் இருந்தால் அன்றோ அவள் வரப்போகிறுர்?

ததா தூரஸ்தயாரண்ய விலோகோத்க தியா ப்ருசம்
நங்யவர்தி ப்ரம்மபத்ந்யா விஸ்ம்ருதாத்வா சர்யயா

ஸரஸ்வதி தேவியும் அத்தகைய சீரும் சிறப்பும்வாய்ந்த அம்மலையினாலே மனம் கவர பெற்று தன்னையும் மறந்து கணவனை பிரமதேவனையும் மறந்து தாங்கள கோரிவந்த வேள்வியையும் மறந்தி அதிசயக் கடலிலாழ்ந்து பேரின்பமுற்று அம்மலையிலேயே வெகுநேரம்போழுதுபோக்கினுள்.

ததா வாசஸ் பதிஸ் ஸோயம் ஸுகோப பஹு சஸ்ஸகதா

இங்ஙனம் பலதடவை கூவி அழைத்தும் வரக்காணுமையாலே ஸரஸ்வதிதேவியானவள் மலையின் சிறப்பைக் கண்டு மனமார்ந்து தான் கோரிவந்த கார்யத்தை மறந்து காற்றில்சுற்றித் திரிந்துக் கொண்டிருக்கிறுள் என்று அறிந்து அவள் மீதி மிக்க கோபம் கொண்டார்.

பதிஹி க்ருத்த இதி ஞாத்வா புரோஸ்யாகந்து மக்ஷமா
அதஸாரணி மாவிச்ய தத் ரந்தர்தி மவாபஹா

இவ்வாறு ஸரஸ்வதிதேவி, மலையில் சுற்றித்திரிந்து வெகுநேரம் போக்கி கடைசியாக தாங்கள் கோரிவந்த கார்யம் ஞாபகத்திற்குவந்து அய்யோ! பாவியேன் மோசம் போனேனே! வீணாக குழந்தை போல் காலத்தைப் போக்கிவிட்டேனே! கணவனுடன் கூட இருந்து அவருக்கு பணிவிடைகள் ஒன்றும் செய்யாமல் ஒழிந்துவிட்டேனே! யாகம் ஆரம்பித்துவிட்டிருப்பரே. அவருக்கு எங்ஙனம் பதிலளிப்பது! கோபித்துக்கொள்ளுவாரே, என்று துள்ளித்துடித்து திரும்பிவர, வழியில் பிரமதேவர் மிக்க கோபங்கொண்டிருக்கிறார் என்று கேட்டறிந்து அவர் முன்னே வர அச்சமுற்று என்ன செய்வது என்று திகைத்து தடுமாறிக் கடைசியாக தனது தவத்தின் மகிமையினால் தீயைக்கடைவதற்காக கொண்டுவரப்பட்ட அரணிக்கட்டையில் மறைந்துவிட்டனள்.

அததாதா விதாயாசு பத்ன்யா ப்ரதிக்ருதிம் குசை

க்ரதும் ஸங்கல்ப்ய விதிவத்ஸ்வ தேவயஜனம் கதஹ

பிறகு பிரமதேவர் வேதத்தில் ஓதியபடி வேதமந்திரங்களை ஓதி தர்பைகளில் பத்னியை ஆவாகனம் செய்து, முறைதப்பாமே ஸங்கல்பம் செய்துக்கொண்டு அதே சுபமுகூர்த்தத்தில் யாகம் ஆரம்பிக்க யாகசாலைக்கு முன் புகுந்தார்.

அரணிம் நிர்மமந்தாதா ஹயக்னேர் விஹாரணையவை

ததோ வாகீச்வரீ தேவீ மதிதாரணி மத்யதஹ

நதிரூபா ஸமபவத் தேவானீஸ் மேரதாம்கதாஹ

அங்கு கார்ஹபத்யம், ஆஹவனீயம் என்னும் சொல்லப்படுகிற வைதீகமான அக்னிகளை உண்டாக்குவதற்க்காக முன்னமே கொண்டு வந்து சேகரிக்கப்பட்டிருக்கிற அரணிக்கட்டையைக் கடைந்தார். கடையைபட்ட அந்த அரணிக்கட்டையிலிருந்து முன்னே வந்து புகுந்து மறைப் திருக்கிற ஸரஸ்வதியானவள் பிரமனது கோபாக்கினியை ஆற்ற ஓர் ஆற்றின் உருவத்துடன் வெளிக்கிளம்பினள். இதைக்கண்டு அங்குகூடி இருக்கும் முனிவர்களும், தேவர்களும் மிக வியப்படைந்து தவத்தின் பெருமையே பெருமை. காட்டில் சுற்றித்திரிந்துக்கொண்டிருந்த இவள் எவ்வாறு இந்த அரணியில் புகுந்தனள்? ஆற்றின் உருவம் எங்ஙனம் கிடைத்தது? இதென்ன ஆச்சரியம்! என்று கொண்டாடினார்கள்.

பிதாமஹோபி தாம்வீக்ஷ்ய நதிமுத்கூல வாஹினீம்
ஸந்தோஷம் பரமம் ப்ராபதஹ ப்ராஹ கம்பீரயாகிரா
த்யுஸதோ முனிவர்யாம்ஸ்ச ஸனகாதீந்தர்த்விஜஹ

பிரமதேவனும் சுழிகள் சுழன்று நுரைகள் ததும்பி அலைகள் இருகரையும் மோதி ஓர் ஆற்றின் உருவமாய் அரணியிலிருந்து வெளிக்கிளம்பிய வாக்தேவியைக் கண்டு வியப்படைந்து பேரானந்தத்துடன் இவ்வதிசயத்தை பார்ப்பதற்காக கூடி இருக்கும் விண்ணவர்களையும், மாமுனிவர்களையும், தேவர்களையும் பார்த்து ஓர் வார்த்தை சொன்னார்.

பிதாமஹ உவாச

இயம் பாணிக்நுஹீநிமே அரண்யாந்தர்ஹிதாபயாத்
மதனுத்வாஹினீ ஜாதா ப்ரவாஹாப்த்மஹீவனு
இயம் ஜகத் ஹிதாயைவ நதீரூபா மபப்ரியா
தஸ்மாதிதோ நதீசன ஸங்கமேது யதேச்சயா
அரணீப்யாம் யதுச்ப்ருதா வாஹினீயம் ஸரித்வரா
அதோரண்யநதீத்யாக்யாம் ப்ரஸித்தாம் லபதாமியம்

ரமதேவர் கூறுகிறார். ஓ மாமுனிவர்காள்! என்னுடைய பத்னியாகிய ரஸ்வதி தேவியானவள் எனனிடத்தில் பயப்பட்டு அரணிக் கட்டைடல மறைந்திருந்து அக்னியைக் கடைக்கிறபோது சிவபெருமானது ஜடாமண்டலத்திலிருந்து வெளிக்கிளம்பிய கங்காதேவிபோல் ஆற்றின் உருவம்கொண்டு வெளிகிளம்பினாள். இதெல்லாம் உலகத்தின் நன்மைக்காகவே நடந்தேறியது. அன்றேல் பூவும், மணமும் போல் கணநேரமும் என்னைவிட்டுபிரிந்து நிலைபெறாத இந்த வாக்தேவி என்னைவிட்டுப் பிரிந்து மறந்து காட்டில் சுற்றித் திரிந்திருந்தாள் என்பது எவ்வண்ணம் கூடும். இது தெய்வச் செயல். தெய்வத்தின் ஸங்கல்பத்தை மாற்ற யாரால்தான் முடியும்? உலகத்தின் நன்மைக்காக கங்காதேவி புவியில் அவதரித்ததுபோல் ஸரஸ்வதிதேவியும் அவதரித்திருக்கவேணும். எல்லாம் வல்ல பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தை மீறி வீணாக கோபித்துக்கொண்டதில் யாது பயன்? இந்த ஸரஸ்வதிதேவியானவள் அணிக்கட்டையிலிருந்து வெளிக்கிளம்பியதால் இந்நதிக்கு அரண்ய நதி என்று பெயர் உலகத்தில் பரவி, பெரும் புகழ்ச்சியுடன் வாழ்க. இந்த பிரம்மகிரியிலிருந்து பிரவகித்து சமுத்திரம்போய்ச்சேரக்கடவது என்றனர்

இத்யுக்த்வா ஸஹஸாபத்னீம் ஆஜகாஹாவத்வாஸ்
இயம் லோகஹிதாயத்வம் நதீரூபபவத் தருவம்
ஸங்கல்போ தேவதேவஸ்ய கேனபி நாதிக்ரம

இவ்வாறு சொல்லிவிட்டு பிரம்மதேவர், தன்னைக்கண்டு வெட்கி தலை குனிந்து மறைந்துச்செல்லுகிற ஸாஸ்வதிதேவியைப் பார்த்து ஓ வாக் தேவியே! நீ ஏன் வெட்கமடைகிறாய்? தெய்வத்தின ஸங்கல்பத்தினால் நடந்தேறியவைகளுக்கு நம்மால் என்ன செய்ய முடியும்? உலகத்தின் நன்மையின் பொருட்டே தெய்வம் இவ்விதம் ஸங்கல்பித்தது. ஈசனுடைய ஸங்கல்பத்தை மீறி ஒருவராலும் நடக்கமுடியாது. ஆகையால் உன்னிடத்தில் தப்பிதமில்லை. பயப்படவேண்டாம். உன்னுடைய நற்கர்மங்களையும், நல்லுணர்ச்சிகளையும், நற்குணங்களையும், நான் நன்கறிவேன்.

மாபைஸ்த்வம் சாந்திமகமத் க்ரோதோனகமஸம்பவ

இங்ஙனம் தெய்வச்செயலை நினையாமல் வீணா உன்மீதில் கோபங்கொண்டேன் இனி நீ பயப்படவேண்டாம்.

அதோம் சேன ஜகச்சேமாம் நதீம் ஸாகரகாமினீம்
அம்சேன மமகார்ஹஸ்த்ய தர்ம ஸம் பாதினிபவ

ஆகையால் நீ இரண்டு பாகமாய் பிரிந்து ஒரு பாகத்தால் இவ்வாற்றின் உருவமாய் சென்று கடலை அடையக்கடவாய். மற்றொரு பாகத்தால் எனக்கு பத்னியாக இருந்து என்னுடன் தர்மானுட்டானம் செய்து கார்ஹஸ்பத்தியத்தை காப்பாற்றிவைப்பாய்.

ஏதத்ப்ர தேசமாரப்ய வாரி தேஸ்ஸங்கமாவதி
த்வத் ரூபவாஹினீவாரி பவித்ரேஸ்னாதியோநர
பானுவாரே விசேஷேண ஸயாதி பரமாம்கதிம்.

நீ ஆற்றின் உருவம் கொண்டு வெளிக்கிளம்பி இருக்கும் இந்த பிரம்மகிரி தொடங்கி கடலிலே சேருகிறவரையில் இடையில் இந்நதியில் எவன் ஸ்னானம் செய்கிறானோ அவன் மேலான கதியை அடையக்கடவன். ஞாயிற்றுக்கிழமையில் இதில் ஸ்னானம் செய்தானாகில் மேலான கதியை அடைகிறான் என்பதில் ஸந்தேகமேஇல்லை. ஞாயிற்றுக்கிழமையாகில் மிக்க விசேஷம்.

மூர்கோபி வாகதிஷ்டாதா ப்ரஸாதாத்தவபூருஷ
வித்யாஸ- தீஷ்ணோன் மேஷாத் த்ருவம்ஸதிஷ்ணுயதே

மூடனுக இருந்தபோதிலும் எவன் இன்னதியில் ஸ்னனம் செய்கின்ருனே அவன் உன்னுடைய அனுக்ரஹத்தால் மிக்கபண்டிதனுக ஆகக்கடவன்.

இத்யுக்தா சாரதாதேவீ பத்யாநிர்வத்த மானஸா
அம்சேன பத்னீபூத்வாஸ்ய யஞ்ஞா நிஸஹகாரிணீ
அம்சேனே கஸரிதம் விவேச ஜகதாம்ஹிதா

இங்ஙனம் பிரமதேவரால் அருளிச்செய்யப்பட்ட தேருதல் மொழிகளைக் கேட்டு மிக்க ஸந்தோஷமடைந்து ஸரஸ்வதி தேவியானவள், இரண்டுபாகங்களாகப்பிறிந்து ஒருபாகம் பிரமதேவரின் பத்னியாகவும் மற்ெருருபாகம் அரண்யநதியாகவும், இரண்டு உருவம்கொண்டு அவரது வேள்விக்கு உதவியாகவும் உலகத்தின் நன்மைக்காவும் போந்து வாழ்ந்தனன்.

அதவா சஸ்பதிப்பத்னியா ஸஹநீக்ஷாமுபாகத
மாஹேச்வரம் க்ரதுவரம் ஸஹர்த்விக்ஹிஸமாபயத்

பிறகு நான்முகக்கடவுள் ஸரஸ்வதிதேவியுடன் ஸங்கல்பம் வேதமுறை தப்பாமே செய்துக்கொண்டு சிவபெருமானுடைய ஆராதன ரூபமான வேதவேள்வியை அத்வர்யு, ரித்விக், ப்ரம்ஹா இவர்களுடைய உதவியை முன்னிட்டுக்கொண்டு பூர்த்திசெய்தார்.

ருத்விக்ப்யோ தக்ஷிணும்தத்வா கல்போக்த பஹுஸங்க்யகா
ப்ரஸர்ப கேப்ய வித்வத்ப்ய வாஸாம்ஸி ஸபஹுனிச
கம்பளானி விசித்ரானி போஜ்யான்னுனி யதேச்சயா.

பிறகு கல்பசாஸ்திரத்தில் சொல்லியபடி யாகத்தில் உதவிபொருந்திய அத்வர்யுமுதலியவர்களுக்கும் யாகத்தைக்காண விரும்பிவந்த முனிவர்களுக்கும், அனேக கோடிக்கணக்கான வஸ்திரங்களையும், கம்பளிகளையும், பசுக்களையும், தான்யங்களையும், தக்ஷிணையாகக்கொடுத்து அவர்களை திருப்திசெய்து வைத்தார்.

ப்ரதாயாந்தேசாவபதம் ஸஹதேவை ஸ்ஸஹர்ஷிபி
விதிர் விதா தம்ஸஹஸா பத்னியா ஸஹதயா நதீம்

தாமேவ கத்வாதத்ரைவ க்ருத்வாவ பதமாதராத்
ஸஸ்னௌ தேவர்ஷிஸம்வீத ப்ராம்மணர்பஹுபிஸ்ததா

இவ்வனம் அனைவர்க்கும் தக்ஷிணை கொடுத்துவிட்டு தேவரிஷிகள், பிரம்மரிஷிகள், அந்தணர்கள், முதலியவர்களாலே சூழப்பட்டவராய் அந்த அரண்யநதியின் அருகில்சென்று அவப்ருத ஸங்கல்பம் செய்துக்கொண்டு அந்த புண்யநதியிலேயே தன் பத்னியான ஸரஸ்வதிதேவியுடன் ஸ்னானம் செய்தார்.

ஏதஸ்மின்னன்தரே ஸாக்ஷாத் தேவதேவோமஹேச்வர
பார்வத்யா ஸஹிதோ தேவ்யா வ்ருஷபம் வாஹனம் ச்ரித
கணைப்பரிவ தோநந்தி ப்ரமுகைர்வைஸ்ஸமாகத

அச்சமயத்தில் நீண்டசடையும் பூணூலன் மார்பும் பூசின விபூதி மேலனிந்த பொட்டும், இரண்டங்குலங்கள் தொங்கவிட்ட வெள்ளைமுத்திரையுந் தோலால் விரித்துத்தரித்த அரைஞாணும் விபூதிப்பொக்கணந்தொங்குகின்றதோளும், படிகமாலையில் விளங்குகின்ற கட்டங்கமும், உதரபந்தனமும், வெங்கைத்தோலால் கட்டிய கோவணமும் புலித்தோலுடையும், இடைத்தோளிலிட்ட யோகபட்டிகையும், பொற்பிரம்பும், பாதங்களிலணிந்த வேதக்கிண்கிணிகளும், உபனிடதமாகிய பாதுகையும் பூண்டு புன்னகையும் குறுவேர்வையும் முகத்திலே தோன்ற சச்சிதானந்தவடிவாகிய சிவபெருமான் உமாதேவியுடன் விருடபவாகனத்தின்மீது ஏறிக்கொண்டு நந்தி முதலிய பிரமதகணங்கள் சூழ முப்பத்து முக்கோடி தேவர்களும்தொழ கின்னரர்கள் பாடியாட பிரமதேவரின் எதிரே ப்ரத்யக்ஷமாக வந்து தோன்றினர்.

தம்த்ருஷ்ட்வா தேவதேவேசம் த்வரயோத்தாய விச்வஸ்ட்
ப்ரணம்யதண்டவத் பூமௌ சதசோதஸஹஸ்ரச
துஷ்டாவ வாக்பிரர்த்யாபி உமாகாந்தம் ஸஹாமரை

பிரமதேவன் தான்செய்த வேள்வியினால் மிகவும் உள்ளம் குளிர்ந்து அன்பு வெள்ளம் பெருக வந்தெதிரே தோன்றின சிவபெருமானைக் கண்டு பேரானந்தத்தில் மூழ்கி நின்றவிடத்தில் நிற்காமல் குதித்து ஆடிப்பாடி பலதடவை தண்டனிட்டு பரமசிவனை ஸ்தோத்திரம் செய்யத் தொடங்கினன்.

ப்ரம்மா உவாச

நமோ வேதாந்தவேத்யாய ஸ்ருஷ்டிஸ்தித்யந்த ஹேதவே

சுத்தபுத்தஸ்வபாவாய நிர்யாநந்த ஸ்வரூபிணே
வேதியாய் வேதவினை பொருளாய் வேதத்தி
னிதியாய் நீதிநெறி கடந்த நீளொளியாய்
யாதியாயீறாய் நடுவாய வைகழிந்த

சோதியாய் நின்றாய், பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினும் சிறியதுமாய், அரியதினும் அரியதுமாய், எளியதினும் எளியதுமாய்க் கரியதுமாய், காண்பானும் காட்சியுமாய், அவைகடந்த துரியமுமாய் நின்றாய் பரமனே.

யதோவா சோபிமனஸா நிவத்தாப்ராபது மக்ஷமா
நிஸ்ஸங்காயாமரே சாய நமோவிச்வாதி சாயினே
அகண்டாநந்தபோதாய்புதிதயே விச்வயோனயே.

வேதநெடுமால் ஆதிநின்றுடர் மண்ணுடர் விரதயோகர் மாதவர் யாவரும் காணவரிதான பெருமையனே! பரமேசனே! பரஞ்சுடரே! நிர்மலா! திருச்சிற்றம்பலவே! உலகுக்கோர் தனிமுதலா! பரமனே!

லோகாதிஷ்டான பூதாய ஸர்வாந்தர்யாமினே நம
அவிகாரஸ்வரூபாய யஜ்வனும் பலதாயினே
நமோ பக்த பராதீனமனஸே ப்ரம்மணே நம

உலகம் முன்னுடையாய்! உள்ளுவார் உள்ளத்துள்ளாய்! மாறாந்து செய்யும் வினைவழிபோம் வெள்ளைகிற் தாழாதே அடியவர்களை காற்றருளும் நிர்மலா! என்னைக்காத்தருளவேணும்.

இதிஸ்துத்வா மஹாதேவம் ப்ரம்மோவாச ப்ரஸன்னதி
ஸ்வாமிந்நத்ய ஜகத்பித்ரோ யுவயோஸ்ஸன்னிதோனபுன
இச்சாம ஸஹதுமகிலா ததனுஞாதுமர்ஹஸி.

என்று பல்வாறு துதித்து அஞ்ஜலிஹஸ்தராய் பலமுறை வணங்கி அளவற்ற பேருணர்ச்சியினால் எட்டுதற்கரிய பெருமானே! தோற்றமிறின்றி உலகினைச்சிற்கு செறிதருமுயிர்தொறும் திகழ்ந்து மன்னிய மறைவறசிவன் இன்று சொல்லுகிறபடி தந்தையாயும் அறுவகை மன்னுயிர் புவன மேல் பற்றள பொருளுக்கெல்லம் அன்னையாய் தனிதலுமவற்றினை வளர்த்து நிற்பாள்'' என்று தாயாய் நின்று காத்தருளும் உமாதேவி ஆகிய உங்கள் திருமுன்பே, இவ்வாற்றில் மறுபடி

யும் ஸ்ஞனம்செய்ய விரும்புகின்றோம் தேவரீர் திருமுன்பே அவபிருத ஸ்நாநம்செய்ய விரும்புகின்றோம். க்ருபைசெய்தருளவேணும் என்று வேண்டிக்கொண்டார்.

இத்யுக்தோ தேவதேவேச பரமானந்த நிர்பர
ப்ராஹ கம்பீரயாவாசா ஸர்வான் ஸம்சார வயந்ததா.

நிலைபெற்ற ஆன்மவர்க்கங்கள் அனைத்தையும் முற்பட்டுப் பெற்றருளிய முதல்வனாகிய பிரமன் அன்போடு இவ்வாறு கூறியருளவும் இவ்வார்த்தைகளை ஒப்புயர்வில்லாதவராகிய சிவபெருமான் கேட்டருளி பேரானந்தம் கொண்டு தேவவர்க்கங்கள் அனைத்தும் கேட்க அருளிச்செய்வாராயினர்.

மஹாதேவ உவாச

விதே மத்ப்ரீணனார்தேன யாகேன விததேனச
த்வத்க்ருதேன நிதஷ்டோஸ்மி நத்யா உத்பாதனேனச

யாதொரு தெய்வங்கண்டீர் அத்தெய்வமாகியாங்கே, மாதொரு பாகனார் தாம் வருவர் மற்றத்தெய்வங்கள் வேதனைபடும்மிறக்கும்பிறக்கு மேல் வினையும் செய்யும். ஆதலால் அவையிலாதான் நிர்தருள் செய்வன் அன்றே என்று சிவஞான சித்தியார் திருவாய்மலர்ந்தருளிய படி யாவர் எக்கடவுளரை வழிபடினும் அவ்வழிபாட்டை சிவபெருமான் ஏற்றுக்கொள்ளுவர். என்ற வேதத்தின் உட்கருத்தலைத உள்ள படி அறிந்த பிரமனே! எனக்கு த்ருப்தி உண்டாக வேணுமென்று எண்ணங்கொண்டு என்னை உத்தேசித்து நீ செய்த வேள்வியால் நான் மிக த்ருப்திகொண்டேன். உலகத்தின் நன்மைக்காக சுயாலம் கருதாமல் இப்புண்ய நதியை உற்பத்தி செய்ததினால் பேரானந்தம் கொண்டேன்.

அத்ய சைத்ரா பௌர்ணமாஸீ நதீயம் லோகபாவனீ
நிதாவஸ்யாம் மஹாநத்யாம் அஸ்யாமவப தேனச
த்யாத்வாஹ லோசதன சௌ புஷ்மாபிஸ்ஸமனுஷ்டித
அலம்புனக்ஸன்னிதானே ஸ்னானை விதிருத்தா

உங்கள் பாக்கியமே பாக்கியம் இன்று சித்ரா நக்ஷத்திரம் கூடிய பௌர்ணமீ திதி இப்புண்ய நதியும் நீவிர்களை விசைவேகளையுர்படியான மகிமை வாய்ந்தது. இப்புண்யநதியின் கரையில் வேதத்தில் ஓதிய வண்ணம் முறைதப்பாமல் வேள்வியை முடித்து உள்ளம்

கனிந்து முறைமுறையே பலவாறு தோத்திரம் செய்ய அதினால் மனமகிழ்வடைந்து பரமபக்தனாகிய உன்னைப்பிரிந்து நின்றவிடத்தில் நிற்க மாட்டாமல் ஓடிவந்து உனக்கு ப்ரத்யக்ஷமாகத் தோன்றிய எங்கள் திருமுன்பே இப்புண்யநதியில் அவப்ருத ஸ்நானம் செய்ததினால் நீங்கள் கோரிவந்த காரியம் அழகாக முடியப்பெற்றது.

வரம்யஷ்டம் வரம்மத்த ப்ரீதாத்க்ரதுவரேணதே

நீ செய்து முடித்த இவ்வேள்வியினால் நான் மிகவும் திருப்தியடைந்தேன். நீ கோரிவந்த வரத்தைக் கேள். கொடுக்கிறேன் என்றார்.

இத்யுக்த ஸவிதாதாயம் வரயோக்யோ யதிஹ்யஹம்
த்வயிமேஸ்த்வ சலாபுத்தி பலதாவ்யபிசாரிணீ

இங்ஙனம் பரமசிவன் திருவாய்மலர்ந்தருளியதைக் கேட்ட பிரமன் மொழியது தவறல் செல்லமுற்றுடல் பொடிப் புக்கொள்ளல் விழிபுனல் பெருகத்திசேர் என்று சொல்லியவாறு வார்த்தைகள் தடுமாறவும், தேகமுழுதும் மயிர்க்கூச்செரியவும், கண்களில் ஆனந்தபாஷ்பம் ததும்பவும், தழலிலிட்ட மெழுகைப்போல் உள்ளமுருகவும், முதற் பெருங்கடவுளாகிய சிவபெருமானைத் தரிசித்து சிறந்த அருட்கடலாயுள்ள எம்பெருமானே! யான் தேவரீரிடத்தில் எதைக்கேட்பேன். தேவரீர அடியோங்களிடத்தில் அருள்புரிவீராகில் அழகியமறைக்கு மெட்டாவாதி நாயகனை தேவரீரிடத்தில்

ஊனாகி யூனுறுயிராயுயிர் தோறுமாகி
வானாதியான பொருளாய் மதியாகி வெய்யோன்
றானாகி யாண் பெண்ணுருவாகிச் சராசரங்க
ளானான் சிவன் மற்றவனின் கழற்கன்பு செய்வாம்.

என்று கச்சியப்பசிவாசாரியரோதிய ப்ரகாரம் முப்போதுமிடவீடன்றி பேரன்புவெள்ளம் பெருக கடாக்ஷித்தருளவேணும்.

பூயாதரண்யவாஹின்யா அமுஷ்பாஸ்திர பார்ச்வயோ
ஈசானாத்யாபம் சமூர்த்திரதிஷ்டாயாநயாஸஹ
பார்வத்யாஸஹிதோ நித்யம் லோகானுக்ரஹகாரணாத்
ஸான்னித்யம் ப்ராப்னுஹீசான பக்திமுக்தி பலப்ரத
பஜதாம கருணாவிந்தோ தேவானாம் மநுஜன்மனாம்

மேலும், தேவரீருடைய திருவருளினால் உற்பத்தியாகி புண்யநதி என்ற புகழ்பெற்ற இவ்வரண்யநதியின் இருகரைப்புறங்களிலும் ஈசானன், தத்புருஷன, அகோரன், வாமதேவன், ஸத்யோஜாதன் என்னும்படியான ஐந்துமூர்த்திகளில் உமாதேவியுடன் அதிஷ்டானம் செய்தருளி சதகூடாத்ரி, மஹாகடகம், விசககடம், சிந்தாமணி, வஜ்ரமுக்தேச்வரம் என்னும்படியான ஐந்து புண்ய க்ஷேத்திரங்களில் கோயில்கொண்டு எழுந்தருளி இருந்து

மறையினாலயனான் மாலான்மனத்தினால் வாக்கான்மற்றும்
குறைவிலாவளவினாலுங் கூறொணாதாகிநின்ற
இறைவனார் கமலபாதம்ன் றியானியம்புமாசை
நிறையினார் குணத்தோர்க்கெல்லாம் நகையினை நிருத்துமன்றே

என்று சிவஞானசித்தியார் கூறியவண்ணம் நின் திருவடிக்கண் அன்பராகிய பரமபக்தர்களுக்கு பக்திமுக்திகளைத்தந்து அருள்புரிவீராக.

இதிஸம்ப்ரார்திதோ தேவ வா ஹிர்யாஸ்திர பார்ச்வயோ
ஸ்தலேஷு பஞ்சஸு க்ஷீப்ரம் ஈசானதிப்ரபோதத
பஞ்சமூர்திஸ் ஸமாஸ்தாய ஸான்னித்ய மகரோத் ப்ரபு

இவ்வாறு பரமசிவனால் பிரார்த்திக்கப்பட்ட பரமசிவன் அவர் வேண்டுகோளுக்கிணங்கி ஈசானன் முதலிய ஐந்துமூர்த்திகளில் அதிஷ்டானம் செய்தருளி அப்புண்யநதியின இருகரைப்புறங்களிலும், சதகூடாத்ரி முதலிய ஐந்து க்ஷேத்திரங்களில் சன்னிதானம் செய்தார்.

ப்ரம்மா விசேஷாந்நிர்வத்ய கர்மயோகஸ்ய ஸாதரம்
யாகவீக்ஷண பூதாத்மா ஜனஸங்கான்யதோசிதம்
அனுக்ருஹ்ய ஸரஸ்வத்யா ப்ரீத்யா ஸஹிதோநக
விமானவரமாஸ்தாய ஸத்யலோகம் ஸமாவிசத்

பிறகு பிரமன் அவ்வேள்விபை மிக்க ஆதரத்தினுடனே பூர்த்திசெய்து யாகத்தை பார்க்கவேணுமென்று கூடியிருந்த தேவர்கள், கின்னரர்கள் முனிகள், மனுஷ்யர்கள் இவர்களை தக்கவாறு அனுக்ரஹம் செய்தருளி ஸரஸ்வதிதேவியுடன் பொன்னடவன்னங்கள் பூட்டிய விமானத்தில் ஏறிக்கொண்டு தனது சத்யலோகம் அடைந்தான்.

இதிகதிதமரண்யநிம்னகாயா ஜனனம்
உதாரமதாஹ்வயே நிதானம்

பகவதுமாபதி ஸன்னிதான மேதத்தடபுவி
பஞ்சஸாஹித்பச பஸேதஷூ

வாரீர் முனிவர்காள்! நீங்கள் வேண்டிக்கொண்டபடி இப்புண்ய நதி உத்பத்தியைப்பற்றியும், ஆரண்யநதி என்ற பெயர்படைத்ததும், அப் புண்யநதியின் இருகரைகளிலும் பரமசிவன் ஸான்னித்பத்தை உங்களுக்குத் தெளியச் சொன்னேன்.

ஸ்கந்த புராணம் சிவரகஸ்ய காண்டம் உத்தர பாகத்தில்
இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்கந்தபுராணம் சிவரகஸ்ய காண்டம் உத்திரபாகம்
காலகூடாசன க்ஷேத்திர மாகாத்மியம்

## மூன்றாவது அத்தியாயம்.

ரிஷிபஸ்தம் புனஸ்ஸூதமுனிம் பௌராணி கோத்தமம்
ப்ரணம்ய பரயா பக்த்யா பப்ரச்சுர வினயான்விதா

மறுபடியும் ரிஷிகள் எல்லாரும் ஒன்றுகூடி

நாதனூரருள் பெருகத்திதந்திடக்
கோதிலா துனர் சனர் குமரன் கூறிட
வாதராயண முனிவருப்ப வோர்ந்துணர்
சூதனோதிய முவாறு தொல்கதை

என்றோதியபடி பதினென்புராணம் ஆராய்ந்தறிந்து பௌராணிகோத்தமர் என்று புகழ்பெற்ற சூதமாமுனிவரை அணுகிச்சென்று தண்டனிட்டு மிக்க பக்தியுடன் வணக்கமாய் கேட்டார்கள்.

முனயஊசு

பகவந் சூதஸர்வக்ஞ்ய வ்யாசானுக்ரஹகோசர
பகவாநீச்வர பஞ்சமூர்த்திரீசான முக்யகா
விதாய பஞ்சனை க்ஷேத்ரேஷ்வகரோத் சன்னிதிம் சிவ

இத்யுக்தம் பவதா காகா மூர்திம் வஸ்தூன் நதீதடே
கஸ்மின் கஸ்மின் ஸ்தலே தன்யே ஸான்னித்யம் பஜாதப்ரஹ
விசேஷாத் வத போஸ்மாகம் க்ருபாபூர்ணேன சேதஸா

அறிய வேதங்களையுணர்ந்து பாகுபாடுசெய்த வியாசமுனிவரது நல்ல மாணாக்கர்களுக்குள் சிறந்த சூதமுனிவரே! உலகம் மூன்றும் உய்யுமாறு விஷம் விழுங்கிய கண்டத்தினையுடைய சிவபெருமான் பிரமனது விருப்பத்திற் கிணங்கி ஐந்து க்ஷேத்திரங்களில் ஐந்துமூர்த்திகளில் அதிஷ்டானஞ்செய்தருளி கோயில்கொண்டு எழுந்தருளியதாக உரைத்தீர். அந்த ஐந்து க்ஷேத்திரங்கள் எவை? எங்கிருக்கின்றன? எந்தெந்த க்ஷேத்திரங்களில் எந்தெந்த மூர்த்திகளில் அதிஷ்டானம் செய்து ஸன்னிதி செய்தார்? இதை எல்லாம் தெளிவாக கூறியருளவேணும் என்றார்கள்.

இதிப்ருஷ்டோ முனிவரை சூத பௌராணிகோத்தம
உவாசஸம்சயச்சேதி, சௌனர், ப்ரகடார்தகர

இவ்வார்த்தையைச்சூதமுனிவர் கேட்டு

அம்மொழிசூதன் கேளா வழல்பாடு மெழுகே யென்னக்
கொம்மென வுருக வுள்ளங் குதூகலித் தவசமாகி
மெய்ம்மயிர் பொடிப்பத்தூநீர்விழித்துணையருவ் பவாசான்
பொய்ம்மையில் படிவமன்னித்தொழுதிவை புகலலுற்றான்

என்று கச்சியப்ப சிவாசாரியர் திருவாய் மலர்ந்தருளியபடி தழலில் பட்ட மெழுகைப்போல மனம் விரைந்துருகத் திருவுள்ளமகிழ்ந்து பரவசப்பட்டு, தேகத்தில் மயிர்க்கூச்செறியவும் தூய்மையாகிய ஆனந்தபாஷ்பம் இருவிழிகளினின்றும் சிந்தவும் தனதாசாரியராகிய வியாசமுனிவரது மெய்ம்மையாகிய திருவுருவத்தை தியானித்து வணங்கி இவற்றைச்சொல்லத்தொடங்கினர். அவர்கள் ஸந்தேகங்களெல்லாம் தீரும்படி விவரமாக இவற்றைச் சொல்லத்தொடங்கினர்.

சூத உவாச

தபஸ்வினோ மஹாபாகா மூர்த்தி க்ஷேத்ராணிசாதுநா
கதயாமி புராதேவ க்ருபயா பரமேச்வர

தனக்கு ஒப்பு வேறொருவரில்லாதவராகிய முக்கட் கடவுளிடத்து மெய்யன்பு நிரம்பப்பெற்ற முனிவர்களே! உரைப்பவர்களும் அதனைக்

கேட்பவர்களும் மோக்ஷத்தை யடையத்தக்க சிவபெருமான் திரு அவ தாரத்தின் பெருமையை நீங்கள் கேட்டீர்கள். அதனை இப்பொழுது கூறுவேன்.

ப்ரம்ஹாண மனுக்ருஹ்யாத மூர்த்திமீசானஸம்ஞகா
விதாய சதகூடாத்ரௌ தத்ரப்ராதுர் யபூவஹ
வரதேத த்யாபி தத்ரைவ ஸமீபேஸ்யா ஸரின்மணே
பச்யதாயர்சதா ந்ருணு புக்திமுக்திபலப்ரத

பிறகு தனதானடைந்தற்கன்பனாகிய சிவபெருமான் பிரமனுக்கு பரி பூர்ணமாக அனுக்ரஹம் செய்துவிட்டு அவர் விரும்பியபடி அவதாரம் செய்யவேணுமென்று எண்ணங்கொண்டு அப்புண்யநதியின் கரையில் சதகூடாத்ரி என்னுமப்புண்யமான க்ஷேத்திரத்தில் ஈசானன் என்ற மூர்த் தியை அங்கீகரித்து ஆவிர்பவித்து எப்போதும் தர்சனம் செய்தவர்க ளுக்கும் அர்ச்சனை செய்தவர்களுக்கும் புக்தி முக்திகளை அளித்து உல கம் மூன்றும் உய்யுமாறு வீற்றிருக்கின்றனர். அப்புண்ய நதியில் ஸ்நானம் செய்து அப்புண்யக்ஷேத்திரத்தில் பரமனைத்தொழுதேத்த வல்லவர்கள் பேரின்பவெள்ளம் பெருக பேரின்பவீடு பெற்று வாழ்ந் துய்வர்கள்.

ததாதத்புருஷாபிக்யா மூர்த்திமாஸ்தாய சங்கர
மஹாகடகஸஞ்ஞேஸ்மின் க்ஷேத்ரே ப்ராதுரபூத்ஸ்வயம்
யத்ர க்ஷேத்ரே விஷாதீச ப்ராதுர்பூத ஸஹாப்பயா

அங்ஙனம் மஹாகடகம் என்கிற க்ஷேத்திரத்தில் தத்புருஷன் என்கிற மூர்த்தியை ஸ்வீகரித்து.

மாமறைமுதற் கொரு வடிவமாகியோன்
காமரு செய்ய பூங்கழல்கள் போற்றுவாம்

என்று அழகு பொருந்திய செந்தாமரைமலர்போன்றதிருவடிகளை து திப்பவர்களாகிய பரமபக்தர்களுக்கு அருள்புரிய வீற்றிருக்கின்றனர் அந்த மஹா காடக க்ஷேத்திரம் தான் காலகூடாசன க்ஷேத்திரமென கருதப்படுகிறது. அங்கு வீற்றிருக்கும் பரனுக்கும் காலகூடாசனன் என்று திருநாமம் எங்கும் விளங்கின்றது.

அகோர மூர்த்திமாஸ்தாய வாஹிந்யா தக்ஷிணேதடே
விசங்கடாபிதக்ஷேத்ரே ஸோம ஸன்னிஹித ப்ரபு

குருவாரே விசேஷேண தத்ரஸ்நாத்வா ஸரிஜ்ஜலே
அகோரேசம் ஸமாராத்ய புத்திம் ஸுவிமலா லபேத்

இவ்வாறு அப்புண்ய நதியின் தென் கரையில் விசங்கடம் என்று புகழ்பெற்ற புண்ணிய க்ஷேத்திரத்தில் சிவபெருமான் அகோரம் என்கிற மூர்த்தியை கொண்டு உமாதேவியுடன் ஸன்னிதானம் செய்து வருகிறார். பிணி, மூப்பு, பிறப்பு, இறப்பு, இவை முதலிய தீராவலிய நோய்களை துறக்க விருப்பங்கொண்ட ஆன்மாக்கள் அப்புண்யநதியில் ஸ்நானம்செய்து வியாழக்கிழமையில் அகோரமூர்த்தியை வலம்செய்து குளித்தகையினராய், தர்சனம் செய்து, போற்றுமவர்கள் நிர்மலஞானந்த சொரூபியாகிய, ஸத்குணக்கடவுளின், அருளினால் நிர்மல ஞானத்தை பெற்று பேரின்பமுற்று வீற்றிருப்பார்கள்.

வீதாய வாமதேவாக்யாம் தனும் தேவ பிநாகத்ருத்
சிந்தாமண்யபிதே க்ஷேத்ரே பச்சாதம்புநிதேஸ்தடே
ஆவிராஸாம் பயாஸாரதம் பத்ராரண்ய ஸரித்வரா
ஸம்கச்சதேம் புநிதிநா தக்கேத்கேஷ்சாலிஞ

அப்படியே அடியார்களுக்கு இடையூறின்றி இடங்கொண்டவில்வலத்தால் அசுரரைத்தகர்த விமலன் (சிந்தாமணி என்கிற) ஸமுத்திரக்கரையின் அருகில் இருக்கிற சிந்தாமணி என்கிற புண்ய க்ஷேத்திரத்தில் வாமதேவன் என்கிற மூர்த்தியை யடைந்து பர்வதராஜன் புதல்வியுடன் ஆவிர்பவித்து மண்ணும் விண்ணும் மகிழ வாழ்கின்றனர்.

தயோஸ் ஸம்கமதேசேய ஸ்நாத்வா சிந்தாமணீச்வரம்
ய பூஜயதி பக்தியா ஸப்ராப்னோதி பரமம் பதம்

இப்புண்யநதி ஸமுத்திரத்தோடு சேருமிடத்தில் யாவன் ஸ்நானம் செய்து சிந்தாமணி என்ற புண்யக்ஷேத்திரத்தில் கோயில் கொண்டெழுந்தருளிய, சிவபெருமானை தர்சனம்செய்து அர்சனைசெய்கின்றானோ அவன் இம்மண்ணுலகிலும் அவ்விண்ணுலகிலும் சிந்திக்கற்பாலதான அணிமா முதலிய எண்வகை சித்திக்களும், சற்புத்திரப்பேறு முதலிய பதினாறுபேறுகளும், மற்றையவின்பங்களும் கைகூடப்பெற்று அவையனைத்தும் நுகர்ந்து, முடிந்தபின், மீளாமுக்தியாகிய சிவஸாயுஜ்யம் பெற்று வாழ்வன்.

ஸத்யோஜாதா பிதா மூர்திம் க்ருஹீத்வா பவான் ஹர
வரமுக்தேசவ: க்ஷேத்ரே ப்ராதுர்பாவம் விதாயச
ஸேவதோ மனுஜான் ஸர்வான் முக்திபாஜ கரோத்ய ஹோ

அவ்வண்ணம் வரமுக்தேச்வரம் என்கிற க்ஷேத்திரத்தில் ஸத்யோஜாதன் என்று பிரசித்திபெற்ற மூர்த்தியை விரும்பி எழுந்தருளியிருந்து தாமரையலர் போன்ற தனது திருவடிகளுக்கு அன்பாய் அடியை அடைந்தவர்களுக்கு பேரின்பவீடு தந்தருள்வன்.

உத்தாஞம் க்ஷேத்ரவர்யாணும் வரம் க்ஷேத்ரம் விஷாசன
மஹாகடக நாம்னைதத் ப்ரவஸித்தம் ஸர்வபூதலே
மூர்த்தின் தத்புருஷாக்யைஷா மூர்த்திஞமுத்தமாமதா

இந்த ஐந்துபுண்ய க்ஷேத்திரங்களிலும் மஹாகடகம் என்கிறகாலகூட விஷாசன க்ஷேத்திரமே மிக்க பெருமை வாய்ந்து

கோடுநெளியு மிகலும் மனக்கோட்டமாய
கேடும் பிணியு முதலாகிய கேதம் யாவும்
நீடும் பரிவோடுறை வாரிடை நீங்கலாலே
வீடங்ககோ யெனிலென்னின் விளம்பவற்றே

என்று காஞ்சிநகரத்திற்கு சொல்லுவதுபோல் இதின் பெருமை ஒருவராலும் சொல்லுந்தரத்ததோ? அவ்விதமே எல்லா மூர்த்திகளிலும் தத்புருஷன் என்று சொல்லப்படுகிற காலகூடவிஷாசனப்பிரானின் பெருமையும் மிக்க அதிகமாகவே இருக்கும்.

பாஜுவாரேச ஸௌத்ரர்க்ஷே சித்ராயுக்தே சபாவணி
நதி ஸ்நாநம் ஹிஸர்வேஷா நாஞ புண்யக்ரியாபலம்

க்ருத்திகாக்ஷத்திரம் கூடிய ஞாயிற்றுக்கிழமை அல்லது சித்ராநக்ஷத்திரம் கூடிய பௌர்ணமி இந்ததினங்களில் இப்புண்யநதியில் ஸ்நானம் செய்வதினுல் அச்வமேத வேள்விப் பலங்கள் எளிதாகக் கைகூடும்.

அத்ரப்ர சேதஸோ நாம முனியோகவிதாம் வர
ஸ்நாத்வா ரண்யநதீதோயே தேவம் தத்புருஷாஹ்வயம
ஸம்பூஜ்ய நித்யம் விதிவத் சிவஸ்யாதிப்ரியோபவத்.

'இந்த காலகூடாசன க்ஷேத்திரம் என்கிற புண்யக்ஷேத்திரத்தில் கடுந்தவக்கடலாகிய ப்ரசேதஸர் என்கிற வால்மீகி மகர்ஷி அப்புண்

நதியில் தினந்தோறும் ஸ்நானம் செய்துக்கொண்டு தத்புருஷன் என்னும்படியான காலகூடாசன பரமனைப் பூஜை செய்துக்கொண்டு அதனால் செம்பொனேர் முடிமிசைத்திங்கள் சேர்த்திய வெம்பெருமானருள் பெற்று அவன் கமலமலர்பதங்களுக்கன்பனுப் அன்புடன் வாழ்ந்து வந்தார்.

ராமோபி வீதயா ஸார்தம் ரக்ஷோ வாநரஸம்யுத
அரண்யாக்ய நதீதோயே ஸ்நாத்வா தத்புருஷேச்வரம்
ததா விஷாசனே சம் ச பூஜயித்வா திபக்தித
விராதாதி நராசாணும் ஹத்யா தோஷாத் ப்ரமுக்தவான்

தசரதமஹாராஜனின் புதல்வனுய் திருவவதாரம் செய்து உலகத்தை காத்தருளிய இராமன் இலங்கைமாநகரம் சென்று இராவணனை ஸம்ஹாரம் செய்து அயோத்திமா நகரத்திற்கு திரும்பிவருகையில் இந்த அரண்யநதி என்ற புண்ய நதியில் ஸ்நானம் செய்து அப்புண்யநதியின் கரையில் மஹாகடகம் என்கிற அப்புண்ய க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டெழுந்தருளிய காலகூடாசன பரமனை வலம்செய்து மிக்க பக்தியுடன் அர்ச்சனை செய்து அதனால் விராதன் முதலியராக்ஷஸர்களை வதை செய்ததினுல் உண்டாகிய தீவினைகளை எல்லாம் மாய்த்துவிட்டு பேரானந்தத்துடன் தனதுநகரமடைந்தார்.

ரிஷய ஊசு

ப்ராசேதஸஸ்ச ராமச்ச பூஜயித்வா மஹேசவரம்
க்ருதக்ருதயா வபாவதாம் இத்யுக்தம் பவதாகில
கதா ப்ராசேதஸோ யோகீ க்ஷேத்ர மேத்ய விஷாசனம்
இஷ்டஸித்தி மவாபாஸென ராகவேந்திர கதாநப
க்ஷேத்ர மேதத வாப்தஸ்ஸன் பூஜயா பயமேசிது
வீரஹத்யா க்ய தோஷாத் ஸப்ரமுக்தோ ஜானகீபதி
இத்யேதத் ஸம்சயம் ஸூத பகவன் சேத்து மர்ஹஸி.

என்று இச்சரிதமனைத்தையும் சூதமுனிவர் அருளிச்செய்யவும் நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டுமெபொருந்திய பெருங்களிப்பினால் சிரமசைத்து சூத முனிவரே! வால்மீகி மகர்ஷியானவர் இந்த காலகூடாசனக்ஷேத்திரத்தில் அப்புண்ய நதியில் ஸ்நானம்செய்துக்கொண்டு சிவபெருமானை அர்ச்சனை செய்துவந்ததினுல் தனது இஷ்டஸித்தியை

அடைந்தார் என்றும் இராமன் வானரர்களுடனும் ராக்ஷஸர்களுடனும் இப்புண்ய க்ஷேத்திரத்திற்குவந்து பகவானை தர்சனம் செய்ததினால் வீரர்களை வதைசெய்ததால் உண்டாகிய தீவினைகளைமாய்த்துக்கொண்டு அயோத்திமா நகரத்திற்குச்சென்றார் என்றும் கூறியருளினீர் இந்த கதைகள் எப்போது நடந்தது? இவைகளை எல்லாம் தெளிவாகவும் விஸ்தாரமாகவும் கூறியருளவேணும் என்று விண்ணப்பம் செய்துக்கொண்டார்கள்.

இதி ப்ருஷ்டோ முனிவரை ஆஹ ஸூதோ தவிஸ்தராத்

என்று இவவாறு நைமிசாரண்ய முனிவர்கள் அனைவரும விண்ணப்பம் செய்துக்கொள்ளவும் நிலைபெற்ற பெருங்கருணையையுடைய ஸூத முனிவர் அம்முனிவர்கள் அடைந்திருக்கும்பெரும் விருப்பத்தைக்கண்டு அச்சரிதங்களை விரிவாக எடுத்துக்கூறியருளத்தொடங்கினார்.

ஸூத உவாச

புராப்ராசேதஸ புத்ர வால்மீகிர் நாமதாபஸ

ராமஸந்தர்சநா காங்க்ஷிப்ரயயோ தண்டகாவனே

துச்சரம் தப ஆஸ்தாய கோதாவர்யா தடே வஸத்

முன்னொருகாலத்தில் ப்ரசேதஸ் என்கிற ருஷியின் புதல்வனாகிய வால்மீகி மகர்ஷியானவர், மின்கொள் சேர்புரிநூல் குறளாய் அகல்ஞானம் கொண்ட திருமால் மாறில் போரரக்கன் குலவிய வீராதிவீரனை தசரதமகாராஜனின் புதல்வனாய் திருவவதாரம்செய்து துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்தருளியபோது அந் தாமரைக்கண்ணனான இராமனுடைய கவித்தமுடியும், திருப்பீதாம்பரமும், அழகிய தோள் மாலையும், வில்லும் கையயுமான வடிவழகை காணவேணும் என்று மிக்க ஆவல்கொண்டு

நாட்டில் பிறந்தவர்கள் நாரணனுக்காளன்றியாவரோ

நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய்

நாட்டை நலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு

நாட்டையளித்து உய்யச்செய்து நடந்தமை கேட்டுமே

என்று நம்மாழ்வார் அருளியபடி கொடிய தவத்தைச்செய்தாகிலும் அதைப் பெறவேணும் என்று எண்ணங்கொண்டு தண்டகாவனத்தில் கோதாவரி என்னும் புண்யநதியின்கரையில் ஐம்புலன்களையும்வென்று

உள்ளடக்கித் தமது ஹிருதயாரவிந்தத்தில் சோதிஉருவாய் அணுவிலும் அணுவாய் நின்ற பரமனை யோகமார்க்கத்தினால் தியானம்செய்துக்கொண்டு கடூரமான தவத்தை செய்தார்.

வத்ஸராணும் ஸஹஸ்ரேபி கதே ராகவதர்சனம்
யதா நைவாபவத்தாத்ரோதாவர்யா ஸததாமுனி
நிர்கத்ய ஸஹஸாதஸ்மாத் வான்பாசாஸ்ரமதீர்நதி
வனானி ஸஹஸாசஸ்யத்ரீன் விசித்ராணி விலோகயன்
அரண்யாக்ய நதீதீரே புண்ணைக த்ருமஸம்வ்ருதே
க்ஷேத்ரம் விஷ்ணுசிலேசஸ்ய த்ருஷ்ட்வா ஸந்தோஷமாப்தவான்

இவ்வாறு வால்மீகி மகரிஷியானவர் அனேகமாயிரம் வருஷகாலம் கடூரமான தவம் செய்தபோதிலும் தான் கோரியபடி ராமசந்திரனின் தர்சனம் கிடைக்கவில்லை. அதனால் மிக்கவருத்தமடைந்து விடாமுயற்சியுடன் வேறு ஏதாகிலும் புண்ய க்ஷேத்திரங்களுக்காவது சென்று இன்னும் கடூரமான தவம் செய்தாகிலும் அதை பெறவேணுமென்று தீர்மானம் செய்துக்கொண்டு பலபுண்யநதிகளையும், புண்யக்ஷேத்திரங்களையும், பலபுண்யாசிரமங்களையும், சுற்றிதிரிந்து பார்த்து எங்கு த்ருப்தி உண்டாகாமல் கடைசியாக இந்தபுண்யநதியின்கரையிலிருக்கிற காலகூடாசன க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்து அப்புண்யக்ஷேத்திரத்தின் மகிமையும், அப்புண்ய நதியின் மகிமையும் கேட்டறிந்து மிக்க ஸந்தோஷமடைந்தார்.

தீர்த்த க்ஷேத்ர ஸமாயோகாத் தீவரேஸா த்ர பகப்ரத
இதி நிச்சித்ய தத்ரைவ க்ருதவாயர்ணருடிம் சுபா
அன்வஹ விதிவத்ஸ்நாத்வா நத்யாமஸ்யா விஷ்ணுசிலம்
த்ரிகாலம் பக்திஸம்யுக்த பூஜயித்வா த்ரிலோசனம்
க்யவஸச்சிரகாலேத வ்யதீதே பரமேச்வர
பூஜயா தஸ்யா ஸந்துஷ்ட ஆருஹ்ய வ்ருஷபோத்தமம்
ஸார்தம் தத்ராவிபவத் அனுக்ருண்ணன் முனீச்வரம்

புண்யநதியும், புண்யக்ஷேத்திரமும், கூடிய இந்த ஸ்தலத்திற்கு ஒப்பான வேறொரு ஸ்தலம் இவ்வுலகின்தான் உண்டோ? இந்த ஸ்தலத்தில் தவம் செய்தேனாகில சிவபெருமானருளினாலே நான் கோரிய காரியத்தை கட்டாயம் பெறுவேன். அதில் ஸந்தேகமே இல்லை.

தவந்தனின் மிக்கதொன்றில்லை தாவில் சீர்த்
தவந்தனை நேர்வது தானுமில்லை யார்
தவந்தனிலறியதொன்றில்லை சார்ந்திடின்
தவந்தனக் கொப்பது தவமதாகுமே

என்று கூறியபடி புண்ய க்ஷேத்திரத்தில் செய்யும் தவத்தைக்காட்டில் வேறொரு உய்யும் உபாயம்தானுண்டோ என்று நிச்சயித்துக்கொண்டு அப்புண்யநதியின் கரையில் ஒரு பர்ணசாலை செய்துக்கொண்டு அப் புண்யநதியில் மூன்றுகாலங்களிலும் ஸ்நானம் செய்துகொண்டு கால கூட சிவபெருமானை மிக்க பக்தியுடன் அர்ச்சனை செய்துக்கொண்டு தவம் புரிந்துவந்தார். இவ்விதம்பலநாள் சென்றபின் கருணைநிதியாகிய முக்கண்ணபிரான் தம்மைக்குறித்து அநேககாலம் மிக்க திறத்தினை யுடைய பெரிய தவத்தைச்செய்து இளைத்திருப்பதைக்கண்டு மனம் வருந்தி தன் திருக்கண்களால் குளிரநோக்கி விடாய்த்தமையை தீர்க்க வேணுமென்று பேராற்றமைகொண்டு நின்றவிடம் நிற்காமல் அலை குலைய தலைகுலைய ஓடிவந்து

நாரிபாகமுமிமையா முக்கண்ணுந் திருப்புயங்கள் நான்குமாகி
மூறிமால் விடைமேல கொண்டெம் பெருமான் மேவுதல்

என்று ஓதியவண்ணம் பார்வதி பாகமும் இமையாத மூன்று கண் களும், நான்கு திருப்புயங்களும் உடையவராய் வலிமைபொருந்திய பெரிய இடபவாகனரூடராய்

முறிவென்னெறேனு

மின்றுதண் சுடர் வெள்ளிமேல் பின்மிசைப்
பொன்னின் மால்வரை போந்தெனப் புங்கவன்
றன்று பாரிடர் சூழ்ந்தரத்தோன்றின்

என்று கூறியபடி பெரிய இடபமொன்று சொல்லப்பட்ட, விளங்கு கின்ற குளிர்ந்த சுடரோடு கூடிய வெள்ளிமலையின்மீது பெரியபொன் மலை வந்தாற்போல எழுந்தருளி வால்மீகி மகர்ஷியின் கண்முகப்பே வந்து தோன்றினர்.

அத வல்மீகிஸம்பூதோ முனிர் திருஷ்ட்வா பினாகினம்
ப்ரணம்ய தண்டவத் பூமௌ வாக்பிர்த்யாபி ரஸ்தவத்

பின்பு முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமானைத்தன் மன

தில் தியானம் செய்தபடியே தன் கண் முகப்பே ப்ரத்யக்ஷமாக நிற்கக் கண்டு பேரானந்தம் கொண்டு கண்களில் ஆனந்தபாஷ்பம் சொரியவும் கரங்கள் வணங்கவும் மனம் எலும்புட னுருகவும் புளகாங்கிதமுண்டாகவும் தழதழத்த வாக்கும்

கோதை யுன்றிடக் கொம்பொடுவாங்கிய

பாதவத்திற் பணிந்தனன்பன் முறை என்று காற்றடிக்கும்

பொழுது இலைகளுடன் பல முறையும் சாய்ந்தெழுகின்ற மரத்தைப் போல் பல்முறை தண்டனிட்டு முறைப்படி ஸ்தோத்திரம் செய்தார்.

ஸ்துத்யா நயா ப ஸன்னோ ஸௌ ஸாம்ப தத்புருஷாஹ்வய

ப்ராஹ கம்பீரயா வாசாவால்மீகே பூஜயாதவ

ப்ரீதோஸ்மி பவிதா தேச பலமீப்ஸித முத்தமம்

வால்மீகேச்வர நாம்நாஹ பவாமீத பரம்முனே

பார்வதீயா மரகதாம்பிக்யா மேஷ்யத்பஸம்சய

இங்ஙனம் பலவாறு ஸ்துதிசெய்து தழதழத்தவாக்கும், தொழுகின்ற கைகளும், சுழல்கின்ற கண்களும், ஆநந்தத்தால் கண்ணும் கண்ணீருமாய் நின்ற வால்மீகிமகர்ஷியைக் கண்டு மிகவும் திருவுள்ளம் உகந்தருளி அன்புடன் திருவாய்மலர்ந்தருளினர் முக்கண்மூர்த்தி.

" ஓ வால்மீகிருஷியே! இந்த புண்ய க்ஷேத்திரத்தில் செய்து முடித்த தவத்தினால் நான் மிக்க திருப்தியடைந்தேன். நீர் கோரிய காரியமும் சீக்கிரத்தில் கைகூடப்போகிறது ஸந்தேகப்படவேண்டாம் உன்னுடைய பக்தியைக்கண்டு பெருமகிழ்ச்சியடைந்தேன். உன்னுடைய அன்பிற்கு இணங்கி இன்றுமுதல் நான் உன்னுடைய பெயரைவைத்துக்கொண்டு உன்னுடைய பெயரினால் நான் வழங்கப்போகிறேன். நான் வால்மீகேச்வரன் என்கிற திருநாமத்தையும் உமாதேவியும் மரகதம் என்ற திருநாமத்தையும் பெற்று உலகினில்வழங்கப்போகின்றோம்.

இத்யுக்த்வாந்தர்ஹிதோதேவ லிங்கே தத்புருஷாஹ்வயே

அத தத்புருஷாக்யோவா வால்மீகேச்வர இத்யபி

ப்ரஸித்தி மகமத் லோகே ததாப்ரபதி தேவப

இவ்வாறு கூறியருளி அன்பு வெள்ளம் பெறுகின்ற தமது திருக்கண்களால் குளிர நோக்கி தத்புருஷன் என்கிற அம்மூர்த்தியிலே அந்தர்தானமடைந்தார். அது முதல் தத்புருஷன் என்றும், வால்மீகேச்வரன் என்றும் திருநாமமும் உலகமெங்கும் விக்யாதிபெற்றது.

வால்மீகேச்வர மாராத்ய பானுவாரே நரோத்தம
லபதே பரமாம் முக்திம் போகார்த்தீ போகமாப்னுயாத்

இந்த வால்மீகேச்வரனை ஞாயிற்றுக்கிழமைகளில் எவன் தர்சனஞ்செய்கின்றானோ அவன் முக்தியைப்பெறவேணுமென்று ஆசைப்பட்டானாகில் முக்தியைப்பெறுவன். நாகலோகம், ஸத்யலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம் முதலிய எந்த லோகத்திற்குப்போய் ஆதிபத்யத்தை அநுபவிக்க விரும்பினாலும் அதை எல்லாம்பெறுவான். இவ்வுலகிலும் புத்ர பௌத்ர பாக்யம் பெற்று அஷ்டைச்வர்யத்தை உடையவனாய் பேரானந்தத்தில் மூழ்குவான்.

தேவீம் மரகதாம்பாம்ய சுக்ரவாரே ஸமர்சயேத்
இஹ புக்த்வாமஹான் போகான் அந்தே முக்திமவாப்னுதயத்

வெள்ளிக்கிழமைகளில் எவன் மரகதம் என்கிற உமாதேவியை அர்ச்சனை செய்கிறானோ அவன் அம்பாளுடைய அனுக்ரகத்தைப்பெற்று இம்மண்ணுலகினில் மிக்க பெருமையெய்தினவனாய் விண்ணுலகினிலும் இமையவர் வணங்க பெருமைபெற்று முக்தியைப்பெற்று வாழ்வான்

இத்யுக்தா சூதமுனினா முனயோ விஸ்மயான்விதா
ஹுசு ப்ரஹ்ருஷ்ட மனஸ வாக்யம் சூதமுனீச்வரம்

இவ்வாறு சூதமுனிவர் அருளிய கதையைச்செவியுற்ற மிகவும் ப்ரீதியடைந்த அம்முனிவர்கள் பரமசிவனுடைய மகிமையை கேட்க திருப்தியடையாமல் மறுபடியும் அந்தசூதமகாமுனிவரைவணக்கமாய் கேட்டார்கள்.

வால்மீகேர் யோகிவர்யஸ்ய ராகவஸ்யாவலோகனம்
கதாபூத் சப்ஸிதம் சாலே தன்னோ ப்ரூஹிதயாநிதே

வாரீர் சிறந்த தவத்தையுடையசூதமகாமுனிவரே! இராமபிரானைக்காண வேணுமென்று அவாவினால் சிவபெருமானை த்யானஞ்செய்து கருணைக் கடலான பரமனருளினால் அப்பேறுபெற்றதாக கூறியருளினீர். அது எப்போது நடந்தேறியது. வால்மீகி மகர்ஷி இராமபிரானை எவ்விதம் கண்ணுற்றுகளிப்புற்றனர். கூறியருளவேணுமென்று பிரார்த்தித்தனர்

சூத உவாச

யதாரக்ஷோகணாதீசம் ராவணம் ஸ்வதுராஹாம்
ஸமூலம் விநிஹத்யா ஜென விபீஷண மரிந்தமம்.
அபிஷிச்யானுஜம் தஸ்ய ஸிதா மானீய தத்வரதாம்

விபீஷண ஹரீசப்யாம் ரக்ஷவானரயூதபை
ஸஹித புஷ்பகம் நாம விமானம் திருஹ்யச
அயோத்யா ஸ்வபுரீ கந்தும் ப்ரஸ்தித த்வராயான்வித

அப்போது சூதமாமுனிவர் சிவபெருமானிடத்தில் பரமபத்தர்களாகிய அம்முனிவர்களுக்கு முக்கண் மூர்த்திப்பெருமானாகிய பரமனின் மகிமையைக் கேட்பதில் உண்டாகிய பெரிய அவாவைக்கண்டு வியப்படைந்து மறுபடியும் சொல்லத்தொடங்கினர்.

வாரீர் முனிவர்களே! சொல்லுகிறேன் கேளுங்கள். ஸ்ரீராமசந்திரமூர்த்தி தண்டகாரண்யத்தில் வாஸம் செய்துக்கொண்டிருக்கையில தமது மனைவியாகிய ஜானகிதேவியை மோசம் செய்து அபகரித்துக்கொண்டுபோன விராதிஸ்தானை இராவணனை வெல்லாட்டுரற்றிக் கொப்பிறுரிந்துண்டாக வெட்டி எறிவிட்டு தமது திருவடிகளில் சரணாகதிசெய்த விபீஷணனை இலங்கைமாநகரத்தில் முடிசூட்டிவிட்டு தேவர்கள் கொண்டாடவும் கந்தர்வர்கள் பாடவும் கின்னரர்களும் ஆடவும் முனிவர்கள் ஸ்துதிசெய்யவும் போரில் உதவிபுரிந்தவானரச்சேனைகளுடன் விபீஷணன் முதலிய ராக்ஷஸர்களுடன் கூட புஷ்பகவிமானத்தில் ஏறிக்கொண்டு தாம் முன்னே வந்த வழியை பார்த்துக்கொண்டு தமது அயோத்யா நகரத்திற்கு புறப்பட்டார்.

விமானேநோர்த்வ மேகேனைவ கச்சன் ஸ்ரீஜானகீபதி
புன்னாக த்ருமஸம்வீதம் நிம்நகாதீர ஸம்ஸ்திதம்
க்ஷேத்ர மேதத் புர பச்யன் விஸ்மயா விஷ்ட மானஸ

ஆகாயமார்கமாகப் போகும் புஷ்பகவிமானத்தில் ஏறிக்கொண்டு போகிற வழியில் நிருத்ய அரண்யநதியின் கரையில் ஸுந்தர புன்னைமரங்களால் சூழப்பட்டிருக்கிற சிவபெருமானுடைய புண்ய க்ஷேத்திரத்தையும் அங்கு இரம்மியமாய் தேவர்கள், கின்னரர்கள், தேவமுனிவர்கள் மற்றும்பலயோகிகள் வந்து தொழுதுவலம்செய்து கூடி இருப்பதையும் கண்ணுற்று வியப்படைந்து

தத் விலோகன ஸஞ்ஜாத ச்ரத்தாதத்ரயா ப்ரபு
உவாச வானராதீப விபீஷண முகாம் ஹரீன்
பச்யதை தத் வனம் ரம்ய ஹரின்யாஸ் திரமார்ச்வயோ

தானும் அப்புண்ய க்ஷேத்திரத்துக்குச்சென்று அப்புண்யநதியில் ஸ்நானம் செய்துவிட்டு பகவானை தரிசனம் செய்துவிட்டு போகவேணுமென்று ஆசைகொண்டு ஸுக்ரீவவிபீஷணன் முதலியோர்களைபார்த்துத்

இப்புண்யநதியின் கரையில் இருக்கும் நந்தனவனம்போன்ற ஸு புன்னைத்தோட்டத்தையும், அதினிடையிலுள்ள அப் புண்யக்ஷேத்திரத்தையும் பார்த்தீர்களா? எவ்வளவு அழகாக இருக்கின்றது என்றார்

இத்யு தீரித மாகர்ண்ய பாவம் விஞாய பூபதே
ஊரயோ ஜானகி சாபி விஞாபன மதாசரன்
ஸ்வாமின் னத்யஸ்தல மிதம் ரமணீய விலோகிதம்
இச்சா மோயத்யனுஞ்ஞாஸ்யாத் அவதீர்ய விமானத
ஸ்தலம் விலோக்ய யாஸ்யாம நசேத்கார்யாவிலங்கனம்

இதைக்கேட்ட விபீஷணன் முதலியவர்கள் அவருடைய மனோபாவத்தை அறிந்துக்கொண்டு தாயும் கபிஞ்சிலே என்காகுத்தா! இலங்கை சென்ற அம்மானே! தேவரீர் அருளியபடி இப்புண்ய நதியும், புன்னைத்தோட்டமும் அதினிடையில் விளங்கு ஜோதியாய் விளங்குகின்ற புண்ய க்ஷேத்திரமும் மிக்க அழகு வாய்ந்திருக்கின்றது. தேவரீருக்கு கார்ய விரோதம் ஒன்றும் வாராதாகில் இவ் இறங்கி இப்புண்யநதியில் ஸ்னானம் செய்துவிட்டு புண்ய க்ஷேத்திரத்தையும் வலம்செய்து தண்டனிட்டு அயோத்தியைக்கு செல்லுவோம். என்று விண்ணப்பம் செய்துக்கொண்டார்கள்.

"வாவி எல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவனங்களெல்லாம் கணநாதர்
பூ உலகில் ஈது சிவலோக மென்றன்றே
மெய்த் தவத்தோர் ஓதும் திருவொற்றியூர்

என்று பட்டணத்துப்பிள்ளைகள் ஓதியபடி இந்த புண்ய க்ஷேத்திரங்களுக்கு ஒப்பாக இருப்பதும் ஓர் ஸ்தலமுண்டோ ?"

இதி ஸம்ப்ரார்திதோ ராம ஸீதயாதைச்சயூதபை
அவருஹ்ய விமானாத் ப்ராக் ப்ரவிச்ய க்ஷேத்ரமுத்தமம்
வால்மீகியோகினுச்ரேஷ்டம் ஸ்வபக்தம் தபஸிஸ்திதம்
நிச்சலம் க்ருசஸர் வாங்கம் த்ருஷ்ட்வாவிஸ்மயமாகத

இவ்வாறு ஸீதை ஸுக்ரீவன் விபீஷணன் முதலியவர்களால் விண்ணப்பம் செய்துக்கொள்ளப்பட்ட ஸ்ரீராமசந்திரமூர்த்தி அவ்விதமே புஷ்பகவிமானத்திலிருந்து இறங்கி அப்புண்ய க்ஷேத்திரத்தில் ப்ரவேசித்து அங்கே

மலர்தலையுலகத்துப் பலபலமாக்கள்—மக்களை மனைவியை
யொக்கலை யொரிஇ—மலையும் பிறவுந்துறந்து நினைவரும்
காடுமலையும் புக்குக்கோடையிற்—கைம்மேனிமிர்த்துக் காலொ
ன்று முடக்கி-யைவகை நெருப்பினடுவத்தினின்று-மாரி
நாளிலும் வார்பனிநாளிலும்-நீரிடைமுழ்கி நெடுதுகிட
ந்துஞ்-சடையைப்புனைந்துந் தலையைப்பனிந்து—முடை
யைத்துந் முண்ணுறுபழன்றுங்—காயும் கிழங்கும் காற்று
திர்சருகும்-வாயுவநீரும் வந்தனவருந்தியும்—கல்லி னுங்
கல்லிலுங் கண்படைகொண்டுந்-தளர்வுறுமியாக்கை
த் தனர்வித்தாங்கவ-ரம்மை முத்தியடைவர்காக—ந்தம்மைத்
தாமே சாலவுமொறுப்பர்,

என வருந்திருவடைமருதூர் மும்மணிக்கோவையான் கூறியருளிய படி தளர்ந்து உடன்மெலிவுறத்தவம் செய்துக்கொண்டு நீண்ட சடையும், பூணூல்மார்ப்பும், பூசினவிபூதியும், ருத்திராக்ஷமாலையும், மூக்கின் நுனியில் அமர்ந்திய கண்களுமாய் நின்ற வால்மீகி மகர்ஷியைக் கண்டு மிக வியப்படைந்தார்.

கோலௌமஹாத்மேத்யா ப்ருச்சந் சிஷ்யமந்தி கவாசினம்

தவமே ஓர் உருவம் கொண்டதுபோல் நின்ற அம்முனிவரைக்கண்டு இங்ஙனம் சில மகான்கள் உண்டாயிருப்பதே! இதென்ன ஆச்சரியம்? என்று மிக்க வியப்படைந்து அருகில் நின்று அம்முனிவருக்குப் பணி விடை செய்யும் ஓர் சீடனைக்கண்டு இம்மஹான் யார்? எதற்காக தவம் செய்கிறார்? என்று கேட்டருளினார்.

ஸோபிப்ராசேத நாம மஹாத்மாஸௌ முனீச்வர
ஸ்ரீமத் ராகவ பூபால விலோகாகாம் க்ஷயாத்ரஹி
க்ஷேத்திரேஸ் மின்தப ஆஸ்தாய த்யாயத்பனி சமீச்வரம்

இறைன் கேளும இமமகான வாலமக எனனும மகாஷ "இவா அலலல மரைச்செய்யும் இராணிய நாகத்தை மல்லலரியுருவாய் பிளந்தும் தேச மறிய ஓர் சாரதியாய்ச்சென்று சேனையை நாசம் செய்தும் உலகத்தை காத்தருளிய பரமன் மீண்டும் தசரத மஹாராஜனின் திருக்குமாரனாக இப்புவியில் அவதாரம் செய்திருக்கின்றான் என்று செவியுற்று 'அவ னை இம்மாம்ஸ சக்ஷுஸ்ஸால் காணும் அவாவில் விழுந்து எங்கும்

தேடிக்காணப்பெறாமல் அவரைக் காணவேணுமென்று பேராவல் கொண்டு இப்புண்யநதியின் கரையில் இப்புண்யக்ஷேத்திரத்தில் சிவபெருமானை தவம் புரிந்து வருகிறார் என்றனன்.

இத்யுக்த ஸஹஸாராமோ விலோக்யப் ராயஸோமுகம்
திஷ்ட்யாவய மிஹாயாதா இத்யுக்த்வா ஸஹஸாமுனிம்
அபிவாந்ய புரஸ்தஸ்ய தேன ப்ரச்ரயாவனதஸ்ததா

இம்மொழிகளைக்கேட்ட பெருந்தகையுடையவனை காருத்தன் தமது திருவடிக்கண் போன்பு வாய்ந்து தம்மைக் காணுமவாவில் வீழ்ந்து நீண்டகாலமாக தவம் புரிந்து சரீரம் மெலி வெய்திக்கண்ணீர் பெருக கணையாழியம்மானை இலங்கைகீரொழச்செற்ற பெருமையனை என்னுகொல் கண்கள் காண்பது ? (மிக விடாய்த்து) என்று எங்கும் நாடிநாடி எங்கும் காணமையால் அகங்கரைந்து வாடும் பரமபக்தனுகிய வால்மீகி மஹரிஷியை அணுகிச்சென்று பாலைத்திவினைகள் செய்து துன்னிக் குதிக்கும் பாபியைப்போல் பரம பக்தனை இவரை இப்பனம் இத்தனை காலம் நோவுபட விட்டிருந்தோமே! நாம் என்ன செய்தோம்! என்று திருவுள்ளம் உள்ளுருகிப்புண்பட்டு நல்லகாலமாய் விமானத்திலேறிக் கொண்டு வேகாக அயோத்திமாநகருக்குப் போய்விடாமல் சற்று இங்கு தங்கும்படிமனமுண்டாயிற்றே எல்லாம் முதற்கடவுளாகிய சிவபெருமான் அருள் என்று தனக்குத்தானே தேறுதல் செய்துக்கொண்டு அம்முனிவரை வலம் செய்து தண்டனிட்டு இத்தனை காலம் முகம் காட்டி உதவப்பெறாமல் பிற்பாடனுய்ப்போந்தமையால் மிக்க வெட்கமடைந்து குனிந்த வண்ணம் நின்றனர்.

அதவால்மிகி ராமாவெள உத்தாய ஸஹஸாமுனி
ஆச்லிஷ்ய பரயா பக்த்யா ஸகத்கதமுவாசஹ

பிறகு வால்மீகி மகாமுனி வெகுகாலமாக எதிர்பார்க்கப்படும் பரமனை தமது அருகில் நிற்கக்கண்டு போதநாகம் கொண்டு நின்றவிடத்தில் நிற்கமாட்டாதவராய், வலம்செய்வதும், அழுவதும், ஆடுவதும், பாடுவதுமாய் பித்தரைப்போல கண்களில் ஆநந்தக்கண்ணீர் வெள்ளமிட ஒன்றும் பேசமாட்டாமல் வாய் தழதழத்துப்போய் உடம்பெல்லாம் புளகாங்கராய் பெரும்பேறு பெற்றவராய்

அத்யமே ஸபலம் ஜன்ம அத்யமே பலிதம் தப
அத்யமே தேவதேவஸ்ய பூஜாதத்புருஷேஷிதா

ஸபலாஜனியத்பூஜ்ய ஜகதாதிமதம்பதி
வ்ய லோகயமஹ யுக்ஷ்மத் தர்சனகாங்க்ஷபாசிரம்

தண்ணிலங்கைக்கு இறைவனைச்செற்ற நஞ்சனே! ஞாலம் கொள்வான் குறளாகிய வஞ்சனே! தாமரைக்கண்ணேதாரஞ்சன நீலமே! என்னை யாளுடைய அப்பனே! இப்பொழுதுதான் எனது ஜன்மம் ஸாபல்ய மாக ஆயிற்று! படாதனபட்டு மனிதர்க்காய் தசரதமகாராஜனின் திருக் குமாரராக அவதரித்த தேவரீரை காணவேணுமென்று ஆசைகொண்டு எங்குத் தேடியும் எனது மாளாத்தீவினைகளின் பயனாக தேவரீரைக் காணப்பெறாமல் நொந்து மிக்கமெலிவெய்தி பத்தர்களிடத்தில் பெருங் கருணைக்காட்டி அருள்செய்து உய்யச்செய்யும் கருணைக்கடலாகிய சிவ பெருமானை இப்புண்ய க்ஷேத்திரத்தில் தியானம் செய்துகொண்டுவந்து கருணாநிதியாகிய பரமனுடைய அருளினால் தேவரீரைக் காணும் பாக் கியத்தைப் பெற்றேன். எமது தவம் ஸபலமாக கைகூடியது. உலகமெ ல்லாம் உய்யுமாறு இப்புண்யநதிக் கரையில், இப்புண்ய க்ஷேத்தி ரத்தில் கோயில்கொண்டெழுந்தருளிய காலகூடாசன சிவபெருமான் அடியேன்மீது கருணை கூர்ந்து அடியேன் கோரிய காரியத்தைத்தலைக் கட்டி அடியேனை உய்யச்செய்தார்

க்ருதக்ருத்யோஸ்மி தேவஸ்ய ப்ரஸாதாதஸ்ய சூலின
பவானப்யனயாஸார்தம் ஸீதயா பரமேச்வரம்
ஆராத்ய பக்திஸம்யுக்த ஸாகேதம் கந்துமர்ஹஸி

தேவரீரும் இக்காலகூட சிவபெருமானை சீதாபிராட்டியுடன் தர்சனம் செய்து அர்ச்சனை செய்துவிட்டு அயோத்யா நகரத்திற்குப் போகலாம்.

க்ஷேத்ரமேதத் காலகூடவிஷாசன மகேசிது
ஸர்வபாபஹரம் போகமோக்ஷ ஸம்ஸாதனம் பரம்

இப்புண்ய க்ஷேத்திரமும் எல்லா க்ஷேத்திரங்களைக் காட்டிலும் மிகப் பெருமை வாய்ந்தது. மாளாத்தீவினைகள் கழிந்துபோயவிடும். இம்மண் ணுலகிலும் விண்ணுலகிலும் மண்ணுனோரிலும் விண்ணோரிலும் சிறிய னாய் பெருவீடு பெற்று பேரின்பமுற்று பெருமை பெற்று வாழ்ந்து போவன்.

இத்யுக்தோ முனினாதே ராகவஸ்துஷ்டமானஸ
பூபுத்ரியாஸஹ வாஹின்யா மாண்யா பாக்ருதப்லவ

தேவம் தத்புருஷாபிக்யம் கால கூடவிஷாசினம்
தேவீ மரகதாபிக்யா பூஜயித்வா விதானத

இவ்வாறு பரமபக்தரான வால்மீகிமகாமுனிவரின் மொழிகளைஉணர்ந்து ஸிதாதேவியுடன் அப்புண்ய நதியில் ஸ்நானம் செய்து பின்பு கால கூடாசன சிவபெருமான் எழுந்தருளிய கோயிலை வலம் செய்து குவித்தகையனராய்ச் சென்று தண்டனிட்டு சிவபெருமானையும் மரகதாம்பாளையும் தரிசனம் செய்தார்.

உவாசதுஷ்டஹ்ருதய வால்மீகிம் முனிமாதராத்

இங்ஙனம் சிவபெருமானையும், அம்பாளையும், தர்சனம் செய்து பேரானந்தமடைந்து மிகவியப்புடன் இதென்ன ஆச்சரியம்! சோரச்சேர்த்தி! நாமெங்கே! இலங்கைமாநகரமெங்கே! இக்காலகூட புண்ய க்ஷேத்திரமெங்கே! இம்மண்ணுலகில் இத்தகைய புண்ய க்ஷேத்திரம் ஒன்று உண்டு என்றாவது, நாம் அங்கே சென்று தர்சனம் செய்யப் போகின்றோம் என்றாவது கனவிலும் எண்ணவில்லையே! இதென்ன பாக்கியம்! இது கிடைத்தது இம்மா முனிவரின் தவத்தின் மகிமையினாலே தான்! என்று உள்ளம் குளிர்ந்து மகிழ்வடைந்து அம்மா முனிவரிடத்தில் நன்றி பாராட்டி அவ்வால்மீகி மகாமுனிவரைப்பார்த்து சிவபெருமான் திருவடிக்கண் அன்பினர் என்று ஆதரத்துடன் கூறியருளினான்.

ராகவ உவாச

பஹூனாம் ரக்ஷஸாம் ஹத்யா ப்ராயச்சித்த மீவாகத
ஆத்மாத்யா சுத்திமதுலாம் ஆபபூஜாப்ரபாவத

இலங்கைநகரில் போரில்எதிர்த்துவந்த அனேககோடிகணக்கான ராக்ஷஸவீரர்களைவதைசெய்து அதனால் வீரஹத்யையென்கிற மாளாத்தீவினைச்சுனையில் ஆழ்ந்து துன்பமடைந்து பரிதவித்து வந்தேன்! இதென்ன விந்தை? இப்புண்ய க்ஷேத்திரத்தை அடைந்து இப்புண்ய நதியில் ஸ்நானம் செய்ததினால் மாளாத்தீவினைகளெல்லாம் மாய்ந்துபோய் மனதிற்கு சுத்தியையும் உத்ஸாகத்தையும் பெறுமையையும் உண்டாயிருக்கின்றது சிவபெருமானை தர்சனம் செய்ததினால் பேரானந்தத்தில் ஆழ்ந்துவிட்டேன். இதெல்லாம் தேவரீருடைய தவத்தின் மகிமைதான்.

ஸாகேதம் கந்து மீச்சாமி பரதா லோகனோத்கத

இப்புண்யக்ஷேத்திரத்தின் அழகையும் பெருமையும் கண்டால் இதை விட்டுப் புறப்பட்டுப் போவதற்கே மனம் வரவில்லை. வீராதி வீரர்களான எமது பெரியோர்கள் ஆண்டுவந்த செல்வம் வாய்ந்த அயோத்திமா நகரும் வேண்டாம். இலங்கைமாநகரமும் வேண்டாம் அந்த மில் பேரின்பத்து சூழ்பொன் விசும்பும் வேண்டாமென்று எண்ணம் உண்டாகின்றது. ஆகிலும் நான் என செய்வேன்? போரில் உதவி புரிந்த வானரர்களையும், இராக்கதர்களையும் விடைகொடுத்து அனுப்பிவிட்டு இப்புண்யநதியின் கரையிலேயே இருந்துவிடுவேன். ஆகிலும் என் அருமைச்சகோதரனாகிய பரதன் நாடுநகர்களையும் பெருஞ்செல்வத்தையும் பெற்றும் நாட்டிலும் காட்டில் வசிப்பவனைப்போல பொன்முடியை கழற்றி சடை முடியை தரித்து பீதாம்பரத்தைக்களைந்து மரத்தோலை உடுத்தி காய் தின்றுக்கொண்டு என்னைக்காண அவாவடைந்து தவம் புரிந்து வருகிறான். அவனைக் காணவேணும், ஆகையினால் இப்போதே அயோத்திமா நகருக்குச் செல்லவேண்டியதாக இருக்கிறது. நான் போகிறேன்.

த்வீசேத்ரவிணும் பூயோதத்வாயஸ்யாமீ போபவாக்
ஆகாமீ சைத்ரமாஸேத்வம் சக்லபக்ஷே ஹிவாஹனம்
காரயித்வோத்ஸவம் சம்போ வாஹநேஷ்யதாகமம்
தீர்தம் ருக்ஷேச சிச்ராயாப காரயஸ்வமஹேசிது

வீராதிவீரனை இராக்கதனை வோர மாய்த்து இலங்கை நகரிலிருந்து யான் கொண்டுவந்திருக்கும் பலவகையான இரத்தினங்களையும், ஆடை ஆபரணங்களையும், சுவர்ணங்களையும் உலகத்தைப்படைத்துக்காக்கும் தலைவர்களாகிய பிரம விஷ்ணுக்களும் தேடுதற்கரிய சிவபெருமான் திருவடிகளில் அர்ப்பணம் செய்துவிடுகிறேன்தேவரீர் அவைகளை எல்லாம் திருவுள்ளம் பற்றி சிவபெருமானுக்கு திருமதின், திருவீதி, கோபுரம் முதலிய திருப்பணிசெய்து திருவீதிவலம் செய்ய பலவாகனங்களைப் பண்ணிவைத்து சித்திராமாஸ சுக்லபக்ஷத்தில் பிரஹ்மோத்ஸவம் செய்து வைத்து தினந்தோரும் ஒவ்வொரு வாகனங்களில் பல வாத்ய கோஷங்கள்முழங்க அந்தணர் வேதவொளி செவிப்பட திருவீதிவலம் செய்துவைத்து சித்திரா நக்ஷத்திரத்தில் திருக்கல்யாணம் அவப்ருதம் துவஜாவரோகணம் முதலிவைகளை ஆகமத்தில் ஓதியவண்ணஞ்செய்து வைப்பீருக.

அஹமத்ரப்ரதிஷ்டாப்ய லிங்கமேகம் விதானத
பூநபித்வாதப்ரஸ்யாமீ யத்பனுஞ்ஞா பவேத்தவ

நான் இவ்விடத்தில்லிங்கத்தை ஆகமங்களில்விதித்திருக்கிறபடிப்ரதிஷ்டை செய்து பூஜை பண்ணிவிட்டு அயோத்திக்குப் போகவேணுமென்று விரும்பி இருக்கிறேன். சிவபெருமான் திருவடிக்கண் அன்புவாய்ந்த மாமுனிவரே! தேவரீர் இதற்கு அநுமதி செய்தருளவேணும் , யான இத்தகைய பெறும்பாக்யம் பெற்றதும் தேவரீருடைய அருளின் பயனே அடியார்க்கும் அடியேனாகிய அடியானைக்கூட்டிக்கொள்ளவும் திருவாசகத்தில்.

தேவர்கோ அறியாத தேவதேவன்
செழும்பொழில்கள் பயந்து காத்தழிக்கும் மற்றை
மூவர்கோன் ஆய்நின்ற முதல்வன்மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத்தெந்தை
யாவர்கோன் என்னையும் வந்தாண்டுகொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியாரோடும்
மேன் மேலுங் குடைந்தாடி யாடுவோமே.

என்று அடியார்க்கு அடியனாக விருப்பதை விரும்பியதாக திருவாய்மலர்ந்தருளி இருக்கின்றார்.

இத்யுக்த ஸ்தாபஸாதீச ததாஸ்த்விதி வதந்ததா
நார்மதம் லிங்கமேகம் சஸமானீய தெளசுப

இவ்வாறருளிச்செய்யவும் அந்த வால்மீகிமுனிவர் அப்படியே செய்யலாம் என்றுகூறி, நார்மதம் என்று சொல்லப்படுகிற ஒரு லிங்கத்தை கொண்டுவந்து கொடுத்தார்.

அத தாசரதிர்லிங்கம் சுபலக்னே மஹோஜிது
யதா விதிப்ரதிஷ்டாப்ய பூஜயித்வாத பக்தித
த்ரவிணம் பூர்தத்வாச தேவே சோத்ஸவகர்மணே

பிறகு தசரதமகாராஜனின் புதல்வராகி, அவதரித்தருளிய திருமால் அந்த லிங்கத்தை நல்ல முகூர்த்தத்தில் ப்ரதிஷ்டை செய்து, பூஜை செய்து, வருஷப்பிரதி வருஷம் உத்ஸவம் செய்துவைப்பதற்காக வேண்டிய பணத்தை ஸமர்பித்தனர்.

அனுஞ்ஞாதோத முனினா ஸீதயா ஸஹஸாநுக
ஸாகேத மகமத் க்ஷிப்ரம் ஆருஹ்யாத முத்தமம்

பின்பு அம்முனிவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, ஸீதையுடன் புஷ்பகவிமானத்தில் ஏறிக்கொண்டு, தம்பியாகிய பரதனைக்காணவேணுமென்றஆசையினால் உடனே அயோத்திமாநகரத்திற்குப்புறப்பட்டார்

வால்மீகி ரபிதத் பூயோ க்ருஹீத்வா தனமாதராத்
தமேவகாரயா மாஸ சைத்ரே மாஸ்யுத்ஸவம் ததா

வால்மீகி மகாமுனிவரும், அவரால் ஸமர்ப்பிக்கப்பட்ட பணத்தைக் கொண்டு திருமதிள், திருவீதி, திருக்கோபுரம், மண்டபங்கள், வாஹனங்கள் முதலியவைகளை மிக்க ஆதரத்துடன் ஆகமத்தில் சொல்லிய படி செய்துவைத்து, சித்திரைமாஸத்தில் உத்ஸவம் பண்ணிவைத்தார்

அஷ்டாத சஸ்ரகாலேஷுஸ்யதோக்தைர்வாஸ கைநவை
க்ருத்வாவப்ருதமங்தேச க்ருஹீதாஞ்ஞோ மஹேச்வராத்

சைவாகமத்தில் ஓதியவண்ணம் 18 வேளைகளில் 18 வாகனங்களில் அலங்காரம் செய்துவைத்து பலவாத்தியகோஷ்டிகள், வேதஒலிகள், நர்தனங்கள் முதலிய பலஆடம்பரங்களுடன் திருவீதிவலம் செய்துவைத்து, 10-ம்நாள் அவப்ருதம் திருக்கல்யாணம் முதலியவைகளைவிமர்சையாக நடத்திவைத்தார்.

கோதாவர்யா மஹாநத்யா தீரமாப முனீச்வர
பிறகு சிவபெருமானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு முன்பு தவம் புரிந்துவந்த கோதாவரீ நதியின்கரைக்கு வந்துசேர்ந்தார்.

வால்மீகேச்வர மாகாத்ம்யம் ஸ்ரீராமாகமனம் ததா
லிங்கப்ரதிஷ்டாபனம் சக்திதம் வோ முனீச்வரா
வக்ஷ்யாமீ ததசேஷேணமிம ங்யத்ச்ரோது மிச்சத

மாமுனிவர்காள்! நீங்கள் கேட்டருளிய விஷயங்களை எல்லாம் விஸ்தாரமாக சொல்லி முடித்துவிட்டேன். இன்னும் ஏதாகிலும்கேழ்க்கவேணும் என்று விருப்பமிருந்தால் கேளுங்கள் சொல்லுகிறேன்.

ஸ்காந்த புராணம் சிவரகஸ்ய காண்டம் உத்தரபாகத்தில்
மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.



ஸ்காந்தபுராணம் சிவரகஸ்ய காண்டம் உத்தரபாகம்
காலகூடாசன க்ஷேத்திர மாகாத்மியம்

## நான்காவது அத்தியாயம்.

பகவந் தேவ தேவேச க்ருபாஞாதாகிலார்தக
ஸூதத்வம் தயயா ஸ்மாகம் ப்ராதுர்பாவம விஷாசின
வக்துமர்ஹஸ்யசேஷேண ப்ரபன்னவன தீக்ஷிதம்

இவ்வாறு சூதமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய விஷயங்களைச் செவியுற்று கண்களினின்றும் வழிகின்ற ஆனந்தபாஷ்பம் சிந்த, நின்று வணங்கி துன்பமொழிந்து களிப்புமிக்க மனத்தினையுடைய அம்முனிவர்கள் வணங்கி வரிசை வரிசையாகத் தலைதாழும்படி வீழ்ந்து நமஸ்கரித்து பொருந்திய பெருவிருப்பானது தூண்டுதலால் வந்தடைந்து நினைத்தற்கரிய பேரன்பாகிய கடலில் ஆழ்ந்து வாரீர் மாமுனிவரே! தேவரீர் அடியேன்கள்மீதுகிருபைகூர்ந்து அருளிய அரிய விஷயங்களை கேட்டுணர்ந்தோம். இன்னமும் பேரருளாளராகியசிவபெருமான் காளகூட விஷத்தை அமுது செய்த கதையை கேழ்க்கவேணும் என்று ஆவல்கொண்டிருக்கின்றோம். அதையும் கூறியருளவேணும். மாயா ஸம்பந்தத்தால் அழிந்துவிடக்கிற உலகம் மூன்றும் உய்யுமாறு சிந்தை செய்த, பேரருளாளரான சிவபெருமான் திருவருளினால்பெற்ற, மெய்ஞான மாமுனிவராகிய தேவரீரே இதை எல்லாம் அறிவீர். தேவரீரே கூறியருளவேணும்.

சூதமாமுனிவர் சிவபெருமான் அருளினால் பெற்ற மெய்ஞானத்தவர் என்பதில் ப்ரமாணம் யாதெனில் ——

முந்தொரு காலத்தின் மூவுலகந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினைபதனாலே
யந்தமின் மறை எல்லா மடிதலைதடுமாறிச்
சிந்திடமுனிவோரும் தேவருமருளுற்றார்

என்று முன்பொருகாலத்தில் மூவுலகங்களிலும் தோன்றிய ஆன்மகோடிகள் செய்த தீவினைப்பயனால் முடிவில்லாத வேதங்கள் அனைத்தும் முதலும்முடிவுந்தவறியழிய, அதனால் முனிவர்களும்,தேவர்களும் மனமயக்கம் கொண்டார்கள். அதனால் மனதில் சிறிதும் ஞானமில்லாதவர்களாய்ச்சொல்லப்பட்ட வேதமார்கத்தை யொழித்து,பலவிய சமய நெறிகளை ஏற்படுத்தி, தருமங்கள் அனைத்தையும் அரிய தீவினை யென்

றொழித்து, பாவவழிகளே தருமமென்று கருதிப் பலரும் செய்துகொண்டிருக்க, அதைத் திருமாலும் பிரமாவும் பார்த்து, "சிவனருளாலன்றித் தீர்கிலதிது வென்றார்" என்று இது சிவபெருமான் திருவருளாலன்றி நீங்காதென்று சிந்தித்து, சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கயிலாயமலைக்குச் சென்று சிவபெருமானை தெண்டனிட்டு கருமணிமிடறுடைக் கடவுளே நெற்றிக்கண்ணையுடைய எமதாண்டவரே.

இறந்தனவரம்புலகெவரும் வேதநூன்
மறந்தனர் பவநெறிமல்கி நாடொருஞ்
சிறந்தன வனைவயுயிர்செய்த தொல்வினை
யறிந்தருளைய நீயமைத்தவாயினும்
அங்கவர்போத முற்றுசேரி இமனச்
சங்கையும கன்று நின் சரணமேயுறப்
புங்கவ சிறிதருள் புரியவேண்டும்

என்றதுபோல விண்ணப்பம் செய்துக் கொள்ள சிவபெருமானும் சிறிது சிந்தித்து, திதிகருத்தாவாகிய திருமாலே! பயப்படவேண்டாம். இனிமையாகிய ஒருமார்கத்தை அதற்காகச் சொல்லுகின்றோம். விருப்பத்துடன் திதித்தொழில் செய்கின்ற உனது கலைத்தொகுதிக்குள் குற்றமற்ற ஓர் கலையோடு கடல் சூழ்ந்த நில உலகத்தில் வியாஸனென்று கூறும் ஞானமுனிவனாகத் தோன்றி

ஆதியினந்தி பாலளித்த தொன்மை சேர்
காதைகள் யாவையுங் கருணையாலவன்
கோதாவுணர் சனற்குமாற் கீந்தன
னீதிபோடவனிடை நிலத்தில் கோட்டிபால்

என்று முதலில் நந்திக்கு நாமுபதேசித்த புராணங்களனைத்தையும் கிருபையினாலே அந்நந்தி குற்றமறவுணரும் சனத்குமாரமுனிவனுக்கு உபதேசித்தனன். அந்த சனத்குமார முனிவரிடத்தில் நிலவுலகத்தில் கேட்கக்கடவாய். நன்கறிவுள்ள சிடர்களுக்கு உபதேசித்து, எங்கும் பரவச்செய்வாய் என்று திருவாய்மலர்ந்தருள, திருமாலும் நல்லதென்று சம்மதித்து வணங்கி எழுந்து முதற்பெறும் கடவுளாகிய சிவபெருமானிடத்து விடைபெற்றுக்கொண்டு இம்மண்ணுலகில் வியாஸராய் வந்தவதரித்து, சனத்குமாரிடத்தில் புராணங்களனைத்தும் ந்தியுணர்ந்து

வேதமதுணர்தரு வியாஸமாமுனி
காதலனுமெனைக் கருணை செய்திவை
யோதுதி யாவருமுணர வென்றன
னாதலின் னுலகினிலவற்றைக் கூறினேன்.

என்று வேதங்களையோதாதுணர்ந்த சிறந்த வியசாமாமுனிவர் சிஷ்யனுகிய சூதமாமுனிவர்மீது திருவருள்சுரந்து இப்புராணங்கள் அனைத்தையும் யாவருமுணரும்படி சொல்லக்கடவாய் என்று கட்டளையிட்டருளினர். ஆகையால் இங்கிவ்வுலகத்தில் அப் புராணங்களனைத்தையும் சிவபெருமான் அருளினுல் பெற்றார்.

உலகத்தில் உயிர்களெல்லாம் மெய்ஞானத்தை யடைந்து அஞ்ஞானத்தை யொழித்து, மனச்சந்தேகம் நீங்கி தமது திருவடிகளையே யடையவேணுமென்று முதலில் சிவபெருமான் நந்திக்கு உபதேசிக்க, அவர் சனத்குமாரருக்கு உபதேசிக்க, அவரும் வியாஸபகவானுக்கு உபதேசிக்க, அவரிடத்தில் ஓதியுணர்ந்த மெய்ஞானமாமுனிவராகிய தேவரீரே அர்த்தங்களை எல்லாம் உள்ளபடி அறிவீர். தேவரீரே எல்லாவற்றையும் கிருபைசெய்து கூறியருளவேணுமென்று பிரார்த்தித்தார்கள்

இதிவிஞ்ஞாபிதஸ் ஸூத முனிபிஸ்தத்வதர்சிபி
ஹ்ருதித்யாத்வா மஹேசானம் வாசாப்ராஹாதி புத்திமான்

இங்ஙனம் தத்வத்தை அறிந்த முனிவர்களால் பிரார்திக்கப்பட்ட சூதமாமுனிவர்

என்சொல்கேனென் சொல்கேன் என்னேழைமை இருந்த பாவம்
புன்சொல்லார் பாடிப்பாடிப்புகழ்ந்துகைந்துரையா நின்னேன்
வன்சொலார் முன்செலாத மதுரையில் சொக்கே வேத
முன்சொலாலுன்னை வாழ்த்தி யுன்னையுமுணராதன்றே

என்று பரஞ்சோதி முனிவர் ஓதியவண்ணம் வேதமெல்லாம் சிவபெருமான் திருவாக்காகையால் அவன் திருவருளன்றி ஒன்றுமுணரலாகாதென்று கருதி சிவபெருமானை தமது ஹ்ருதயாரவிந்தத்தில் பதியவைத்து, தியானம் செய்து, வேதார்தமெல்லாம் சுலயமாய் கற்று, பிறர்க்கு உபதேசிக்கவல்ல ஸூக்ஷ்மபுத்தியை யுடையவராய் காலகூடவிஷத்தை அமுதுசெய்த கதையை விஸ்தாரமாக கூறத்தொடங்கினர்

புராஸ்வர்கே மராவத்யா தேவாதீச சசிபதி
க்ருபர்ஸ்பதம் மஹேசஸ்ய ஸாம்ராஜ்யம் பரமம் சுத

முன்னொருகாலத்தில் வச்சிராயுதத்தை யேந்திய தேவேந்திரன் வாழ்கின்ற சுவர்கலோகத்தில் அமராவதி நகரத்தில் தேவாதி தேவனாய் மூன்று உலகங்களையும் ஆண்டுவரும் தேவேந்திரன்

தேவர் வஞ்சிறையை மாற்றிச்சேண்மகபதிக்கு நல்கி
மேவிய குமரமூர்த்தி வியத்தக வுறையுமாதோ

சிவபெருமானது நெற்றிக்கண்ணிடத்து அவதரித்துத் தூய்மைபொருந்திய வேற்படையினால் சூரபதுமனழியும்படி கொன்று, தேவர்களது கொடிய சிறையை நீக்கிச் சொர்கலோகத்தை இந்திரனுக்குக் கொடுத்து எழுந்தருளிய குமாரக் கடவுள் சிறப்போடு வீற்றிருந்தருளினார், என்று கூறியவண்ணம் அசுரர்களால் நலிவு ஏற்படும் காலங்களில் அசுரர்களுக்கு தீமைசெய்திட்டு தேவர்களை பாதுகாத்தருளும் சிவபெருமான் திருவருளால் பெற்ற சுவர்க ஸாம்ராஜ்யத்தைப் பெற்று மூன்று உலகங்களையும் செங்கோல் செலுத்தி வாழும் நாளிலே

ஸஜாது ஸ்வர்கவாஹிந்யாம் ஸார்தமப் ஸரஸாம் கணை
தேவைஸ்ஸாகம் ஸ்னானஹேதோ கத்வாஸ் காத்வாமஹேசிது
சிந்தாமணிமயம் லிங்கம் ப்ரதிஷ்டாப்ய விதானத
பூஜயித்வா இராஸ்துத்வா லேனயா சதுரங்கயா

ஒருநாள் கங்காநதியில் ஸ்னாநம்செய்வதற்காக தேவர்களுடனும், அப்ஸரஸ் ஸ்திரீகளுடன் புறப்பட்டுப்போய் அந்நதியில் ஸ்னானம் செய்துவிட்டு கரையில் சிந்தாமணி மயமான லிங்கத்தை ஆகமங்களிலோதிய வண்ணம் பிரதிஷ்டைசெய்து, பூஜைசெய்து, வலம்செய்து, ஸ்துதிசெய்து நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு திரும்பிப் புறப்பட்டான்

ஸைஹராவணமாதங்கம் ஆருஹ்யாப் ஸரஸாம் களம்
தௌக்பத்ரிகம் கேளியுக்தம் அனுபூய சனைரய
ஆகச்சன் அமலாஸ்ஸார்தம் மத்யே மார்கம் மஹாமுனிம்

அப்போது ஐராவதம் என்னும் யானையின்மீது ஏறிக்கொண்டு

பேரி கொக்களை சல்லிகை காடிகை பிலி
சாரி கைத்துடிதன்னுமை குடமுழாத்தடாரி

போரியற்படு காகனம் வயிற் முதற்புகலுஞ்
சிரியத்தொகை யியம்பினர் பாறிடத்திரலோர்.

என்று சொல்லுகிறபடி பேரிகை, வலம்புரிச்சங்கு, சல்லாரி, காடிகை பீலி, சாரிகை, உடுக்கை, மத்தளம், குடமுழா, தடாரி போரினிடத்திற் பொருந்திய எக்காளம் முதலாகச் சொல்லப்பட்ட சிறந்த வாத்தியத் தொகைகளனைத்தையும் தேவர்கள் வாசிக்க, தேவஸ்திரிகள்பாட, கின்னரர்கள் ஆட, குதிரையுத்தம், யானையுத்தம், மல்லர்யுத்தம் முதலிய கேளிகளைச் செய்ய, ஓர் பெரிய மனிதர் ஊர்வலம் செய்வதுபோல ராஜ வீதியில் ஊர்வலமாய் வந்துக்கொண்டிருந்தான்.

தூர்வாஸஸம் ஸமாயாந்தம் பஸ்மருத்ராக்ஷதாரிணம்
ஜடாதரம் விலோக்யாபி கஜாங்காவத தாரஸ

வரும்வழியில் நீண்டசடையும், பூணநூன்மார்ப்பும், பூசின விபூதிமேலணிந்த பொட்டும், இரண்டங்குலங்கள் தொங்கவிட்ட வெள்ளை முத்திரையும், தோலால் விரித்துத்தளித்த அரைஞாணும், விபூதிப் பொக்கணம், தொங்குகின்ற தோளும், படிகமாலையில் விளங்குகின்ற கட்டங்கமும், உதரபந்தனமும், வேங்கைத்தோலால் கட்டிய கோவணமும், புலித்தோலுடையும், இடைத்தோளிலிட்ட யோகபடிக்கையும் அணிந்த (தூர்வாஸர் என்ற மகரிஷியானவர்) வெண்மையாகிய முப்புரி நூலினோடு முத்திமிடையிலே யிட்டு கோவை செய்த உருத்திராக்ஷமணி வடம் வீசுகின்ற வொளியால் அடியார்களை மறைத்த மலபந்தமாகிய விருளை போட்ட குற்றமற்ற பவுத்திரம் வலதுகையில் பிரகாசிக்க ஞானநூலை யெழுதிய புத்தகம் இடக்கையிலிருந்து அழகுசெய்ய தேனையுடைய தாமரைக்குள் சத்தியாப்நின்ற வண்டுகளின் ஓசைபோல நாவுமிகத்தழும்புடைபெயர்ந்துள் எழாநின்ற வேதவொளி அடியார்களுடைய திருச்செவிகளாகிய வழியேசென்று உள்ளமாகிய வயலிலே புகுந்து உலகையாகிய பயிரைவளர்க்க குளிர்ச்சிபொருந்திய முத்தை யொத்த பற்களையுடைய திருவாய்ச் சிறிதரும்ப எதிரில் நின்று தேவேந்திரனை அனுக்ரஹம் செய்யவேணுமென்று எண்ணம் கொண்டார் தேவேந்திரனும் தனது பணச்செருக்கினால் சிறிதும் லக்ஷ்யம் செய்யாமல், கண்ணெடுத்தும் பாராமல் யானையைவிட்டு கீழே இறங்கவுமில்லை. வாயுபகாரம் ஒன்றும் செய்யவில்லை. திரைலோக்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்ற மதத்தால் சிவபெருமான் அடியார்களின் பெருமையை அறிந்திலன்.

நாதன் தன்னையும் நாதனதம்புயப்
பாதஞ்சேர்ந்த பாவினர் தம்மையும்
பேதஞ்செய்வது பேதமை நீரென
வேதங்கூறும் விழிப்பொருள் பொய்க்குமோ

என்று சிவபெருமானையும், அச்சிவபெருமானது தாமரைமலர் போன்ற திருவடிகளையடைந்து துதித்தவர்களையும் வேறுபடுத்துக் கூறுதல் அறியாமை என்று வேதம் சொல்லுகின்ற உயர்ந்த பொருளானது பொய்க்குமோ என்பதை சிறிதும் உணர்ந்திலன்.

ததாபி ஸோடப்ரதிக: தூர்வாஸா: சிவவல்லபக:
அப்யேத்ய ப்ரதிதௌ தஸ்மை மகேந்திராயேச்வரீத்ருதாம்

கலபகோபர் என்று உலகெங்கும் புகழ்பெற்ற தூர்வாஸ மாமுனிவர் இங்ஙனம் தேவேந்திரன் அலக்ஷியம் செய்தபோதிலும் இவன் சிவபெருமான் அருள்பெற்ற அடியன். இவனுக்கு நான் ஒரு தீங்கு நினைத்தால் சிவபெருமான் திருவுள்ளம் நைந்த பழிப்பேயாம். என்று கருதி உள்ளங்கடாமல் சிறிச் சிவந்தகண்களின் வழியாக வெளிக்கிளம்பிய பெருங்கோபமாகிற தீயை, பொறுமையாகிற நீரினால் ஆற்றி சிறிதும் கலங்காமல் அனுஷிச்செல்று, உமாதேவியின் ப்ரஸாதமான புஷ்பமாலையை தேவேந்திரனுக்குக் கொடுக்கவேணுமென்று எண்ணங்கொண்டு கொண்டுவரப்பட்டதாகையால் தேவேந்திரனுக்குக் கொடுத்தார்.

ஏகஹஸ்தேன தாம்மாலாம் ஸ்வாராஜ்ய மதமோஹித:
ஆதாய கரிராஜஸ்ய மூர்த்னிப் ராக்ஷிபதம்ஜஸா

அப்பொழுதும் தேவேந்திரன் யானையைவிட்டுக் கீழே இறங்காமலே தூர்வாஸமுனிவொடுத்த மாலையை ஒருகையால் யானையின் மாவட்டியில் வாங்கிக்கொண்டு யானையின் தலைமேல் போட்டுவிட்டான். தனது ஐஸ்வர்யச்செருக்கினால் உமாதேவியின் ப்ரஸாதமான அப்புஷ்பமாலையை மதித்தானில்லை.

" செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம்
பெருமித நீர்த்து "

தனமதமும், கோபமும், காமமும், ஆகிய குற்றங்கள் நீங்கிய அரசரது செல்வம் காம்பீரமான தலைமையை யுடையதாம் என்ற பழமொழியை சிறிதும் எண்ணவில்லை.

" செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப்பெறின் "

என்று அடங்குவதே நமக்கு அறிவாவது என்று உணர்ந்து, திரிகரணத்தாலும் ஒருவன் அடங்கி நிற்கப்பெருவானுனால் அந்த அடக்கம் நல்லோரால் அறியப்பட்டு அவனுக்குப் புகழை உண்டாக்கும், என்று கூறியபடி தேவேந்திரனென்கிற அகங்காரத்தை அடக்காமல் அகங்காரத்தால் தவத்தின் பெருமையை உணர்ந்திலன்.

பதோன்மத்த: கரிவராஹ தாம் ததாக்ஷிப்ய பூதலே:
மமர்த பாதேனைகேன பச்யத்யே வமுனென ததா

மதச்செருக்கினுல் ஒன்றும் அறியாத அந்த யானையும் அம்மாலையை தமது துதிக்கையினுல் இழுத்து, தரையில் தள்ளி, காலால் மிதித்து, நசுக்கிவிட்டது.

அதரோஷ பரிதாத்மா முனீந்திரோ ரக்தலோசன:
சசாபத்யுஸதாரோதம் ஸாம்ராஜ்ய மதமோஹிதம்

இதை எல்லாம் கண்ட தூர்வாஸமாமுனிவருக்கு உள்ளத்தில் கோபாக்னி கிளம்பியது கண்கள் நெருப்புப்பொறிகளைக் கக்கின. மூக்கினின்றும் புகையுண்டாயின. சரீரத்திலுள்ள உரோமங்களெல்லாம் நெருங்கிய நெருப்புப்பொறிகளைச் சிந்தின.

நெளித்த புருவத்துணைகணெற்றி மிசை சென்ற
களித்தன வெயிற்றினிரை கவ்வியதரத்தைச்
செளித்தன துடித்தன தெழித்தவிதழ் செவ்வாய்
குளித்தது மனங்கடன கூடமு முடிக்க

என்று கூறியவண்ணம் நெளித்த இரண்டு புருவங்களும் நெற்றிக்கு மேற்சென்ற பல்வரிசைகள் உதட்டை மடித்துக் கடித்தன. உதடும் சிவந்தவாயும் நெறுங்கித் துடித்துக் கர்ச்சித்தன. மனமானது அண்டகூடத்தை அழிக்க நினைத்தது. இவ்வாறு பெருங்கோபங்கொண்டு தேவாதிதேவனை இந்திரனைச் சபித்தார்.

அரேசக்ர மதாந்தஸ்த்வம் யதோமாலாம் மயார்பிதாம்
காத்யாயனீப்ரஸாதம் போ:த்யக்தவாந் கரிமூர்தனி
தத்ஸ்வாராஜ்ய பதப்ரஷ்ட: வசமேஷ்யதி துர்ஹ்ருதாம்
ராஜ்யம்ச சத்ருவசகம் பவிஷ்யதி நஸம்சய:

"அடே இந்திரா! நீ மூன்று உலகங்களுக்கெல்லாம் செங்கோல் செலுத்தும் வீரதிவீரனென்று மிக்க கர்வங்கொண்டு சிறிதும் என்னை யறிந்திலை, சிவபெருமான் பெருமையையும் அறிந்திலை.

மேலொன்றுளதோ விளம்ப வெவரெவர்க்கு
மூலந்தலை தேறியா முன்னோன் கடலெழுந்த
வாலந்தனை யுண்டமரர்க்கமுதளித்த
சீலந்தனை நீ சிறிதுந் தெறிந்திலையோ

சொல்லுதற்கு வேறொன் றிருக்கிறதோ. எவராலும் முதலும் முடியுங் காணப்படாதவராகிய சிவபெருமான், கடலில் தோன்றிய ஆலகால விஷத்தை தாமுண்டருளி, உங்களுக்காக அமிருதத்தைக் கொடுத்தருளிய முறைமையினை நீ சிறிதும் தெரியவில்லையோ? சிவபெருமான் உனக்காக பல அசுரர்களை நாசம்செய்திட்டு உயிர்மீட்டிய உபகாரங்களை நீ மறந்திட்டாய்.

அடன்மேவு சலந்தரனாதியராயப
படி மேலுளோர் பகைஞரவர்தா
முடிவாரானோடி முரண்டிடலுங்
கெடுமாறு புணர்த்தது கேட்டிலையோ

வலிமை பொருந்திய சலந்தராசுரன் முதலியவராக உலகத்திலிருந்த அசுரர்கள் இறப்பவர்களாய் சிவபெருமானொடு பகைகொண்டெதிர்க்கவும், அவர்கள் இறக்கும் வண்ணம் உபாயம் செய்தருளினமையை நீ மறந்தாய். அடா மூடனே! உனக்காகவே உமாதேவியின் ப்ரஸாதமான மாலையைக்கொண்டு வந்தேன் அதை லக்ஷியம் செய்யாமல் தரையில் மிதித்துவிடும்படி போட்டுவிட்டாய். அதனால் சிவபெருமான் திருவருளினால் பெற்ற ஸ்வர்காரஜ்யத்தை இப்பொழுதே இழந்துவிடப்போகிறாய். உன்னுடைய ராஜ்யமெல்லாம் சத்ருக்களுக்கு ஆதீனமாகப் போய்விடப்போகிறது என்று சபித்தார்.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்"

என்னும் பழமொழியின்படி சாபானுக்ரஹ சக்தியையுடைய முனிவரது மகிமையை பாராமல் அறியக்கூடுமோ?

உன்னை யெண்ணலரும்பல வெண்ணலா
மன்னை வெண்ணிலா மாமலர்ப்பண்ணவன்

றன்னை யெண்ணலர் தண்டுளவோனையும்
பின்னை யெண்ணலர் பிஞ்ஞக னன்பினோர்

என்று சிவனடியார்கள் உன்னையும் ஒரு பொருளாக நினைக்கமாட்டார்கள். தேவர்களையும் மதிக்கமாட்டார்கள். அத்தேவர்கள் தலைவனாகிய இந்திரனையும் கருதார்கள். பெரியதாமரை மலரிலிருக்கின்ற பிரமனையும் சிந்திக்கமாட்டார்கள். குளிர்ச்சிபொருந்திய துளசிமாலையை யணிந்த திருமாலினையும் நினைக்கமாட்டார்கள் அப்படியிருக்க பிரமனது திருவடிக்கண் அன்புவாய்ந்த வீரசைவ சிரோமணியாகிய இம்முனிவர் இந்திரனை ஒரு பொருளாக நினைக்கவல்லரோ? "என்னன்று கொன்றார்க்கும் உய்வுண்டாம். உய்வில்லை செய்தநன்றி கொன்றமகற்கு" என்று செய்த உபகாரங்களை மறந்த நன்றியில்லாத இவனை சபித்துவிட்டார் என்பது ஓர் ஆச்சரியமோ?

இதிசப்தோ முனீந்திரேண வேபமான தனுர் பயாத்
ப்ரணம்ய பாத'யா ஸ்தஸ்ய சாபமோக்ஷ மபருச்சத

இவ்வாறு தூர்வாஸமாமுனிவர் கோபங்கொண்டதையும், சபித்ததையும் கண்ட தேவேந்திரன் மிக்க பயங்கொண்டு நடுநடுங்கி என் செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்று "ஐயோ! நான் செய்வேன்! அஹங்காரங்கொண்டு மதியாமல் இந்தப்பெரிய அபராதத்தைச் செய்துவிட்டேனே!

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண்டற்று"

என்று திருக்குறளில் ஓதியவண்ணம் அஹங்கார மமகாரங்களை துறந்தவரது மகிமையை அளவிட்டுக் கூறத்தொடங்காமல் உலகத்திலே பிறந்து இறந்தவர்களது அளவைக் கூறத்தொடங்குவதுபோல் முடியாததாம், என்று தவத்தினர் பெருமையை யான் அறியாமல் இங்ஙனம் மதித்து இருந்துவிட்டேனே என்று பலவாறு ப்ரலாபித்துத் தத்தளித்து இம்மாமுனிவரின் திருவடிகளையே சரணாகதிபற்றுவதைத்தவிட உய்யும் வகையில்லை. என்று எண்ணி அம்மாமுனிவரது திருவடிகளில் விழுந்து தெண்டனிட்டு புணர்த்து கையினராய் 'ஸ்வாமி! அடியேன் செய்த குற்றப் க்ஷமித்தருளவும். அறியாத்தனத்தால் அடியேன் அவ்விதம் நடந்துக்கொண்டேன். அடியேன் செய்த பாபத்தின் பலத்தை அனுபவித்தே தீரவேண்டும். அதில் சந்தேகமே கிடையாது, ஆகிலும் தேவரீர் அடியேன்மீது க்ருபைக் கூர்ந்து சாபம் நீங்குங்காலம் (விரை

வாக இருக்க) அனுக்ரக கடாக்ஷித்தருளவேணும். சாபந்தீருங் காலம் எப்போது? எவ்வாறு? என்பதையுந் திருவாய்மலர்ந்தருளவேணும், சிறிய ஞானத்தினனாகிய அடியேன்மீது கோபங் கொள்ளவேண்டாம். ஐஸ்வர்ய செருக்கினால் யானே என்னை அறிந்துகொள்ளவில்லை. சிவ பெருமான் பெருமையை எவ்வாறு நினைக்கப்போகிறேன். என்றிவ் வாறு ப்ரலாபம் செய்யத்தொடங்கினன்

ஸோபி காக்கமஹைபூக்வா முனி:ப்ராஹ தயாந்வித:
ஈச்வரஸ்ய ஸாமீதேன ஸர்வஸத்வ தடாவத:
ஐஸ்வர்யா விஷ்ணுநாபின்யா மோஹின்யா சக்திஸம்பதா
பயோம்புதிம மந்த்ரவாக ஸததா முத்பாத்ய யத்னத:
பித்வா தைதயாந்விநிர்ஜித்ய புன: ஸ்வாராஜ்யமேஷ்யஸி

இந்த பரிதாபமான மொழிகளைக் கேட்ட தூர்வாஸமாமுனிவர்

“ அகழ்வாரைத்தாங்கும் நிலம்போலத்தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை ”

தன்னைத் தோண்டுவோரை விழாமல் தாங்கிக்கொள்ளுகின்ற பூமிபோலத் தம்மை அவமதிப்பவரைப் பிரதிசெய்யாமல் பொறுத்துக்கொள்ளுதல் தலைமையான தருமமாகும் என்ற பழமொழியின்படி மிக்க இரக்கங்கொண்டு, அடா தேவேந்திரா! சிறிதும் உன் ஸ்வரூபத்தை நீ உணராமல் மகாபாதகமான இழிவான காரியத்தைச் செய்தாய். நீசெய்த பாதகம் எத்தனைகாலம் அனுபவித்துப்போந்தாலும் சிறிதும் அழியாதது

வானமேத்தயான் வைகுந்தவாழ்வு பெற்றதுவும்
ஞான நான்முகன் சத்திய உலகம் நண்ணியதுவும்
மேனிண்ணவர் தச்சபவார்க்கை யெய்தியதும்
மாயையர்த்தவனருட் குளிபநச்சனைப் பயனால்

என்று காஞ்சிப்புராணத்தில் கூறியவண்ணம் திருமால், பிரமன் முதலியோரும் சிவபெருமானை பூசித்தல்லவோ சகல செல்வங்களையும் பெற்றது. சிறிய ஞானத்தனாகிய நீ யதையெல்லாம் சிறிதும் உணராமல் அல்பமான செல்வத்தைப்பெற்ற ஆதலால் அஹங்காரங்கொண்டு சிவ பெருமானையும் மதித்தாயில்லை மூடனே!

தாதையைத்தாளற வீசிய சண்டிக்கிவ்வண்டத்தொடு மூடனே
பூதலத்தோர்கள் வணங்கப்பொற்கோயிலும்போனகமும் அருளிச்

சோதிமணிமுடித்தாமமு நாமமுந்தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்திற்கு பரிசுவைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

என்று அடியார்கள்செய்த குற்றத்தை குணமாகக்கொண்டு அருள்புரிவரான சிவபெருமான்

ஈசனே காப்பனல்லால் யாரையும் பிறரால் தம்மால்
ஆசறப்போற்றலாகாதது துணிவாகுமீண்டு

என்று கூறியவண்ணம், காத்தருள்வரே யல்லாமல் எவர்களேயும் பிறரால் குற்றமறகாத்துக்கொள்ளுதல் முடியாது. ஆகையால் சிவபெருமான் அருளினால் மேறுபடியும் அசுரர்கள்கையில் சிக்கிய ராஜ்யத்தை பெருவாயாக. விஷ்ணுவென்ற உருவங்கொண்ட மோஹினி என்ற பெயருடைய சிவபெருமான் சக்தியினால் க்ஷீரஸமுத்திரத்தைக் கடைந்து அமுதத்தை உண்டாக்கி அதை பானம் செய்துவிட்டு அசுரர்களே ஜயித்து மீண்டும் த்ரைலோக்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்று வீற்றிருப்பாயாக. அதுவரையில் இப்பாதகத்தின் பயனுக சிறிதுகாலம் ராஜ்யத்தையும், பந்துக்களேயும் துறந்து பெருந்துன்பக் கடலில் ஆழ்ந்திருப்பாயாக என்றனர்.

இத்யுக்த:ஸமஹோ ந்திரோபி விஷாதாவர்திதானன:
முகயா ஸேனயா ஸார்தம் வாரிதாதோத்ய காதயா
அந்தர்பவனமாஸாத்ய சக்ரஸ்தூஷ்ணீம் பபூவஹ

இதையெல்லாம் கண்ட தேவர்கள் மிக வருத்தமடைந்து என்ன செய்வதென்று ஒன்றும்தோன்றாமல் ஸ்தம்பித்து நின்றுவிட்டனர். ஆடல்கள், பாடல்கள் நின்றுவிட்டன. தூர்யம் முதலிய வாத்யகோஷங்களும் அடங்கிவிட்டன. தேவேந்திரனும் துயரத்துடன் மனக்கவலே அடைந்து, தலேகுனிந்தவண்ணம் தமது அந்தப்புரத்திற்குள்சென்று, ஏகாந்தமாய் நின்று ஸ்தம்பித்துவிட்டான். ஒருவரோடும்பேசவில்லே.

எதஸ்மின்னந்தரே தைத்யா: பலிபாணபுரோகமா:
ஸம்பூய மந்த்ரயித்வா ஜெனஜேதுகாமா:ஸுரேச்வரம்
ஸஸேனு: புரமாஸாத்ய ஸஹஸ்ராக்ஷஸ்யபிப்யத:
விஜித்யதாஸா தேவாந் மருத்வந்தம் அதாத்ருவன்

காசிபமுனிவருக்கு யானையினிடத்தில் சிலபிள்ளேகள் பிறந்தார்கள். அவர்கள் அசுரர்கள் எனப்படுவோர்கள். ஏனென்றால்

எங்கள் பானென்னலின் யாமந்தோன்றவாற்
றங்கமாகிருதா் தங்கதியிற்றன்னினி
ருங்களுக்கொன்னலரும்பர் யாவ நந்
தங்கடம் முயற்சியாற்றலைமை பெற்றுளார்

என்று கூறியவண்ணம் இராத்திரி பிறந்தமையால் உயர்வாகிய அசுரப்பிறவியை அடைந்தார்கள். இவர்களுக்கு பகைவர்களாயுள்ளவர்கள் தேவர்கள். ஆதலால் அசுரர்கள் "முன்னை நுங்கண் முதற்குருப் பார்கவனன்னவன்" என்று பண்டைகாலம் தொடங்கி முதலாசிரியனை சுக்கிராச்சாரியரின் உபதேசத்தினால்

இந்திரனென்போன் வானோர்க்கிறையவனவனே நென்ன
ந்தமில் வுணர் தங்களாருயிர் கொண்டானன்னா
னாய்ந்தனன் போகாவண்ணமொல்லை யிலவனைப்பற்றி
மைந்துறு திகளஞ் சேர்த்திவன் சிறைபுரிதியாதோ 1

சிறையினை யிழைத்துச்செய்யும் தீயன பலவுஞ் செய்து
மறைபுகன் முனிவர்தம்மை வானவர்தம்மைத்திக்கி
னிறையவர்தம்மை நாளுமேவல் கொண்டிடுதியன்னா
ருறைதரு பதங்களெல்லாமுதவுதியவுணர்க்கம்மா 2

இந்திரனென்பவன் தேவர்களுக்கரசன். அவன்றான் முன்பு அநேகம் அசுரர்களது அரிய உயிரை அழித்தனன். அவன்பிழைத்துப்போகாவண்ணம் அவனை விலங்கில் பிடித்து வலிமிக்க விலங்குப்பூட்டி வலிய சிறையில் இடக்கடவீர். இந்திரனைச்சிறைசெய்து செய்யவேண்டிய பலகொடுமைகளையும்செய்து, வேதமோதுகின்ற முனிவர்களையும் தேவர்களையும், திக்குபாலகர்களையும் ஏவல்கொள்ளக்கடவை. அவர்கள் வசிக்கும் பதவிகளையெல்லாம் அசுரர்களுக்குக் கொடுக்கக்கடவை என்ற உபதேசத்தினால் தேவர்களுடன் பகைமை பாராட்டி, அடிக்கடி போர்செய்வது, அடிப்பட்டு தோல்வியடைந்து ஓடிப்போய்விடுவது, மறுபடியும் ஏதோ ஒருசமயம் பார்த்து போர்செய்ய எதிர்ப்பது இதுவே அவர்களின் ஸ்வபாவமாய் இருந்தது. ஆனாலும் தேவர்கள் தர்மசிந்தை யுள்ளவர்களாயும் சிவபெருமான் திருவடிக்கண் அன்புவாய்ந்தவர்களாதலால் அசுரர்களால் நலிவு ஏற்படும் காலங்களில் சிவபெருமான் தானே அவதரித்து அசுரர்களை நிரவலித்து தேவர்களை காப்பது

வழக்கம். ஆகலால் எத்தகைய ஆபத்து நேரிட்டாலும் தேவர்கள் ஜெயித்துப்போடுவதே வழக்கம். ஆனாலும் அசுரர்களும் விடா முயற்சி செய்துகொண்டிருப்பார்கள். ஸமயம்வாய்ந்த காலத்தில் தேவர்களை தாக்குவார்கள். விடமாட்டார்கள் தங்களாலியன்றியமட்டும் உபத்திரம் செய்வார்கள். இது அசுரர்களின் ஸஹஜமான தர்மமாய்விட்டது இப்படியிருக்கும் காலத்தில் சுக்கிராச்சாரியார் தமது யோகபலத்தால் தூர்வாஸமாமுனிவரின் சாபத்தின் வரலாற்றை அறிந்து அசுரர்களை அழைத்து இதுஓர் நல்லசமயம், இப்போது உடனே போய் தேவேந்திரனைத் தாக்குங்கள் என்று தூண்டினர். தமது ஆசிரியரான சுக்கிரனின் தூண்டுதலின்பேரில் ஆங்காங்கு மறைந்துகொண்டிருந்த அசுரர்களெல்லாம் ஒன்றுசேர்ந்து ஆலோசித்து இந் ஸமயத்தில் இந்திரன் நகரமாகிய அமராவதிப்பட்டணத்தைத்தாக்கினால் தேவேந்திரனை வென்றுவிடலாம் என்று எண்ணி (அசுரர்களெல்லாம்சேர்ந்து) அமராவதிப்பட்டணத்தைத் தாக்கினார்கள். தேவர்களை பிடித்தார்கள். நொறுங்கும்படி யடித்தார்கள். குத்தினார்கள். அத்தேவர்களது உத்தரீயத்தினால் அவர்களது பெரிய தோள்களை தங்க ள்கைகளால் ஒடித்தாற்போல் நெருக்கி கட்டினார்கள். தேவமுனிவர்களை துரத்தி விரட்டியடித்துத் துரத்திவிட்டார்கள். தேவேந்திரனையும் பிடித்துச் சிறையில் அடைத்துவிட முயன்றார்கள்.

அதாகாச கிராஸோயம் ப்ரேரிதோதந்தர்திமாசுத:
சதுர்தந்தோ கஜேந்திரோபி ஜவாதந்தர் ஹிதோபவத்

இவ்வாறு அசுரர்கள் சுவர்கலோகத்தை அல்லோலகல்லோலமாய் நாசம் செய்யவும், தூதர்களில் சிலர் ஓடிச்சென்று வலமிக்க அசுரர்கள் எதிர்த்து வருகிறார்கள். தேவர்களையெல்லாம் துரத்தி விட்டார்கள். இதோ நகரத்திற்குள் புகுந்துவிட்டார்கள் என்று தேவேந்திரனுக்கு அறிவிக்க, தேவேந்திரன் அச்சங்கொண்டனன். பொருமூச்சுவிட்டனன். கலங்கி யழுதனன். இறந்தவனைப்போல மூர்ச்சித்தவனாய் கெடாத வலிமை குறைந்து (தனது மனத்தில்)

"புன்செயலாயிவட் புகுந்திடுஞ்செய
லென் செயலால்வரு மியற்கை யல்லது
பின் செய லொன்றில்லை"

இழித்தொழிலாக இவ்விடத்தில் இப்பெற்றதுண்டாகிய இத்தொழில் யாவும் என்செய்கையினால் வந்ததேயன்றி வேறே பொருசெயலுமில்லை

" வருவது வ்ருமது மறுக்கலாகுமோ " என்று பழமொழியின்படி வரவேண்டியது வந்தேதீரும் அதனைத்தடுக்க முடியுமோ. ஆதலால் அசுரர்களை எதிர்த்துப் போர் செய்து இறவேன். அவர்கள் கையில் சிக்கிக்கொண்டு வருந்தேன். என்று எண்ணி ஐராவதம் என்கிற பட்டயானையின்மீது ஏறிக்கொண்டு போர்செய்யப் புறப்பட்டான். அப்போது " தேவேந்திரனே! அசுரர்களை எதிர்த்துப் போர்செய்ய போக வேண்டாம். ஸாகஸமான கார்யம் செய்யாதே. தூர்வாஸ மாமுனிவரின் சாபம் நீங்கும் காலத்தை எதிர்ப் பார்த்துக்கொண்டு மந்தரம் என்கிற மலையின் தாழ்வரையில் தேவர்களுடன் தவம் செய்துக்கொண்டிரு அதனால் உனக்கு நன்மை உண்டாகும் " என்று ஆகாயத்தில் அசரீரியான ஒரு வாக்கு உண்டாயிற்று. அதை யுணர்ந்து "இது சிவபெருமான் திருவருளே " என்று அந்த ஐராவதத்துடன் உடனே மறைந்துப்போய் அசுரர் கண்களுக்குப் புலப்படாமல் நகரத்தைவிட்டு வெளிக் கிளம்பிவிட்டான்.

அததேவா: த்ருதாஸ் ஸர்வே விசின்வந்தோமஹேச்வரம்
விலோக்யபதி ஸம்பூயஸேந்திரா: மந்தரபூப்ருத:
உபத்யகாயாம் ஸுசிரம் தப: தேபுஸ் ஸுதாருணம்

பிறகு தேவர்களெல்லாம் " தேவேந்திரன் கதி என்னாயிற்றோ" என்று வருத்தங்கொண்டு எங்கும் சுற்றித் தேடிக்காணாமல், அசுரர்களால் அடித்துத் துரத்தப்பட்டவர்களாய்க்கொண்டு சுவர்கலோகத்தைவிட்டு ஓடிப்போய், வழியில் மறைந்து விரைவாக ஓடுகின்ற தேவேந்திரனைக் கண்டு நாணிக்கவிழ்ந்து அசுரர்கள் பின்தொடர்ந்து துரத்திக்கொண்டு வருகிறார்களோ பயந்து திரும்பி திரும்பிப் பார்த்துக்கொண்டு அசரீரியால் வாக்கு உண்டாகியதை தேவேந்திரன் அறிவிக்க, மந்தரமலைக்குச் சென்று அம்மலையின் தாழ்வரையில் மறைந்திருந்துக்கொண்டு சிவப்ரஸாதத்தால் தங்களுக்கு நேர்ந்த பயத்தை போக்கடிக்க சிவபெருமானையன்றி கதிவேறொன்றில்லை என்று எண்ணி கடூரமான தவம் புரிந்து வந்தார்கள்.

அததைத்ய பலோன்மத்தா: குர்வந்தோ பலிமீச்வரம்
ஸ்வாராஜ்யம் ஸ்வவசம்க்ருத்வா பங்க்திக்ருத்வாப்ஸரஸ்திரிய:
அத்யாஸாம் சக்ரிரே தேவஸபாம் சத்ருவினாக்ருதா:

பிறகு அசுரர்கள் பலி என்கிற அசுரனை தங்களுக்கு தலைவனாக்கி, அமராவதி நகரத்திற்குள் புகுந்து, தேவர்களையெல்லாம் அடித்துத் துரத்தி

விட்டு, தேவேந்திரனை எங்கும் தேடிக்காணாமல் திகைத்து அங்கு அந்தப்புரத்திற்குள் புகுந்து, சிறந்த பொருள்களை களவாடி வீடுகளை எரித்து, தேவஸ்திரீகளை பிடித்துக்கொண்டுபோய் சிறையிலடைத்து ஸ்வர்க்கலோகத்தை யெல்லாம் தாங்கள் கைப்பற்றி, தேவஸபையை ஆக்ரமித்து மூன்று உலகங்களை செங்கோல் செலுத்தினார்கள்.

இத்திறம் வீற்று வீற்று வெல்லையிலண்டந்தோறு
மெய்த்தமராகி யுள்ள வவுணரை வேந்தராக
வைத்தனன் துணைவரோடு மீண்டனன் மற்றிவ்வண்டப்
பித்திரகய தனுட்சென்று பெறலருந் துளக்கமுற்றான் -என்று

இவ்வாறு வெவ்வேறாக அளவற்ற உலகங்கள்தோறும் தமது மெய்மையாகிய பந்துக்களாயுள்ள அசுரர்களை அரசர்களாகவைத்து பெறுதற்கரிய சுவர்க்கலோகத்தை யாண்டுவந்தார்கள்.

கீஷ்பதி: குருர்தேவேஷாம் தபஸா பூர்வமேவது
நைமிசாரண்யமகமத் தியாத்வா தேஷாம் பராபவம்

இதையெல்லாம் தமது தபோபலத்தால் முன்னுதாகவே அறிந்த தேவகுருவாகிய வியாழபகவான் அசுரர்களால் தேவர்களுக்கு ஏற்படப்போகிற பரிபவங்களை நினைத்து மிக்கவருத்தமடைந்து, இது சிவபெருமான் திருவருளாலன்றி தீர்க்கலாகாது என்றெண்ணி நைமிசாரண்யத்திற்குப்போய் தவம் புரிந்துவந்தார்.

ஏவம் பஹுவர்ஷாணி வருஷேஷு கதேஷு திஷணோ குரு
ஸேந்திராந் தேவாந் விரூபாம்ச தப: தீர்வம் ஸமாஸ்திதாந்
ஸம்ப்ராப்தை: மஹா பக்த்யா ஸாஷ்டாங்கமபிவாதித:

இவ்வாறு பலவருஷங்கள் சென்றவாறு வியாழபகவான் தமது சிடளாகிய தேவர்களையும், தேவேந்திரனையும் காணவேணுமென்று விருப்பங்கொண்டு மந்தரமலைக்குச்சென்று அங்கு அசுரர்களிடத்தில் பயத்தால் ஓரிடத்தில் ஒளித்துக்கொண்டு கண்உறக்கமில்லாமல் இளைத்து கருத்து வாடி வதங்கி வருத்தமுற்ற தேவர்களையும், தேவேந்திரனையும் கண்டு மனமிரங்கி அப்போ இதென்ன விபரீதம்! மூன்று உலகங்களையும் செங்கோல்செலுத்திய தேவேந்திரனுக்கு இக்கதி நேரிட்டதே என்று பதறி தேவேந்திரனை அணுகிச்சென்றார். தேவேந்திரனும்

" முன்னுறச்சாவா இழுக்கியான் தன்பிழை
பின்னூறு இரங்கிவிடும் "

என்று தன்னால் காக்கப்படவேண்டிய துன்பங்களை அவை வருவதற்கு முன்னதாகவே அறிந்து காவாமல் மறந்திருந்தவன், பின் துன்பங்கள் நேர்ந்தகாலத்தில் அவற்றைத்தடுக்கமுடியாமையால் தன்னுடைய பிழையை நினைத்து நிச்சயமாய் அனுதாபப்படுவன் என்ற பழமொழியின்படி மிக்க அனுதாபப்பட்டு வெட்கித் தலைகுனிந்தவண்ணம் வியாழ பகவானை தண்டனிட்டு நின்றான்.

ப்ராஹ கம்பீரமதுலம் ஸமாச்வாஸ்யாதீதுக்கிதாங்

இவ்வாறு நின்றுக்கொண்டு வாயைத்திறந்து ஒன்றும் பேசமாட்டாமல் முத்துமாலை போன்ற கண்ணீர் ததும்பி கீழே விழ இதையெல்லாம் கண்ட தேவகுருவாகிய வியாழபகவான் ஸமாதானம்செய்யக் கூறத் தொடங்கினர்.

குரு: உவாச.

ஸர்வமேத்தமயாஞாதம் த்யானுத் தேவவ்ருஷாதய:
ஸுகம்வாவ்ய ஸனம்வாபி தேஹீனும் நியதம் பவேத்
ப்ரம்ஹணு விஷ்ணுனுவாபி நோல்லங்கியா பவிதவ்யதா

வாரீர் தேவராஜனே! உங்களுக்கு நேர்ந்த துன்பங்களை யெல்லாம் யோக திருஷ்டியினால் முன்னமே அறிந்துக்கொண்டேன். என்ன செய்யலாம். உலகத்தில் பிறந்த பிராணிகள் அனைவர்க்கும் இன்பம் துன்பம் ஆகிய இவ்விரண்டில் ஒன்றை அனுபவிப்பது நியதம். ஒருவனுக்கு துன்பமென்றால் துன்பமாகவே இராது. இன்பமென்றால் இன்பமாகவே இராது. சிறிதுகாலம் துன்பத்தை அனுபவித்துப்போந்தால், சிறிதுகாலம் இன்பத்தையும் அனுபவிக்கக்கூடும். சிறிதுகாலம் இன்பத்தை அனுபவித்துப்போந்தால் சிறிதுகாலம் துன்பத்தையும் அனுபவிக்கக்கூடும். கமலாஸனனாகிய பிரமனும், திருமாலனும், சிவபெருமானும் நியதி அதாவது ஊழ் என்பதை தாண்ட ஒருக்காலும் முடியாது.

ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று
சூழினும் தான்முந்துறும் என்றுகூறியபடி ஊழ் போல்

மிக்க வல்லமையுடையவை எவை இருக்கின்றன. எவையுமில்லை. ஆகையால் இவ்விஷயத்தில் நீ மனவருத்தமடைவது தகுதியல்ல. நல்ல காலம் வந்தால் எல்லாம் மறுபடியும் பழையபடி மாறிவிடும். அதற்காக நீ சிறிது அஞ்சவேண்டாம்.

நஷ்டப்ராயமகம் தேவீப்ரஸாதா திக்ரமார்ஜிதம்
தத்யாமபவனம் ஸ்ரஷ்டு: ப்ராப்தயே க்ஷேமயோபயோ:

அப்போது தூர்வாஸ மாமுனிவரால் கொடுக்கப்பட்ட பார்வதிதேவி யின் ப்ரஸாதமான புஷ்பமாலையை அலக்ஷியம் செய்ததினால் உண்டா கிய தீவினையெல்லாம் அநேகம் கழிந்துவிட்டது.

அரத்தையாற்றுதீர்
தீதினை விலக்குதிர் சிவனையுன்னியே
மாதவம் புரிகுதிர் மற்றதன்னியே
யேதுள தொருசயலியற்றத்தக்கதே

தருமத்தைச் செய்யுங்கள். தீமைகளை நீக்குங்கள். சிவபெருமானைக் கருதி மகத்தாகிய தவத்தைச் செய்யுங்கள் அத்தவத்தையன்றி செய் யத்தக்க செயல் வேறே யாதிருக்கின்றது? என்று கூறியவண்ணம் நீங்கள் இம்மந்தரமலையில் தவம்புரிந்து வந்தீர்கள். ஆதலால் உங்கள் தீவினைகள் கழியவேபெற்றது. இனி அஞ்சவேண்டாம். இனி யாம் எல்லோரும் உலகத்தை படைத்து காத்தருளுகிற நான்முகக்கடவு ளாகிய பிரமதேவரிடம் சென்று முறையிடுவோம். அவர் நமக்கு யோகக்ஷேமத்தைச் செய்து நம்மை காத்தருள்வார்.

இத்யுக்தா: த்ரிதசா: ஸர்வேபுரோதாய குரும் ததா
அத்ருச்யா: ஸ்வப்ரபாவேண ப்ரப்ஹாணம் சரணம் கதா:

இவ்வாறு வியாழபகவானுடைய மொழிகளைக் கேட்டு தேவர்கள் எல் லோரும் தேவகுருவை முன்னிட்டுக்கொண்டு தங்களுடைய மகிமை யினால் அசுரர்கள் கண்களுக்கு புலப்படாமல் மறைந்து ப்ரம்மலோகம் சென்று பிரம்மதேவனைச் சரணமடைந்தார்கள்.

ததோவிதாதா விஞ்ஞாத வ்ருத்தாந்த: ஸ்வர்நிவாஸின:
ஸமானீய ஜவாத்க்ஷீரஸாகரம் சேஷசாயினம்
ஸம்ப்ராப்த: சரணம் விஷ்ணும் யோகீந்த்ர பரிவாரிதம்
ரமயாபார்ச்வகதயா ஸம்வாஹித பதத்வயம்
ரத்னமண்டப மத்யஸ்தம் இந்த்ரநீலாசலோபமம்

பிறகு பிரமன் இழிந்தநிலைமையை யடைந்து இறந்தவர்களைப்போல வாட்டமுற்று புலம்புதலடைந்து நிலைபெற்ற தன்பக்கட்டில் மூழ்கி கண்ணும் கண்ணீருமாய்நின்ற தேவர்களையும், தேவர்கோனையும் கண்டு

மனமிறங்கி தமது தபோ மான்மியத்தால் அவர்களின் வரலாற்றை உணர்ந்துக்கொண்டு சிறிது சிந்தனைசெய்து,

மீனுமை கேழனுரசிங்கம் வாமனனுய் வென்றி
யானுதவிராமர் மூவராயனுய் யளித்தான் கற்கி
தானுயும் வருவனின்னமென்றவன் சாற்றித்தேவர்
கோனுயு நிற்பனென்று கூறுவன் குறிப்புனேடே

என்று தாழ்ந்தார்க்குத் தாகவளமாய் பேருதவி புரிந்து காத்தருளும் திருமாலைச் சரணமடைந்தாலொழிய வேறுகதி ஒன்றுமில்லை என்று நிச்சயித்து, தேவர்கூட்டங்களுடன் புறப்பட்டு க்ஷீரஸாகரத்தை அனுகிச் சென்று சிரணிந்த செங்கண்மால் மேல் சென்ற சிந்தையரான ஸனகஸநந்தனர் முதலிய அடியார் குழாங்களால் சூழப்படும் திருமா மகளின் மெல்லிய கரகமலங்களால் பிடிக்கப்படுகிற கமலமலர்பாதத்தை அரவணையால் பள்ளிக்கொண்டு ஓர் யோகநித்திரைசெய்யும் திருமாலை கண்டு திருமுன்னடைந்து, வணங்கி வரிசை வரிசையாக தலை தாழும் படி விழுந்து நமஸ்கரித்து தாமதத்திலேயே பொருந்திய பெருவிருப்பானது தூண்டுதலால் வந்தடைந்து தேவர்களின் கூட்டங்களுடன்சரண மடைந்தார்.

விதாதா பரயா பக்த்யா ப்ரணம்ய ஸஹதைஸ்ஸுரை:
வ்ருத்தாந்தமகிலம் தஸ்மை ந்யவேதயத தாகிலம்

பிறகு மிக்கபக்தியுடன் தண்டம் ஸமர்ப்பித்து நடந்த வரலாற்றை எல்லாம் திருமாலிடத்தில் முறையிட்டுக்கொண்டார்.

பகவானபி விஞ்ஞாய ததுத்தமம் ஸுவிஸ்மித:
வததிஸ்மாதிகப்ரேம் தேவாந் ப்ரஹ்ம புரோகமான்

இங்ஙன் நான்முகக்கடவுளால் கூறப்பட்ட பரிதாபமானமொழிகளைக் கேட்டு மனமிரங்கி அடியார்களின் பெருமையை சிறிதும் உணராமல் பணச் செருக்கினுல் மதிமயங்கி அஹங்காரம் கொண்டதின் பயனை அனுபவியாமல் இருமோ! அதன் பயனன்றோ இதுவெல்லாம் என்று மந்தஹாசம்பண்ணி தேவர்களின் குழாங்களுடன்கூடி சரணமடைந்த பிரமனைப் பார்த்து கம்பீரமான மொழிகளால் பேசத்தொடங்கினர்.

விஷ்ணு: ப்ராஹ

தேவாஸ் ஸேந்த்ரா மஹேஸ்வாஸா: க்ஷீரஸாகரமந்திரே

மந்தரேணமதித்வாசு ஸுதாமுத்பாத்ய யத்னத:
பீத்வா ப்ராப்ஸ்யதபூயோபிஸ்வ: பதம்பரம் த்ருவம்

வாரீர் தேவகணங்களே! நீங்கள் மிக்கப் பலவந்தர்களாய்ப் போர்முனை களில் எதிரிகளை மண்ணுண்ணும்படி செய்ய வல்லமை வாய்ந்தவர்க ளாக இருந்தபோதிலும், சிவனடியாரை அவமதித்ததினால் உங்கள் பராக்கிரமம் ஒன்றும் பயன்படாமல்போயிற்று. நீங்கள் இதுவரையில் செய்த தவத்தின் மகிமையினால் அக்கொடிய தீவினைமாய்ந்தது. ஆனா லும் எல்லா உலகங்களையும் கைவசப்படுத்திக்கொண்டு மிக்கபலவந்தர் களான அசுரர்களை உங்களால் போரில் எதிர்க்கமுடியாது. உங்கள் பலமெல்லாம் குறைந்துபோய்விட்டது. ஆகையால் முன்போல் உங்க ளுக்கு சக்தி உண்டாகவேண்டும். அதற்காக மந்திரபர்வதத்தினால் க்ஷீர ஸாகரத்தை கடைந்து,அமிருதத்தை எடுத்து உட்கொண்டீர்களாகில் பழயபடி சக்திஉண்டாகிறது. அதனால் எதிரிகளை துரத்திவிட்டு ஸ்வர் கலோக ஐச்வர்யத்தை பெறலாம். இது நிச்சயம்.

நகேவலாபவந்தோஸ்ய சக்தா உத்தரணேஸுரா:
அதோ்தைத்யவரைஸ்ஸார்தம் ஸந்தானம் கர்துமர்ஹத

ஆனால் மந்தரபர்வதத்தைக் கொண்டுவந்து, அதனால் க்ஷீர ஸமுத்தி ரத்தை கடைவதுயென்றால் உங்களால் தனியாகமுடியாது. அதற்கு ஸஹாயம் வேண்டும். ஆகையால் அசுரர்களுடன் ஸமாதனம் செய் துக்கொண்டு அவர்களை ஸஹாயமாக வைத்துக்கொண்டு இந்த கார் யத்தை முடியுங்கள்.

துஷ்கரம் தத்ஸமாதானம் ஏதை: லப்தாஸ்பதைர்ஹிவ:
ததாபி குருணேநக ஸுஸாதம் புத்திவைபவாத்

ஆனால் எல்லா உலகங்களையும் கைவசப்படுத்திக் கொண்டு ஏழுலகம் தனிக்கோல் செலுத்தி ஆளும் அசுரர்களுடன் ஸமாதானம் செய்துக் கொள்வது முடியாத காரியந்தான். ஆகிலும் உங்கள் குருவாகிய இந்த வியாழ பகவான் தமது புத்தி ஸாமர்த்தியத்தினால் அவர்கள் மதியை மயக்கி, வசப்படுத்தி, அவர்களுடன் ஸமாதானம் செய்து வைப்பார்.

ஏபிஹூதைர்பவத்பிச்ச தைத்யைச்ச தப உத்தமம்
ஆஸ்தாய ப்ரீணயித்வேசம் சங்கரம் கருணாகரம்

இங்ஙனம் அசுரர்களுடன் ஸமாதானம் செய்துக்கொண்டு எல்லாரும் ஒன்றுசேர்ந்து சிவபெருமானைக் குறித்து தவம் செய்யுங்கள்.

ப்ரஸாதாத் தேவதேவஸ்ய மந்தாஸ்ஸாந்த்ரோ பவேத்
விநாப்ரஸாதமிசஸ்ய கார்யமேதத் ஸுதுஷ்கரம்

ஏனென்றால் சிவபெருமான் உதவியில்லாமல் இக்காரியம் செய்து முடிக்க முடியாது. சிவபெருமானுடைய அனுக்ரகத்தினால் மந்தர பர்வதத்தைக் கொண்டுவந்து க்ஷீரஸமுத்திரத்தை சுலபமாகக் கடைந்து அமுதத்தைப் பெறலாம்.

கார்ய ப்ரவர்தமானே ஸ்மிந் யதாசக்த்யஹமம்ஜஸா
ஸாஹாய்யம் காவாண்யத்ர பவந்தோயாந்துவிஸ்தயே

மந்தரபர்வதத்தினால் சமுத்திரத்தை கடையும்போது என்னால் கூடிய மட்டும் உங்களுக்கு வேண்டிய உதவி செய்கிறேன். இப்போதே புறப்பட்டுப்போய் காரியத்தை ஆரம்பியுங்கள் என்றார்.

இத்யுக்தா லோகபாலாஸ்தே ப்ரம்ஹணா ஸஹிதாஸ்தத:
நிர்கத்யமார்கே ப்ரம்ஹாணம் அனுஞாப்ய ஸஜீவகா:
ரஹஸ்யம் தேசமாஸ்தாய மந்தராத்ரேஸ்ஸமீபத:
ஸம்பூஜ்ய ஜீவபதிம் தத்ரப்ரணம்ய ப்ராக்ஞமுத்தமம்
அப்ருச்சன் கார்யஸித்திம்தே

இவ்வாறு கருணாநிதியான திருமால் அருளிய மொழிகளைக் கேட்டு பேரானந்தங்கொண்டு தண்டனிட்டுப் புறப்பட்டு நான்முகனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, அசுரர் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்து, மந்தரமலைக்குச் சென்று, ஏகாந்தமான ஓரிடத்தில் ஒளித்துக்கொண்டு, கூட்டம்கூடி (நம்) பரமகுருவாகிய வியாழபகவான்தான் நமக்கு கதி என்று அறுதியிட்டு அவரை தண்டனிட்டு "ஸ்வாமீ! புகலொன்னில்லாத அடியோங்களுக்கு தேவரீரே புகல். இனி நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி ஆலோசிப்பீராக. நடக்கவேண்டிய காரியங்களெல்லாம் தேவரீர் ஆதீனம்" என்று பிரார்த்தித்தார்கள்.

ஸோபிப்ரோவாசகீஷ்பதி:

தைத்யா அசக்ய ஸந்தாந மத்தாலப்தபதாத்ருடா:
ததாபி ப்ரயதிஷ்யேஹம் யதாமதி ஸுரோத்தமா:.

இதையெல்லாம் செவியுற்று "தேவர்களே! நான் என்னசெய்வேன் அசுரர்கள் மிக்கபலவந்தர்கள். மாயமறிபவர்கள். ஏழு உலகங்களையும் தங்கள் வசமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். கொழுத்திருக்கிறார்கள்,

ஆகிலும் என்னால் கூடியமட்டும் பிரயத்னம் செய்கிறேன். அதற்காக நீங்கள் வருத்தமடையாதீர்கள்.

இஹைவவஸதா த்ரீச ப்ராந்தேந்தர்தானமாச்சரிதா:
கார்யம் ஸித்யேத்யதீததாத்வரயாப்யே மிவஸ்ஸரா:

இந்த மந்தரமலையின் தாழ்வரையிலேயே ஒருபக்கத்தில் மறைந்திருங்கள். நான் அசுரர்களின் குருவினிடம் சென்று என்னால் கூடியவரையில் ப்ரயத்னம் செய்கிரேன். காரியம் கைக்கூடிற்றாகில் சீக்கிரத்தில் வந்து சேருகிறேன்.

இத்யுக்த்வாதீஷ்ணோதேவ: பார்கவஸ்ய நிவேசனம்
கத்வாதேனர்சிதோத்யர்தம் உவாசாகமகாரணம்

வியாழபகவான் இவ்வாறு தேவதைகளை சமாதானம் பண்ணிவிட்டு அசுரர்களின் முதலாசிரியனான சுக்கிராசாரியரின் வீட்டுக்கு விரைந்து சென்றார். அங்கு சுக்கிராசாரியரும் வியாழபகவானைக் கண்டு ஆச்சரியங்கொண்டு

" செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான் நல்
விருந்து வானத்தவர்க்கு "

என்ற பழமொழியின்படி அவ்விருந்தினருக்கு உபசாரனை செய்தார். தேவகுருவும் சுக்கிராசாரியரின் உபசாரனைகளால் மிக வியப்படைந்து தான் கோரிவந்த கார்யத்தை அறிவித்தார்.

ஸோபிகாவ்ய: ஸ்வசிஷ்யாணும் ஆனீயபவனம் குரும்
ஆதித்யம் காரயாமாஸ நைதாந்தேவாஸிபி: குரோ:

அதைக்கேட்டு சுக்கிராசாரியர் தேவகுருவைத் தமது சிஷ்யனுகிய அசுரராஜனுடைய வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் அவனைக் கொண்டு பலமரியாதைகள் செய்துவைத்தார்.

ததோவாசஸ்பதி: காவ்யம் புரோதாய ஸ்ரத்விஷா
மத்யே ப்ரோவாசகம்பீரம் பலம்வீக்ஷ்ய சுரேச்வரம்

பிறகு தேவகுரு, சுக்கிராசாரியரை முன்னிட்டுக்கொண்டு அசுரராஜனுடைய சபையில் அசுரர்களெல்லோரும் கேழ்க்கும்படி காம்பீரமாக பேசத்தொடங்கினார்.

ப்ருஹஸ்பதி ருவாச.

போதைத்யேந்த்ர பவத்ப்ராதா தேவராஜ: ப்ரணம்யவ:
பூர்வஜா ஞஹ பவதாமனுக்ரஹ வசாந்மம
குசலம் பவதாமத்ய க்ஷேமாய ப்ரார்தயாம்யஹம்

பாரீர் அஸுர ராஜனே! கேளும் உங்கள் தம்பியாகிய தேவேந்திரன் தேவரீரை தண்டம்ஸமர்ப்பித்து விஞ்ஞாபனம் ஒன்று செய்துகொள்ளுகிறுன் அதாவது பிராதாவாகிய தேவரீருடைய அனுக்ரஹத்தினுல் நாங்கள் எல்லோரும் க்ஷேமம். தேவரீருடைய க்ஷேமாதிசயத்தைப் பற்றி பிரார்திக்துக்கொண்டிருக்கிறேன்.

விஞ்ஞாபபவதாம் ஸ்வர்கே வஸ்தும் தாத்பர்யமம்ஜஸா
வஸம்து ஸுகமத்யேமே ப்ராதரோ மத்க்ருஹேசிரம்
இதிமத்வாலயம் தஸ்மாத் நிர்கதா நருஷாபியா

தேவரீருக்கு ஸ்வர்கலோகத்திலே சிலகாலம் வாஸம் செய்யவேணுமென்று விருப்பமிருப்பதாக அறிந்துகொண்டு தகப்பனுருக்கு ஸமமாகிய நம்பிராதாவான அஸுரேந்திரன் சிலநாள் ஸ்வர்கலோகத்திலே வாஸம் செய்யட்டும் என்று எண்ணங்கொண்டு, எமது ஸ்வர்கலோகத்தைவிட்டு வெளியில் வந்துவிட்டேன். எனக்கு தேவரீரிடத்தில் கோபமும் இல்லை. பயமுமில்லை.

ப்ரயத்னம் கரவாமாஸ்ய ஸித்தயேத்வரயேதிஹ

இனி நாம் இருவர்களும் இம்மாதிரி ஒன்று வாழவேணும் என்று ஆசைப்படுகிறேன். அதற்கு ஓர் உபாயம் செய்வோம். தாமதிக்கவேண்டாம் என்று இவ்விதம் உங்களிடத்தில் உங்கள் தம்பியாகிய தேவேந்திரன் அறிவிக்கும்படி என்னை அனுப்பியிருக்கிறுன்

அஹம்ச பார்கவச்சைவ ஹிதமார்கோபதேசகௌ
ஸாதனே ஹ்யஸ்யகார்யஸ்ய ப்ரமாணம் யூயமேவஹி

நானும், உங்கள் குருவாகிய இந்த சுக்கிராச்சாரியரும் கூடவிருந்து உங்கள் நன்மையை நாடி வேண்டிய உதவிகளைச்செய்கின்றேன். அதற்காக நீங்கள் பயப்படவேண்டாம். ஆனுல் அந்த காரியத்தை செய்து முடிக்க உங்களால்தான் முடியும். அதில் ஸந்தேகமேயில்லை என்றுர்.

இதிவாசஸ்பதேர்வாக்யம் ச்ருத்வா பலிபுரோகமா:
அம்ருதம் ஜனயித்வாத பாஸ்யாமோப்ராத்ருபிஸ்ஸஹ

என்று இவ்வாறு வியாழபகவான் கூறிய இனியமொழிகளைக் கேட்டு அஸுரர்கள் எல்லோரும் மதிமயங்கி " அப்படியே செய்துவிடலாம். நாங்கள் க்ஷீரஸமுத்திரத்தைக் கடைந்து அமிருதத்தை உண்டாக்கி, அதை அருந்தி தம்பிமார்களுடன் சுகமே வாழ்ந்துக்கொண்டிருப்போம். இதுதான் ஸரியான உபாயம்.

திக்ருஷ்வோவயம் தேவஸ்வயம்தான் விஸ்ம்ருதாநநாந்
அதோ கச்சாம யத்ரைதே வஸந்திப்ராதரோகிலா:

எங்கள் தம்பிகளின் முகத்தைப் பார்த்து வெகுநாள் ஆகிவிட்டது. இப்பொழுதே அவர்களை காணவேணுமென்று ஆசைப்படுகின்றோம். எங்கிருக்கின்றார் வாரீர் தேவகுருவே கூறியருளவேணும். அவர்கள் வசிக்கும் இடத்திற்கே செல்வோம். "

இத்யுக்த்வா ஸர்வதைத்யேந்திரா: தேவானிந்த்ரபுரோகமான்
ஸம்ப்ராப்யாந்யோந்ய மாச்லிஷ்ய ஸந்தானம் பரமம் கதா:

என்று சொல்லிக்கொண்டு அஸுரர்கள் எல்லோரும் வியாழபகவானுடன் சென்று மந்தரமலையில் ஒளிந்துக்கொண்டு நடுங்கிக்கிடக்கும் தேவர்களுடன் சந்தித்து ஒருவரை ஒருவர் அணைத்துக் கொள்வது, வணங்கி தண்டனிடுவது, ஆசீர்வாதஞ்செய்வது, ஆனந்தக் கண்ணீர் விடுவது முதலிய பாவனைகளால் அன்பைக்காட்டி ஸ்நேகமாக இருந்தார்கள்.

ஸம்மந்த்ர்ய பூஜயித்வேசம் விவிதைருப சாரகை:
அநுஜ்ஞாதா பகவதா த்வரயோத்காய மந்தரம்
உபயே ஸுரதைத்யேசா வஹந்தோவ் யோமமார்கத:
க்ஷீரவாராசிம் பாதயாமாஸுராதராத்

பிறகு எல்லோரும் ஒன்றுகூடி க்ஷீரஸமுத்திரத்தை அடைந்து அமிருதத்தை கடைந்துவிடவேண்டியது என்று தீர்மானஞ்செய்துக்கொண்டு உலகுக்கோர் தனிமுதலாகிய சிவபெருமான் உதவியில்லாமல் இந்த காரியம் ஸாதிக்கமுடியாதென்று எண்ணங்கொண்டு முதலில் சிவபெருமானுக்கு பூஜைசெய்து அவர் அனுமதிபெற்றுக்கொண்டு அந்த மந்தரமலையை எல்லோரும் ஒன்றுசேர்ந்து கிளப்பி ஆகாயமார்கமாய் தூக்கிக்கொண்டுபோய் க்ஷீரஸமுத்திரத்தில் போட்டுவிட்டார்கள்.

அததைத்யா: பன்னகேசா: ஜீர்ணமஸ்வஸ்துவிக்ரஹம்
வ்ருத்வா மந்தன ஜ்வர்தம் த்ருவா மூர்த்னு ஸமானயர்

பிறகு தேவர்களும், அஸுரர்களும், மந்தரமலையைக்கொண்டு கடைவதற்கு கயிறு வேணுமே என்னசெய்யலாம் என்று ஆலோசித்து கிழமாய் உடம்பெல்லாம் தோல் உறிந்துப்போய் கிடக்கிற வாசுகி என்ற ஸர்பத்தைப் பார்த்துப் இதனால் மந்தரமலையைச்சுற்றிக் கடையலாம் என்று எண்ணி வாசுகியை தலைமேல் தூக்கிக் வைத்துக்கொண்டு வந்தார்கள்.

ஏதஸ்மிந் அந்தரே விஷ்ணு: பிரம்மாசக ஜக்மதுஸ்ததா

அந்த ஸமயத்தில் தேவர்களுக்கு உதவிசெய்யவேணுமென்று எண்ணங்கொண்டு நான்முகனும், திருமாலும் அவ்விடம் வந்து கூடி இருதார்கள்.

அதஸ்ம்பூய தேஸர்வே கிரிம் மந்தர நாமகம்
தேனபன்னகபா சேன த்ரிகுணம் வேஷ்ட்ய பர்வதம்
மமந் தாக்ஷீரபாதோநிம்.

அப்பொழுது அம்மந்தரமலையை வாசுகியினை மூன்று சுற்று சுற்றி ஸமுத்திரத்தைக் கடைய ஆரம்பித்தார்.

மஹாகூர்மேவ ஸ்திதே
பிப்ரத்ய க்ருண்ணன்னமரா: வ கம் மஹீசத:
சிராபாகம் தைத்யவரா: மமந் நிவேகத:

இவ்வாறு தேவர்களும் அசுரர்களும் அம்மலைக் கடைய ஆரம்பித்த போது அம்மந்தரமலையானது கடலில் அமிழ்ந்துவிட, அதைக்கண்ட திருமால் உடனே கூர்மாவதாரமெடுத்து நீரில் அமிழ்ந்து தமது முதுகினால் அம்மலை நீரில் அமிழ்ந்துபோகாமல் அடியில் தாங்கிக்கொள்ள, அந்த வாசுகியினுடைய வால்பாகத்தை தேவர்கள் பிடித்துக்கொண்டு தலைபாகத்தை அசுரர்கள் பிடித்துக்கொண்டு வேகமாய்கடைந்தார்கள்.

ஏவமேதைர்மத்யமானே க்ஷீராப்தௌ தவபாததா
ப்ராதுர்பூதம் மஹாகோரம் காலகூடாபிதம் விஷம்

அமிருதத்தை குடிக்கவேணுமென்று மிகுந்த அவாவினால் ஸமுத்திரத்தை மிக்கவேகமாக பரபரப்புடன் கடையும்போது "நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று செய்யும்" என்ற பழமொழியின் பிரகாரம் மிகபயங்கரமான காலகூடமென்கிற விடம் வெளிக்கிளம்பியது.

தேனதக்தாஸ் ஸுராதைத்யா ப்ராத்ரவன் திசஷ்ஸர்வத:
விஷ்ணுர்தக்ததனுர் பூத்வா ஸ்வயம் காலஸமத்யுதி:
கிஞ்சிதூர்த்வமபித்ருத்ய மூர்ச்சிதோ பூதலேபதத்

அந்த காலகூட விஷாக்னியினால் தகிக்கப்பட்டு தாபத்தை பொறுக்க மாட்டாமல் அஸுரர்களும் தேவர்களும் நாலாபக்கங்களிலும் ஓடி விட்டனர். அருகிலிருந்த திருமாலும் தைர்யத்தினால் வெகுநேரம் பொறுத்திருந்தும், கடைசியில் தாபத்தை ஸகிக்கமாட்டாமல் திகைத்து தடுமாறி கொஞ்சம் பின்சென்றும் அங்கும் தாபத்தை தாங்கமுடியாமல் மூர்ச்சித்து பூமியில் விழுந்துவிட்டார்.

நிச்சேஷ்டமபவத்ஸர்வம் ஜகதேதத் சராசரம்

முன்னம் பரமனருளின்றிமுகுந்தனாதி
மன்னும் சுரர் தானவர் வேலைமதித்த வேலைக்
கன்னங்கரிய விடம் வந்துழிக் காரினங்கடுன்னும் பொழுதிற்
குயில் போற்றுணக்குற்றிரிந்தார்

முற்காலத்தில் சிவபெருமானது திருவருளில்லாமல் திருமால் முதலாக பொருந்திய தேவர்கள் கடலைக் கடைந்தபொழுது மிகவுங் கறுத்த விடமுண்டான விடத்தில் மேகக் கூட்டங்கள் வந்தவுடனே குயில்கள் சிதறியோடுவதைப்போல நடுக்கங்கொண்டு விலகிஓடினார்கள் என்று கூறியபடி தாவரம் ஜங்கமம் என்ற இருவகைப்பட்ட உலகங்களெல்லாம் அசைவற்று நின்றுவிட்டன.

ப்ரயத்னே விபலே: ஜாத: காலாக்னி ஸத்ருசம் விஷம்

தேவர்களின் ப்ரயத்னமெல்லாம் வியர்த்தமாய் போய்விட்டது. கிணறு வெட்ட பூதம் கிளம்பியதுபோல பெரிய ஆபத்தாய் முடிந்தது. அவ் விஷம் ப்ரளயகாலத்தில் உண்டாகும் காலாக்னிபோல மிக்க பயங்கரமாய் இருந்தது. சாந்தியாகிற வழியில்லை.

ஜ்வாலாவலீடம் பரித: பிண்டி பூதமிவாபதத்.

ஜ்வாலை எங்கும் பறவி காய்ச்சின இருப்பு குண்டுபோல் ஓரே ஜ்வாலையாய் ஆகிவிட்டது.

ஸ்காந்தபுராணம் சிவரஹஸ்யகண்டம்
உத்தரபாகத்தில்
நான்காவது
அத்யாயம்
முற்றிற்று.

உ

ஸ்காந்தபுராணம் சிவரஹஸ்ய கண்டம் உத்தரபாகம்
காலகூடாசன க்ஷேத்திர மாகாத்மியம்

## ஐந்தாவது அத்தியாயம்.

அததேவோ மஹாதேவ: கருணாவருணாலய:
த்வரயாருஹ்ய வ்ருஷபம் ஸஹதேவ்யாத்ரிகன்யயா
நந்தியாதிப: பரிவ்ருத: பரமதை: திவேகித:
தம்தேசம் அகமத்ஸோயம் யத்ரஜ்வாலோல் பணம் விஷம்

பிறகு ஞாலத்தினையளித்த நான்முகனும், நின்றவற்றைப் பாலித்தவனாகிய திருமாலும் திகைக்கும்படி ஓலக்கடலுள் உலகந் தொலைப்ப வந்த ஆலகாலவிஷம் வெளிக்கிளம்பியதும்

பாருமுட்கின பரவுபௌவமுந்
நீருமுட்கின நெருப்புமுட்கின
காருமுட்கின கரிகளுட்கின
வாருமுட்கின ரமரானயுளார்.

ன்று கூறியவண்ணம் பூமிகளும் நடுக்கின. பரந்த கடல்களும் நடுங்'ன. அக்னிகளும் நடுக்கின. மேகங்களும் நடுங்கின. திக்குயானைகளும் டுக்கின. தேவராயுள்ளார் அனைவரும் நடுக்கினார்கள்.

துண்டமிதினமூலோ விதழின் வீழ்ந்த சுசியோ
மண்டு தீவிழிகள் கான்றகனலோ மனமிசைக்
கொண்டதோர் வெகுளியாகிய கொடுந்தழலதோ
வெண்டிசாமுகமுமாகியடுகின்ற தெனவே

என்று ஓதியபடி நாசியில் தோன்றிய தீயோ, இதழினின்றும் விழுந்த அக்னியோ, நெருங்கிய தீவிழிகள் கக்கிய தீயோ, மனதிற்கொண்ட கோபமாகிய கொடிய நெருப்போ, எட்டு திக்குகளிலுமாகி யழிக்கின்றது என்று சிலர் கூறவும்.

வீண்டனரொருசிலர் வெதும்பி விம்மியே
மாண்டனரொருசிலர் வந்தநஞ்சமுண்
டாண்டவர் கழலினை யடைதும் யாமெனாக்
காண்டகு கயிலையின் கண்ணுற்றார் சிலர்

என்று கூறியபடி சிலர் விலகியோட, சிலர் வெதும்பி விம்பி இறக்க, நஞ்சினையுண்டாண்டவருடைய காலிணையை யடைவோம் யாமென்று சிலர் சைலாயத்திற்குச் செல்லவும், கெடுதலற்று வாழும் உயிர்கள் பயந்து தளர்சியுறவும், மேலுள்ள அண்டாண்ட நிறைகள் பிளக்கவும், அவைகளில் பொருந்திய தெள்ளிய திறையினையுடைய கடல்கலங்கும் வண்ணமும், அழிக்கின்ற சருவ சங்காரமூர்த்தியைப்போல கொள்ளப்பட்ட ஆரவாரிப்பு எட்டுத்திக்கிலும் பொருந்தி மேற்செல்ல,

> ஒன்றாயிருதிறமா யோரைந்தாயையைந்தாய்
> அன்றாகியின் மீட்டு மைந்தாயளப்பிலவாய்
> நின்றாய் சிவனேயிந்நீர்மையெல்லாந் தீங்ககற்றி
> நன்றாவிகட்கு நலம்புரிதற்கேயன்றோ.

சிவபெருமான் சிருஷ்டிகாலத்திற்கு முன்னே தாமொருவரே இருப்பவராதலால் ஒன்றாகி சிருஷ்டிநடத்த எண்ணியவுடனே தன்னருளே சத்தியாக உருக்கொண்டு கூடினறே படைப்பதாதலால்சிருஷ்டியின் ஆரம்பத்தில் சத்தியும் சத்தனுமாகிய இருவர்களாக நிற்றலால் இருதிறமாகி,சத்திசத்தர்களாகிய அவர்களில்நின்றும் பஞ்சகர்த்தாக்களாக சகஸீகரித்துநின்றே சிருஷ்டித்தலால் ஓரைந்தாகி,அவர்களாலே இருபத்திஐந்து தத்துவ உருவங்களாக உலகமாக்கப்படுதலால் ஐயைந்தாகி, பின்னும் ஒடுங்குங்கால், தோன்றியமுறையே ஒடுங்கி பழைய ஐங்கர்த்தாக்களாகி நின்று முறையே பழையவண்ணமே ஆகிமறு சிருஷ்டியிலும் முன்சொன்ன வண்ணமாகி எண்ணிறந்த திருவுருவமாக நின்றருளுதலால் மீண்டும் ஐந்தாய் அளப்பிலவாய் நின்றாய் என்றும் இவ்வாறு செய்வதெல்லாம் அசர்தாக்களான பசுக்களுக்கு நற்சுகம் அளித்தற்கே அன்றி தன்பெருட்டல்லாமையால் இந்நீர்மை எல்லாம் தீங்காற்றி நன்றாவிகட்கு நலம்புறிதற்கே அன்றோ! என்று கூறியபடி மிகக்கருணைக் கடவுளான சிவபெருமான் அனைத்துலகங்களும் படும் துயறத்தைக் கண்டு அய்யோ! உயிர்களெல்லாம் நசித்துவிடுகிறதே என்று உள்கலங்கி நின்றவிடத்தில் நிற்கமாட்டாமல் அலைகுலைய தலைகுலைய தர்மஸ்வரூபியாய் அறஇல் காற்றுக்கொண்டிருக்கும் வாகனமாகிய விருடபத்தின் மீது ஏறிக்கொண்டு

உலைக்களத்தில் ஊதுகின்ற தீப்புகைபோல பெருமூச்சு உண்டாகும் நாசியினையும், பழுதில்லாமல் நீண்டபற்களையும், அகன்ற பிலத்வாரம்போன்ற வாயையுடைய பூதகணங்களும், ஒப்பில்லாத தவளச்

சங்காதத்தொழில் செய்யும் பாணுகம்பனும் வந்து பொருந்தவும்.

சந்துகண்ணனும், ஒப்பற்ற மணிக்கண்ணனும், மாணிபத்திரனும் மகோதரனும், மேலான தந்நிலையுடைய விருகோதரனும், பெரிய ஆபரணங்களணிந்து மிகுதியான ஒளியையுடைய விகடனும், குண்டோதரனும் வந்துபொருந்தவும்.

மாலையணிந்த புயமுள்ள மகா காளரும், புலிமுகத்தரும், அசைகின்ற யானைமுகத்தரும், ஆளிமுகத்தரும், வெண்மையாகிய தந்தங்களையுடைய சர்பமுகத்தரும், சிங்கமுகத்தருமான கணத்தர் அளவில்லாதவர்களாய் வந்துபொருந்தவும்.

அண்டமுகடுபிளக்கும்படி உயர்ந்த வடிவமுள்ளவர்களும், சொல்லுதற்கரிய விகடமான பலபல உருவத்தை யுடையவர்களும், விளங்குகின்ற யானைபோல ஒருகையுடையவர்களும், பலவாகிய கைகளுடையவர்களும், தகட்டுப்பொன்னால் செய்யப்பட்ட வீரகண்டையுடையவர்களும், ஆக எண்ணில்லாதவர்கள் பொருந்தவும்.

கோடி சூரியர்களும், கோடி சந்திரர்களும், கோடி வடவாமுகாக்னியும் ஓரிடத்தில் கூடி பெரியஉருவம் எடுத்ததுபோன்ற திவ்ய திருமேனியின் ஒளி எண்டிசைகளிலும் வியாபிக்கவும்.

ஏழுசமுத்திரத்தையும் ஒருகணப்பொழுதில் உண்ணத்தக்கதாக ஊழிகாலத்திலுண்டாகும் கொடிய ஊழித்தீப்போல செய்யசடைகள் பொலியவும், சோமசூர்யாக்னிகளுடன் பகைக்கும் சூலாயுதம் முதலிய ஆயுதங்களோடு பலதோள்கள் விளங்கவும்.

ஆதிசேஷன், வாசுகி, தக்ஷகன் முதலான நாகங்கள் ஆபரணங்களாக திருவடி, திருமுடி முதலான இடங்களிலணிந்துகொண்டு, இசைப்பாடும்வண்டுகள் தேனுண்ணும்கொன்றைப்பூமாலை அழகுடன் மத்தியில் விளங்கத் திருமுடியில் தரித்த சந்திரன் அமுதத்தை வழங்கவும், கங்கை அலைவீசவும்.

காய்கின்ற கோபத்தையுடைய புலியின்தோல் வஸ்திரமாகத்திருவரையில் விளங்கவும், போர்செய்து கொல்லுந் தன்மையையுடைய யானையின்தோல் போர்வையாகத் திருமேனியில் போர்ப்பவும், ஒளிபொருந்திய உத்தரீயத்தின் பிரகாசம் விளங்கவும்,

துண்டமாகிய வெண்பிறைபோல் திருநெற்றியும், பூரணசந்திரன் போன்ற திருமுகமண்டலமும் அழகைச்செய்யவும் மல்லிகைப்பூமாலை பணிந்த அளகத்தில் சூழியக்கொண்டை விளங்கவும்,

அழகிய பிரகாசத்தை வீசுகின்ற மணிகள் பதித்த பொன்மாலைகள் அடிபரந்தமார்பில் விளங்கவும், ஒளியை விரிக்கும் பொன்னுலாகிய செழுமையுள்ள ரத்தினங்கள் பதித்த தோளணி பச்சை மூங்கிலையொத்த தோள்களில் விளங்கவும், பூங்கொடி போன்ற நுண்ணிய இடையில் அழகிய மணிவடமாகிய மேகலாபரணத்தின் ஒளிதழையவும், செம்பஞ்சினும் மெல்லியவாகிய திருவடிகளில் பெரிய ரத்தினங்கள் பதித்த நூபுறங்கள் செவ்விய ஒளியைப் பரப்பவும்,

மைக்களமும் மான்மழுவும் வரதமுடனபயமுற
மெய்க்காமும் நாற்புயமும் விளங்குபணிக்கொடும்பூணும்
செக்கருறு மதிச்சடையும் சேயிழையோர் பாகமுமாய்
முக்கணிறை யாங்காண முன்னின்றே யருள்புரிந்தான்

கரியகண்டமும் மானும் மழுவும் வரதாபயங்களாகப் பொருந்திய கரதலங்களையுடைய நான்குதோள்களும், வளைந்து பிரகாசிக்கின்ற அரவகுண்டலமும் செவ்வானிலொளிரும் இளமதியணிந்த சடையும், உமாதேவியொருபாகமுமாகித் திரிலோசனனாகிய சிவபெருமான் நாங்கள் தரிசிக்கும் வண்ணம் எங்கள் முன்நின்று அருள் புரிந்தனன், என்று கூறியவண்ணம் பாற்கடலின் அருகில் ஆவிர்பவித்து நின்றான்.

மஹாதேவாகமாதேவ ஙிஞ்சித்சாந்த விஷஜ்வரா:
தேவா ஸ ாஸ் ஸமாஜக்மு: சனை: பார்ச்வமுமாபதே:

சிவபெருமான்வந்து அணுகியதும் ஆலகாலவிஷத்தின் வேகம் கொஞ்சம் குறைந்து அதனால் தேவர்களும், அசுரர்களும் தேர்தலடைந்து சிவபெருமானைக் கிட்டி அடைந்தார்கள்.

மாதவ: த்யக்தஸம்மோஹ: ஆகத்யவிநிஜ ஸஹ
தேவைரிந்திராதிபிஸ்ஸார்தம் துஷ்டாவபரயாமுதா

இறைவனருளினை யாராய்ந் தறிந்த திருமாலும் அயனும் மோஹம் தெளிந்து கருணைக் கடலான சிவபெருமானைத் தரிசித்து இந்திரன் முதலிய தேவர்களுடன் பலமுறைபணிந்து ஏத்தினார்கள்.

மாதவ:

ப்ரபன்னார்த்திஹரோசான த்ரய்யந்தப்ரதிபாதித
ப்ரக்ருத்யாதி தரண்யந்த தத்வாரூமவிசேஷத:
ஜனிரக்ஷாந்த ஹேதுஸ்த்வம் ஸமஸ்தா ஞானநாசன

நமஸ்தே கருணாஸிந்தோ திகநாதத்வஸ்தபுரத்ரய
அஜாய சாஸ்வதாயாபன்னிவாராய விபூதயே
தவியஸே பக்திஹீனந்நுணும் துப்யம் நமோநம:
பிரம்மோத்தர காண்டம்.

ஐயனே போற்றி போற்றி யமலனே போற்றி
தூய்யநீறளித்தென்பாவத்தொடர் பறித்திட்டாய் போற்றி
யுய்யுமாறடியேனிகூ யெதிர்தரவுய்தநன்மை
மையறுகுணத்தாயுன்றன் திருவருள் வளந்தாற் சொல்வேன்

ஐயனே போற்றி போற்றி நிமலனே போற்றி போற்றி! தூயதாகிய திருநீறு கொடுத்து அடியேன் பாவத்தொடர்ச்சியை அறுத்தவனே போற்றி அடியேங் கடைத்தேறும்படி நேரிலே தரிசிக்கக்கூடிய நன்மை குற்றமற்ற குணத்தையுடையவனே உனதுடைய அருளின் பெருமை என்றே சொல்லுவேன்.

காந்தபுராணம் உபதேசப்படலம்.

கேளினிமைந்த வேதங்களெல்லாம்புகல்கின்ற
சூளுரை சிவனே யெல்லாந் தோற்றுவித்தளித்துமாற்றி
மீளவுந் தருகின்றானும் வியனுயிர்க்கருளை நல்கி
பாளுநாயகனுமாகியப் பரமேலாணுமென்னும்

இ-ள் வேதசாகைகள் அனைத்தும் உரைக்கின்ற ஆணைமொழி, சிவபெருமானே அனைத்தையும் படைத்து அளித்து, அழித்துப் பின்னரும் படைப்பானும், பெரிய உயிருக் கருணையளித்து ஆட்கொள்ளுநு முதல்வனும் ஆகியந்தப் பரமனுமா. என்று கூறும்:— இத்தகைய பெருமையுடைய அண்ணலே போற்றி போற்றி

சிந்தப்புரங்கொடிய திரிவுளார் மூவரைத்தா
மந்தப்புரங்களுடல் செய்தாயெம்பெருமான்.

என்று கொடிய தாருகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி யென்னும் மூவர்களது சரீரங்கள் கெடவும் அவர்களிருந்த முப்புரங்களழியவும் செய்தருளிய எம்பெருமானே போற்றி.

அவனருள் பெறாது முத்தியடைந்தனரில்லை யல்லா
லவனருளின்றி வாழுமவரும் யாருமில்லை

யவனருளெய்தினெய்தாவரும் பொருளில்லையாணை
யவனல திறைவனில்லை............

சிவபெருமானுடைய அருளைப் பெறாமல் மோக்ஷமடைந்தவர்களே இல்லை. அன்றியும் அச்சிவபெருமானுடைய அருளின்றிவாழ்கின்ற தேவரும் எவருமில்லை. அவனருள் கிடைத்தால் கிடைக்காத அரிய பொருளே இல்லை. ஆணையிட்டு உரைக்கின்றேன். அவனினும் உயர்ந்த தலைவனில்லை. இத்தகைய பெருமையுடையசாம்பிரானே போற்றி.

வந்தவர் யாவரும் வணங்கி யீசனைப்
புந்தியிலன்பொடு போற்றி யாற்றவு
நொந்தனம் விடந்தெறுஞ் செய்திலன்னதைச்
சித்தனை யெமக்கருள் செய்தியென்னவே

அங்ஙனம் சன்னிதானத்திற்குச் சென்றவர்களெல்லாம் சிவபெருமானை வணங்கி மனத்தில் அன்புடன் துதித்து அடியோர்கள் விடத்தினால் மிகவும் நொந்தோம். விரைவாக அவ்விடத்தினை போக்கி நம் அடியோர்களுக்கு அருள்செய்வீராக.

வேற்றுருவாக்கி யெம்மெய்யிற்றுய்ப்பது
மாற்றலன கன்றனனை யதம் பெ...
யேற்றமதான வெம்பிடர்கள் யாவையு
மாற்றுனர் யாருளர் மற்றுநீயலால்.

வேற்றுருவாகச்செய்து எமதுடலிற் தாக்குதலும் சகிக்கமுடியாதவராய் விலகி முன்னோடின தேவாசுரர்களுடன் அங்குநின்றும் போந்தோம். தேவரீரையன்றி எங்களுக்குண்டான இந்தப் பெரிய துன்பத்தினை வேறு யாவர் நீக்கப்போகின்றார்கள்.

ஆரணம் யாவையுமறிந்து நாடொணாப்
பூரணவுமையோடு பொருந்தியின்னதா
மோரணவுருவு கொண்டிருக்கை யெம்மையாள்
காரணமன்றியே கருமம் யாவதோ

அனைத்து வேதங்களாலும் உணர்ந்து தியானிக்கமுடியாத பூரணரே தேவரீர் உமாதேவியாருடன் பொருந்தி இத்தகைய அழகிய உருவங் கொண்டெழுந்தருளி இருத்தல் எம்மையாளும் ,காரணமன்றி வேறு கருமம். என்னையோ

தீயென வெழுதரு சீற்றவெவ்விட
மாயதை மாற்றியே யளியர் தங்களை.
நீயருள் புரிக

தீயைப்போ லெழுந்த கோபத்தினையுடைய கொடிய விடத்தினை நீக்கி ஏழையர்களான அடியோங்களைத் தேவரீர் கருணைகாட்டு ரக்ஷித்தல் வேண்டும்.

இதீரிதஸ்ஸர்வதேவை: ஹரிணாப்ரம்ஹணாபிச
மாபைஷ்டேதி மஹாதேவ: வாசாம்ருதஸமானயா
ஆர்வாஸ்யங் காலகூடம் பலாகாரம் கராம்சலாத்
க்ருஹீத்வா பலவத்கோரம் பபௌபிச்சங்கமீச்வர:

இன்ன விரைவாக அடியோங்களுப்பும் வண்ணம் அருந்தியருளுக என்று திருமாலும் பிரமனும் தேவர்களும் கூறுகிற அதனைக் கேட்டு மணம் வீசுகின்ற கொன்றமலர்மாலையை யணிந்த சிவபெருமான் இனி நீங்கள் கலக்கமுறுதீர்கள் என்று திருவாய்மலர்ந்தருளி தமதுதிருக்கரத்தினால் எடுத்து இனிய கனியைப்போல அவ்விடத்தினை பானம்செய்யவது இறைவனார் கழுத்தளவும் இறங்கியது.

த்ருஷ்ட்வாதததத்புதம் கர்ம மஹாதத்யத்புதம் சுரா:
தைத்யாச்ச விஷ்ணுப்ரம்மாணௌ நிகிலா அமராஸ்ததா
ஸாஷ்டாங்கப்ரணிபாதேன ஸ்துத்வா தத்தயா சிவம்
ப்ரிணமய்ய சிரோப்ஸ்த காரம்போருஹ கோரகா:
தஸ்து: ப்ரவிணம்ர மூர்த்தாந பரிவார்ய மஹேச்வரம்

இங்ஙனம் சிவபெருமான் திருக்கழுத்தில் அழகிய நீலமணிவடம் போல பிறரால் நீக்குதற்கரியதான கொடியவிடத்தினை யமைத்து அத்தேவர்களுக்கு நல்லவருணைப் புரியாநிற்ப திருமால் அயன் முதலிய அனைவரும் அன்றே யிறந்து பிறந்தாரை யொப்ப உரைத்தற்கரிய மகிழ்ச்சி யெய்தி தூயசந்திரனை யணிந்த திருமுடி யினையுடைய சிவபெருமானை பலதடவை தண்டனிட்டு பலவாறு துதித்து தமதுசென்னி மேல்வைத்த குவிந்த கையினர்களாக மிக்க வணக்கமாக தலைகுனிந்த வண்ணம் சிவபெருமானை சூழ்ந்துகொண்டு நின்றனர்.

பகவான் தேவதேவச: பூயோ மதனகர்மணோ
தேவாஸுரான் ஸமாதிச்ய ப்ரம்மவிஷ்ணுததாப்ரவித்

போயுவாம் கார்யஸம்ஸித்யை திஷ்டதம் தேவதைஸ்ஸஹ
ஸித்தகார்யை: தேவதாகை: எபிஸ்ஸார்தம் மமாந்திகம்
ஆகந்தவ்யம் தர்சனார்தம் யுவாப்யாம் பரயாமுதா

மிக்க மகிழ்வுத்து நிற்கும் மால் அயன் முதலியோர்களை சடைமுடியுடைய சிவபெருமான் கருணையுடன் கடாக்ஷித்து அழகிய கடலை இன்னும் கடயுங்கள். அமுதமுண்டாகும். இப்பொழுதே போங்கள் என்று தேவர்களுக்குக் கட்டளையிட்டனுப்பி திருமாலையும் பிரமனையும் பார்த்து நீங்கள் இருவரும் தேவர்களுக்கு ஸகாயமாக இருந்து கோறிய காரியத்தை முடித்துவிட்டு அமுதத்தை அருந்தியதினால் போதாநந்தம் கொண்ட தேவகணங்களுடன் என்னை தர்சனம் செய்யவாருங்கள்.

இத்யாதிச்ய மஹாதேவ: பார்வத்யா வ்ருஷமாஸ்தித:
கச்சன் கைலாஸமார்கம் அசலம் ப்ரமதைஸ்ஸஹ

என்று இவ்வாறு கட்டளையிட்டு திரிபுரமெரித்த பரமசிவன் பார்வதியுடன் கூட தமது வாகனமாகிய விருடபத்தின்மீது ஏறிக்கொண்டு திருக்கையிலைக்குச் செல்லுகையில்

மத்யே மார்கம் ததர்சாஸௌ நதீமேகாம் சுசிதலாம்
புன்னாக புஷ்பஸ்தபக ஸௌரபீக்ருத திக்தடாம்
தஸ்யாஸ்தீரே லிங்கமேகம் த்ருஷ்ட்வா தேவீம் வசோப்ரவீத

நடுவழியில் நிர்மலமாயும், சீதளமாயும் இருக்கின்ற நீரை உடைய ஓடுகின்ற ஓர் நதியையும் அதின் இருகரைகளிலும் புன்னைமரத்தோப்பையும், அதினின்று வீசுகின்ற பின்னைபுஷ்ப பரிமளத்தையும், அந்தச் சோலையின் இடையில் ப்ரதிஷ்டை செய்திருக்கின்ற திவ்ய தேஜோமயமான ஓர் லிங்கத்தையுங் கண்ணுற்று அமர்ந்திருந்துப்பொருந்தி உலகனைத்தையும் படைத்த அழகிய உமாதேவியைப் பார்த்து இதனையருளிச் செய்கின்றார்.

ஸம்சீதல: ப்ரதேசோயம் ஸரித்ரம்ய ஜலோத்கடா
சைத்ய ஸௌரம்யமாந்த்யாக்ய குணவாயுர் யுதாசிவா
அதிதீவ்ர ஹிமாம் தேவிவிஷாக்னி: தஸதிஸ்புடம்
அத்ர ஸ்மினவதீர்யாஹம் ப்ரவிச்யைதந்நிதடம்
விச்ரம்ய சாந்தகாரணதாபோபூத்வா வ்ரஜாம்யஹம்

மாதே! அதோ காண்கின்ற தென்பொருந்திய மரச்சோலையைப் பார்த்தினையா மிகவும்பார்ந்து வானமளாவி குளிர்ச்சிவாய்ந்திருக்கின்றது.

ஒளிபொருந்திய மாவரிசைகள் அழகியமெல்லிய போதுகளுடன் பசிய இலைக்கூட்டத்தினையுஞ் சுமந்து நிற்பன. இதினருகில் ஓடும் நதியும் நிர்மலமாயும் குளிர்ந்தஜலத்தை யுடையது. பரிமளம், குளிர்ச்சி, மாந்த்யமாகிற குணங்கள் பொருந்திய மந்தமாருதம் வீசுகின்றது. நான் அருந்திய காலகூடவிஷம் உலகு முடிவுகாலத்தில் எழுகின்ற மேகக் கூட்டங்களை யொப்பக் கருநிறம்பெற்றுக் கோடிக் கூற்றுக்களிடந் தங்குங் கொலையாகிய கொடுமையை மேற்கொண்டு திக்குள்தோறும் உலாவுகின்ற கோடிக்காற்றுகளின் வேகத்துடன் நூறுகோடி வடவாக்னியைபோல் என்னை மிகவுந் தகிக்கின்றது. ஸகிக்கமுடியவில்லை.

ஆகையால் நான் சற்று இந்த ஆற்றின் கரையில் குளிர்ந்தசோலைகளின் இடையே இளைப்பாறி இந்த தாபத்தை ஆற்றிக்கொண்டு கைலாயத்திற்குச் செல்லுவோம்

> இத்யுக்த்வா ஸகஸா தேவ்யா கிம்சித்துக்கித சேதஸா
> அவதீர்ய வ்ருஷாத்தூர்ணம் நந்தியாதிகணை ஸ்ஸஹ
> நதீதடே தருஷிணேன வல்மீகேச்வர லிங்கத:
> அத: புன்னாக வருக்ஷாணாம் புஷ்பிதானாம் ஸசாகிநாம்
> கீர்ணபுஷ்ப ப்ரவாளேத பூதலே ஹ்யவசம்கத: ஸுஷ்வாப

என்று திருவாய்மலர்ந்தருளி " இக்கொடிய விஷத்தின் கொடுமையினால் தமது புருஷனுக்கு என் வருகிறதோ " என்று பயந்து நடுக்கிய கண்களையுடைய உமையுடன் தமது வாகனமாகிய தர்ம வ்ருஷத்தினின்றும் இறங்கி நந்தி முதலிய கணங்களுடன் " வால்மீகி மகர்ஷியால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு வல்மீகேச்வரலிங்கம் என்று புகழ்பெற்ற வல்மீகேச்வரலிங்கம் சுடரொளியாய் நின்ற காலகூடாசன க்ஷேத்ரத்திற்கு வந்து வல்மீகேச்வர லிங்கத்தின் தென்பக்கத்தில் புன்னைமரச்சோலையின் இடையிலே புஷ்பங்கள் குவிந்து கிடக்கிற ஆரண்ய நதியின் கரையிலே, பரவசமாய் இட்டகால் இட்ட கைகளாய் தாள்களையும் தோள்களையும் பரப்பி தரையில் படுத்துறங்கி விட்டான்.

> ஸர்தமீசாம ப்ரமதாஸ்தா லவ்ருந்தகை:
> விஜயாமாஸ சரத்சீத கன்யா ஸாப்யதி விஹ்வலா
> உபவிச்ய கிரேணாஸ்ய கண்டம் ஸ்ப்ருஷ்ட்வாஸமீபத:
> சபம்தஸ்ய சிவஸ்யாபி ப்ரார்தயந்தி ஹ்யவர்தத

இதைக் கண்டு மனம் கலங்கி ஸ்திரீகளெல்லாரும் சாமரங்களாலும், விசிரிகளாலும் ச்ரமம் ஆறும்படி வீசினார்கள். பர்வதராஜனின் புத்ரியி

களில் பிறந்த திருமகளும் சிவபெருமானருகில் உட்கார்ந்துகொண்டு நீலநிறமுள்ள கண்டத்தை கைகளால் தடவிக்கொண்டு ஆதிமுதல் காரணமாய் உலகத்தை எல்லாம் படைத்துக் காற்றருளும் உலகுக்கோர் தந்தையாகிய சிவபெருமானுக்கு மங்களங்களை பிரார்த்தனை செய்துக் கொண்டு எழுந்திருக்கும் ஸமயத்தை எதிர்ப் பார்த்திருந்தாள்.

ததோ தேவாச்சதைத்யாச்ச புன: க்ஷீராப்திம் வ்ருதா:
மமந்துஸ்தத்ர ரத்னானி கௌஸ்துபோமா ஹரித்ஹய:
கஜோத்தம: சதுர்தந்த: சந்திரோ தன்வந்தரீஸ்திரிய:
திவ்யாஹ்யப் ஸரஸோநாம பியூஷமமிதம் ததா
ஸர்வமேதத் ஸமுத்பூதம்

சிவபெருமான் திருவருளினால் காலகூட விஷத்தின் கொடுமை அடங்கியதும் அவர் நியமனத்தை சென்னியால் தரித்து மருபடியும் திருப்பாற்கடலை கடைய ஆரம்பித்தனர். அப்போது அச்சமுத்திரத்திலிருந்து அநேக உயர்ந்த இரத்தினங்கள், கௌஸ்துபம், மகாலக்ஷ்மி, உச்சைச்ரவஸ் என்கிற குதிரை, நாலு தந்தங்களையுடைய ஐராவதமென்கிற வெண்யானை, சந்திரன், தன்வந்திரி என்கிற தேவவைத்யன், நித்யயுவதிகளாய் திவ்யாலங்காரங்களால் அலங்கரிக்கப்பட்ட அப்ஸரஸ்திரீகள் அமிருதம், இவைகளெல்லாம் ஒவ்வொன்றாய் வெளிக்கிளம்பியது.

தைத்யாரி: கௌஸ்துபம் லக்ஷ்மீம்
இந்திராயப்பத்ருண்ணாத்ஸ: இந்திரோவாஜினமுத்தமம்
கஜம்ப் ஸரஸோ ரத்னானித்யே வமக்ருண்ஹத

அப்போதலர்ந்த தாமரைமலரை ஒத்த திருக்கண்களை உடைய திருமால் கௌஸ்துபத்தையும், மகாலக்ஷ்மியையும் எடுத்துக்கொண்டார். தேவாதிதேவனாகிய இந்திரன் உச்சைச்ரவஸ் என்கிற குதிரையையும், ஐராவதம் என்கிற யானையையும், திவ்யாப்ஸரஸ்திரிகளையும், இரத்னங்களையும் எடுத்துக்கொண்டான்.

தைத்யேந்திரா: ஸுதாபூர்ணம் ஸௌவர்ணம் கலசம்ஜவாத்
க்ருஹீத்வா கம்னோத்யுக்தா: பபூவு: பலதர்பிதா:
அமரா அஸமர்தாஸ்தேவிஷண்ணமனஸோபவன்

அப்பொழுது அஸுரர்கள் மிக்க பலவந்தர்களாகையால் அந்த அமிருதம் நிறைந்தகுடத்தை எடுத்துக்கொண்டு புறப்பட ஆரம்பித்தார்கள் அதைக்கண்டு தேவர்கள் அவர்களை தடுக்க சக்தியற்றவர்களாய், அய்

யோ! நாம் செய்த பெருமுயற்சிகளெல்லாம் கைகூடி முடியுந்தருணத்தில் வீணே போயினவே. நமது குருவாகிய வியாழபகவான் செய்த சூழ்ச்சிகள் எல்லாம் விபலமாக ஆகிவிட்டனவே திருமால் சிவபெருமான் இவர்களின் அருள்கள் இப்படியும் ஆருமோ என்செய்ய என்று திகைத்து பெருமூச்சுவிட்டு தலைகுனிந்த வண்ணம் நின்றனர்.

ஏதஸ்மிந்நந்தரே விஷ்ணோர்விசித்ரமஹிமாததா
மோஹினீ யோஷிதாம் ச்ரேஷ்டா [illegible] லக்ஷாம் ஸர்வவித் விஷாம்
அதிஷ்டத்புரதோமந்தப் ஸஞ்சாரமகரோத்ததா

அந்த ஸமயத்தில் பிறர் அர்த்திக்காமல் இருக்கிலும் தன் பேராகவே பிறரைக் காத்தருளும் மிக்க உதாரமான குணத்தையுடையவனும், பிரஜை காப்பாற்றுவதற்கு உதந்த அநந்தகல்யாணாமயர்க்கபெருமா, சக்தியும் பெற்ற திருமால் அசுரர்கள் எடுத்துக்கொண்டுபோன அமிர்தத்தை தேவர்களுக்கு கொடுக்கவேணுமென்று எண்ணங்கொண்டு அசுரர்களை ஏமாற்ற மிக்க அற்புதமாய்ந்த ஸ்திரீயின் ரூபத்தை எடுத்துக்கொண்டு அசுரர்கள் முன்னே ஆவிர்பவித்து கருமேகத்தையொத்த பெருங்கூந்தல் அசைய, அப்போதலர்ந்த தாமரைமலர் போன்ற பாதங்கள் சிறு சதங்கை அன்னங்களின் சத்தம்போல சப்திக்கவும், நீலக்கருமுகில் மின்போன்ற கடாக்ஷம் அசுரர் மீதே படும்படியாக உலவினள்.

தாம் த்ருஷ்ட்வா ஸர்வ்யாஸ்மைத ஸுந்தரீம் லோகமோஹினீம்
த்ருதாம்ருதகலசாம் பூர்ணாம் பீயூஷைஸ்தாம் வாஸ்திரியம்
அப்பாகச்சன் ததாஸர்வே விவசா மதனார்த்திதா:

அப்போது அசுரர்கள் தங்கள் எதிரே உலாவிவருகிற ஸ்திரீயின் உருவத்தைப் பார்த்து மோகங்கொண்டு இந்திரியங்கள் ஒன்றும் ஸ்வாதீனமில்லாதவர்களாய் அந்த அமுதகலசத்தை கீழே வைத்துவிட்டு அந்த மோஹினியைச் சூழ்ந்துகொண்டார்கள்

ஆஹமேயதாக்ததா தைத்யான் மோஹயந்தீமப்ரவீத்
பங்க்த்யாத்வமேகதோயூயம் ஏதே: பங்க்திச: ஸுரா:
அஹம்விபஜ்ய பீயூஷம் க்ரமாத்தத்யாமஹேததா

மோஹினி தமது இன்பமிகு மொழிகளாலும் கடைக்கண்களாலும் அவர்களை வஞ்சித்து தன்வசமாக்கிக்கொண்டு அவர்களைப்பார்த்து வ

நீர் அசுரர்களே நீங்கள் எல்லோரும் வரிசைவரிசையாக உட்காருங்கள் அமிருதத்தை நான் சமமாகப் பங்கிட்டு கொடுக்கிறேன் என்று இனிமையாக பேசினாள்.

இத்யுக்தா திதிஜா: ஸர்வேவகோம்ருதஸமாக்ஷரம்
யதேச்சஸி ததைவத்வம் அம்ருதம் தாதுமர்ஹஸி

அம்மொழிகளைக் கேட்டு அமுதத்தைகாட்டிலும் நூறு மடங்கு இன்பம் பொருந்திய வாகமுதத்தைக் கேட்டு மதிமயங்கி உள்கலங்கி தயங்கி இன்பவெள்ளம் பெருக, கண்கள் சோர, உடம்பு புளகாங்கிதமாக, வேர்வை இட அன்ன நடையுடையணங்கே கேளாய் உன் இஷ்டப் படியே செய். நீயே இந்த அமுதகலசத்தை எடுத்துக்கொள்ளு. உன் இஷ்டப்படியே எல்லோருக்கும் பங்கிட்டுக்கொடுப்பாய்

தேவேப்ய: ப்ரதமம்தத்வா சுதாயஸஹஸாந்தரி
த்வமஸ்மானே ஹிதயயா போக்யாஸ்மாகம் பவிஷ்யஸி

முதலில் தேவர்களுக்கு அமுதத்தை பங்கிட்டுக்கொடுத்து பிறகு அமிருதகலசத்துடன் எங்களிடத்தில்வந்து சேரவேணும். மடநோக்கையுடைய மாதே தயைசெய்து எங்களுக்கு மாத்திரம் நீ எங்களுக்கே பிரியையாக ஆகவேணும். உன்னைவிட்டு ஒருக்ஷணகாலமும் பிரிந்திருக்க வல்லோம். எங்கள் ராஜ்யமனைத்தும் உனக்காதீனமாக செய்துவிடுகிறோம்.

இத்யுக்தாமோஹினீகிஞ்சித்ஸ்மித்வா தத்தேவஸ்ஸந்த
அம்ருதம் நிகிலம் தத்வா ரிக்தபாண்டமகாரயத்

என்று இவ்வாறு சொல்லப்பட்ட மோகினி அவர்களுடைய மூடத்தனத்தைக் கண்டு சிறித்துவிட்டு அமிதகலசத்தை அசுரர்களிடத்திலிருந்து வாங்கிக்கொண்டு தேவர்களை எல்லாம் ஒருபக்கத்தில் வரிசையாய் உட்காரச்செய்துவிட்டு அவர்களுக்கு எல்லா அமிருதத்தையும் பங்கிட்டுக்கொடுத்துவிட்டு கொஞ்சம்கூட அம்ருதத்தை மீத்தாமல் வெறும் கலசமாகிவிட்டாள்.

தேவான்பிதஸ்ஸாந்தான்ப்ராஹமேஹாத் ஸாஹாஸ்மஹாபலான்
இத்தம்வ: கார்ய மனுஜித்வேமான் த்விஷதோமா:
ஸ்வாராஜ்யம் நிகிலம்பூயம் பூர்வவத்போக்ஷ்யதாதுனா

இவ்வாறு அமிருதத்தை எல்லாம் தேவர்களுக்கே பங்கிட்டு கொடுத்து விட்டு தேவர்களைப் பார்த்து வாரீர் தேவர்களே! நீங்கள் கோறிய காரியம் நிறைவேரியது. இனி பயப்படவேண்டாம். மிக்க பலவந்தர்களாகி விட்டீர்கள். அசுரர்களால் உங்களை வெல்லமுடியாது. இனி நீங்கள் அசுரர்களுடன் போர்செய்து அவர்களை எளிதில் வென்று கொன்று விட்டு முன்போல் ஸ்வர்கராஜ்யத்தையும், ஐஸ்வர்யத்தையும் பெற்று மூன்று உலகங்களையும் செங்கோல் செலுத்துங்கள். உடனே புறப்படுங்கள்.

இத்யுக்த்வா ஸ்வஸ்வஸ்யரூபம் க்ஷணாத்ப்ராபசதுர்புஜம்

என்று சொல்லிவிட்டு உடனே தமது ஸ்திரி உருவத்தை மறைத்து விட்டு நாலுதிருக்கைகளும், திருப்பீதாம்பரமும், திருவபிஷேகமும், திருசலங்கை அணிந்த திருவடிகளும், திருமகள் நித்யவாஸம் செய்கின்ற விசாலமான திருமார்பும், நீண்டு பெருத்த ஆஜானுலம்பிகளான திருக்கைகளும், திருக்குண்டலும் சாத்திய காதுகளுமான தமது ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பித்து மறைந்துவிட்டார்.

ப்ரம்மாதிதோஷமகமத்..............

இதைக் கண்டு பிரமதேவர் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தார்.

...............நிதிநாநிவிலாஸ்ததா
நிர்வேதம் பரப்ராப்ய சுதாலா பருஷார்திதா:
யுத்தாய ஸமநஹ்யந்ததான் ஸர்வானமராக்ஷணாத்
ஜித்வா வித்ராவயாமாஸ: க்ருபயா பரமேஷிது:

அப்போது அசுரர்கள் எங்குத்தேடிப்பார்த்தும் மோகினியைக் காணமல் திகைத்து வியப்படைந்து அட மோசம்போய்விட்டோம். மோகினியையும் காணோம் அமிருதகலசத்தையும் காணோமே. இது என்ன முட்டாள்தனம். ஒருபெண்ணால் நாம் மிக்கபலவந்தர்களாயும் மூன்று உலகங்களையும் ஆளும்படி சக்திவாய்ந்தவர்களான நாம்பலரும் ஏமாந்தப்பட்டு அமிருதத்தை இழந்துவிட்டோமே. நாம் பகையாளர்களான தேவர்கள் செய்த சூழ்ச்சியாகத்தான் இருக்கவேண்டும். இப்போதே போரில் அவர்களை வென்று கொன்றுவிடுவோம் என்று ஓர்வீராவேசம் கொண்டு தேவர்களைத் தாக்கினார்கள். அமிருதத்தை அருந்தியதினால் மிக்க பலத்தையும், உத்ஸாகத்தையும், தேஜஸ்ஸையும், சக்தியையும் ஞானத்தையும், வீர்யத்தையும், ஐஸ்வர்யத்தையும் பெற்று தேவர்கள் மிக்க உத்ஸாகத்துடன் எதிர்த்து நின்று போர்செய்து அசுரர்களை அடித்துத் துறத்திவிட்டார்கள்.

ஏதஸ்மிந்நந்தரே யோகீநாமதோ வைணிகோத்தம:
நாராயணம் நமஸ்க்ருத்ய ப்ரம்மாணமபி தைவதம்
ஸம்மாண்ய ப்ராஹகம்பீரம் ப்ரச்ரபாவனதஸ்ததா

அந்த ஸமயத்தில் வீணையை வாசித்துக்கொண்டு பகவத்குணங்களையே எப்போதும் பாடிக்கொண்டு ஏழு உலகங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டு காலக்ஷேபம் செய்கிற நாரதமகர்ஷியானவர் அங்குவந்து கைகழ வாநேமியானை திருமாலையும், கமலாஸனத்திலிருந்து உண்டாகிய பிரமதேவரையும் நமஸ்கரித்து வணக்கமாய் சொல்லத் தொடங்கினார்.

நாரத:

பகவந்நத்ய தேவேச: பார்வத்யா ஸஹசங்கர:
விஷபான ஸமுத்பூத மனோ ஸ்போஹாகுலோப்ருசம்
அரண்யாக்யநத்தீம் மஹாகடகநாமகே
க்ஷேத்ரே தத்புருஷாபிக்ய லிங்கவர்யஸ்யதக்ஷிணே
புன்னாக த்ருமமூலே ச கௌஸ ...மேசயனேவச:
...............நித்ரா திபராமானந்த:

திருப்பாற்கடலை கடைந்து தேவர்களுக்கு அமுதமூட்டிய திருமாலே கேளும். உலகங்களை எல்லாம் தீயினில் தாகபோலாகாமல் அக்கொடிய காலகூட விடத்தை அருந்தியதனால் அவ்விடத்தின் தாபத்தை ஸகிக்கமுடியாமல் மிகுதுன்பமடைந்து களித்துப்போய் சிவபெருமான் திருக்கைலாயத்திற்கு போகமாட்டாமல் மத்தியிலே அரண்ய நதியின் கரையில் மஹாகடகமென்ற பெயருடைய காலகூடாசன க்ஷேத்திரத்தில் தத்புருஷன் என்று பெயர்பெற்ற வல்மீகேஸ்வர லிங்கத்தின் தென்பக்கத்தில் புன்னைமரங்கள் அடர்ந்த தோப்பில் புஷ்பமயமான படுக்கையில் பரவசமாய் படுத்துறங்குகின்றார்.

...........பார்வதீச கணேச்வர:

பரிவார்ய மஹாதேவம் நித்ராஸக்தபுஜம் சிவம்
வீஜனத்யுப சாரேண தூஷ்ணீம் பூதா உபாஸதே

இங்ஙனம் பரவசமாக படுத்துறங்குகின்ற சிவபெருமானைக் கண்டு கலங்கி என்செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் "எப்போது உறக்கம் தெளிந்து எழுந்திருக்கப் போகின்றாரோ தெரியவில்லையே" என்று விசாரப்பட்டுக்கொண்டு உமாதேவியாரும் மற்றப்ரமதகணங்களும் சிவபெருமானை சூழ்ந்துக்கொண்டு விசிறியினால் மெள்ள வீசிக்கொண்

சைத்யோபசாரங்கள் செய்துக்கொண்டு ஒருவரோடொருவர் வாய் திறந்துப் பேசாமல் பயப்பட்டு நடுங்கிக் கிடைக்கிறார்கள்.

இத்யுக்தவதி தேவர்ஷௌ தஸ்மின் கிஸ்ருஸ் ஸமாதவா:
ஸப்ரமகாஸ் ஸுராஸ்ஸர்வே தந்தேச மகமந்ழுதா

இங்ஙனம் நாரதமாமுனி கூறிய மொழியைக் கேட்டு திருமால் பிரமன் இந்திரன் மற்றுமுள்ள தேவர்களும் திடுக்கிட்டு உள்ளங்கலங்கி பயந்து நடுங்கி சிவபெருமானைக் காணவேணுமென்றும் விரைவாக இந்த காலகூடாசன க்ஷேத்திரத்திற்கு ஓடிவந்தார்கள்.

அததாநாகதாந் தேவான் ஸஹரீன் நந்திகேஸ்வர:
ஸ்வவேத்ரகாலனேனுப ஸஞ்ஞயாசாப்ரஷிதிதம்

மிக பரபரப்புடன் ஓடிவந்த தேவக்கூட்டங்களைக் கண்ணுற்று நந்தியானவர் "இவர்கள் செய்யும் ஆரவாரத்தினால் சிவபெருமான் தூக்கத்திற்கு என்ன இடையூறு நேரிடுகிறதோ என்று பயந்து தமது பிரம்பினால் பேசாமல் தூர நில்லுங்கள் என்று ஸஞ்ஞை காட்டி மெதுவாகச் சொன்னார்.

தூஷ்ணீபாவ முபாச்ரித்ய லர்தத்வம் தூரதோதரே
யாவந்நர்திஷ்[illegible]: [illegible]
[illegible]
விஞாப்யத்வயா யுஷ்மான தாசயிஷ்யாம் யஹம் [illegible]

தேவகணங்களே! சிவபெருமான் புஷ்பசயனத்தில் ச்ரமபரிஹாரார்த்தமாக மந்தமாருதம் வீச ஆனந்தமாக உறங்குகின்றார். அதற்கு விரோதம் வாராமல் பேசாமல் தூரத்திலேயே ஸந்தடி செய்யாமல் இருங்கள் சிவபெருமான் உறக்கம்தெளிந்து எழுந்திருந்தவுடனே அவரிடத்தில் நீங்கள் வந்திருப்பதை விஞ்ஞாபனம் செய்துவிட்டு உங்களுக்கு தர்சனம் செய்துவைக்கிறேன். போங்கள் என்றார்.

இத்யுக்தாபரிதஸ்தஸ்து: ஹரிணா ஸஹதேவதா:

இவ்வாறு நந்திதேவரால் கூறப்பட்ட தேவர்கள் சிவபெருமான் உறக்கத்தைவிட்டு எழுந்திருக்கும் ஸமயத்தை எதிர்ப் பார்த்துக்கொண்டு ஸந்தடி ஒன்றும செய்யாமல் ஏகாந்தமாக அந்த காலகூடாசன க்ஷேத்திரத்தில் தங்கியிருந்தார்கள்.

ஏதஸ்மின் ஸமயே க்ருஷ்ணபக்ஷே மந்தஸ்யவாசரே
த்ரயோதசீ ஸமபவத் தஸ்யாமுத்தியதேச்வர:

பலநாள் சென்றவாறே சிவபெருமான் க்ருஷ்ணபக்ஷத்தில் செவ்வாய் கிழமை த்ரயோதசி திதி கூடிய தினத்தில் உறக்கம் தெளிந்து எழுந் திருந்தார்.

பார்வதீம் பார்ச்வதேசஸ்தாம் விலோகோத்த புல்லலோசனும்
ஆச்லிஷ்ய பரமப்ரீத இதம் வசனம் ப்ரவித்

அப்போது சிவபெருமான் தன்னருகில் உட்கார்ந்துக்கொண்டு " அக் கொடிய விடத்தின் தாபம் அடங்கி எப்போது எழுந்திருக்கப்போ கின்ருரோ. என் செய்வது என்று மனோவியாகுலத்துடன் விசிறியும் கையுமாய் பெருமூச்சுவிட்டுக்கொண்டு தலை குனிந்தவண்ணம் இருக் கின்ற பார்வதியை ஆலிங்கனம் செய்துக்கொண்டு

காலேவிக்ஷமஹ0 கிம்சித் இயந்தம் காலமத்ரிஜே
த்வாமிமான் ப்ரமதாங் ஸர்வான் கடுணோப மாத் ப்ரியே

பர்வதராஜன் புதல்வியாகப் பிறந்து கடோரமானதவத்தின்பயனாக என்னை பெற்ற அன்பே ஓர் வடிவம் கொண்டதுபோல் நின்ற என் காதலியே! அக்கொடிய விடத்தின் தாபத்தினால் இந்திரியங்களெல்லாம் சோர்வை யடைந்து மதிமயங்கி ஒன்றையும் உணர சக்தியற்றவனாய் இத்தனை காலம் உறங்கிக்கிடந்தேன். நீ பக்கத்தில் உட்கார்ந்து தாபமாரும்படி விசிக்கொண்டிருப்பதையும் இப்பிரமதகணங்கள் அனைவரும் என்னைச் சுற்றிக்கொண்டு காற்றுக்கொண்டிருப்பதையும், இந்த பிரதேசத்தை சற்றுமுணரவில்லை. அய்யோ! அக்கொடியவிடம் என்னையும் இவ்வாறு கலக்கி மதிமயக்கச்செய்தது. இது வெளியிலே கிளம்பி உலகத்தில் பறவியிருந்தால் உலகங்களையே எறித்துவிட்டிருக்கும். அநியாயமாக ஜீவகோடிகள் நசித்துப்போயிருக்குமே

இத்யுக்தா லாததாதேவி ஹ்ருஷ்டாரோமபாக்ஷத
என்று சிவபெருமான் அக்கொடியவிடத்தின் தாபம் போய் தெளிந்து எழுந்து கூறியமொழிகளைக் கேட்டு உமாதேவி பேரானந்தம் கொண்டு

ஸ்வாமின் கோரவிஷாசனேன பவதா நாதேன
ஸம்ரக்ஷிதாதேவா இந்திர புரோகமாஸ்திரிஜகதோ
கோரார்ணி தாபாதுரா:

உலகங்களைப் படைத்து ஆபத்துவருங் காலங்களில் காற்று ப்ரளயகா லும் வந்தபோது ஸம்காரம் செய்தருளுகிற பரமனே கேட்டருளாய்

இப்போது பாற் கடலிலிருந்து உண்டாகிய இக்கொடிய விடத்தை அமுதுசெய்து இந்திரன் முதலாகிய தேவகணங்களையும் பிரமனையும் திருமாலையும் காப்பாற்றினீர். நீர் அப்படி அமுது செய்யாவிடில் மூன்று உலகங்களும் தாபத்தினால் எறிந்துப்போயிருக்கும்

மந்தாசல மந்தஜாத விஷபானேத்பூதஸம்மோஹனம்
ஹ்ருத்பத்மம்ம்ருதுதேவதேவபிபிஷாத்ப்லுஷ்டம் யதாதூலகம்

எவ்வளவு கலக்கினாலும் கொஞ்சம்கூட கலங்காமல் இருக்கிற ஸமுத்திரம்போல மிகவும் கம்பீரமான தேவரீருடைய தாமரைமலரைவிட மிக்க மிருதுவாக இருக்கிற ஹ்ருதயமானது மந்தரபர்வதமாகிற மத்தினால் கடையப்பட்ட ஸமுத்திரத்திலிருந்து உண்டாகிய அக்கொடிய விஷத்தை பானம்செய்ததினால் கலங்கி நெருப்பினருகில் இருக்கின்ற பஞ்சுபோல பொசுங்கி மோகத்தை அடைந்துவிட்டது. இதென்ன ஆச்சரியம்.

உத்தானம் பவதோ விகார ரஹிதம் ஹ்யாலோக்ய மோதாம்
தௌ சித்தம் மேதலகாமி சித்ரஜடீரஸம்ப்ராப்த ஸம்மஜ்ஜனம்

அக்கொடிய விடத்தினால் தேவரீருக்கு ஒருகெடுதியும் உண்டாகாமல் தேவரீருடைய லோகோத்தரமான விசித்ர சக்தியினால் அவ்விட வேகத்தை அடக்கி ஓங்கவெட்டாமல் தடுத்து "நிர்விகாரம்" என்று முதல்முறைவசனம தவறாமல் அவ்வேதமொழியை ஸத்யமாகச்செய்த நிர்விகாரஸ்வரூபத்தை உடைய தேவரீரைக் கண்டு ஆச்சரியமாகிற ஸமுத்திரத்தில் அமிழ்ந்து கிடக்கிறேன். தேவரீரைத் தவிர மற்ற எவரால் இந்த ஸாஹஸகார்யம் செய்யமுடியும்.

நேத்ராதீந்திரிய யோகவர்ஜிதமஹோநிச்சேஷ்டயாவீக்ஷ்ய ப்ருசம்

இத்தனைநாள் இந்திரயங்களுடைய உணர்ச்சியில்லாமல் மோகத்தை அடைந்திருந்த தேவரீரைக் கண்டு மிகவும் பயந்திருந்தேன். உலகுக்கோர் தனிமுதலாகிய தேவரீருக்கு பொல்லாங்கு ஒன்றும் நேரிடாமல் எப்போது உணர்வு உண்டாகப்போகிறதோ. என்னசெய்யபோகிறோம் என்று வியாகுலப்பட்டுக்கொண்டிருந்தேன்.

தஸ்மாத்தோஷதிதிச்சுபோ பவது தே போதாத் ப்ரமேஹாத்
சுபாத்

இன்று செவ்வாய்கிழமை கூடிய க்ருஷ்ணபக்ஷ த்ரயோதசிதிதியில் ஸாயங்காலம் தேவரீர் மோகத்திலிருந்து தெளிந்து உலகங்களனைத்தையும் கடாக்ஷித்ததினால் இந்த ப்ரதோஷகாலம் மிகவும் மங்களத்தை உண்டு

பண்ணக்கடவது. இந்த ப்ரதோஷவேளையில் தேவரீரை பூஜை செய்த வர்களும் முக்தியைக்கொடுத்து கடாக்ஷித்தருளுவீர் என்று சிவபெரு மானை பிரார்த்தனை செய்துக்கொண்டாள்.

கவனிப்பு.

உலகத்தில் பிரதோஷவேளையில் சிவபூஜை விசேஷமாக நடுத்துவதற்கு இது ஒருகாரணமென்று காண்க. இதை சூதமுனிவர் பிரம்மோத்தர காண்டத்தில் அருளிச்செய்கின்றார்

இன்னதே யருளும்பிர தோடமென்னயாம் வழுத்துதற்கெளிதோ
அன்னவாகனனுங்கலுழ வாகனனுமறிவதன்றதனுடைப்பெருமை
பன்னகாபரணன் பூசையினது போற்பலந்தரும் பூசையின்றெனஎன்று
நாண்முழுது முணர்ந்தவக்மொழிந்தான்முனிவரனைவரும் மகிழ்ந்தார்

பிரதோஷ பூசையின் பலனானது இத்தன்மையுள்ள இகபர சவுக்கி யங்களை தருமென்ற நாம் விவரித்துச் சொல்வதற்கெளிதல்ல அதனு டைய பெருமை பிரமதேவனாலும் விஷ்ணுவினாலும் அறியத்தக்கது மல்ல. சர்ப்பாபரணங்களை அணிந்திருக்கும் பரமசிவனுக்குரிய பூசை களில் இந்த ப்ரதோஷபூசையைப்போலப் பலனைத்தரும். பூசைவே றொன்றுமில்லையென்று வேதாகம சாஸ்திரங்களை எல்லாம் உணர்ந்த சூதமுனிவர் சொன்னார். (அதைக் கேட்டு நைமிசாரண்ய முனிவர்கள் மனமகிழ்ந்தார்கள்.) இவ்வித மகிமைக்கு இந்த கதையே மூலாதார மெனக் காண்க.

ஏதஸ்மின் ஸமயே தேவா: மதுத்வேஷி புரோகமா:
சூர்யாஸ்தமய வேளாயாம் ஸமாகம்ய ஸஸத்வரம்
பரஸ்பரம் ஸம்லபந்தௌ பரமானந்த நிர்பரே
ஆச்லிஷ்பந்தாவதாந்யோந்யம் ஜகதாதிமதம்பதீ
நந்திகேசம் புரஸ்க்ருத்ய ப்ரணதாபுவி தண்டவத்
ஆஸ்தவன் பரயாமக்த்யா மூர்த்னி வின்யஸ்தபாணய:

அந்த ஸமயத்தில் பிரமன் திருமால் இந்திரன் முதலிய தேவகணங்கள் சிவபெருமான் மோகத்திலிருந்து தெளிந்து உணர்ச்சி பெற்றிருக்கிறார் என்பதை அறிந்துகொண்டு சிவபெருமானை தண்டனிடவேணுமென்று பேராவல் கொண்டு அந்த ப்ரதோஷ ஸமயத்திலேயே நந்திகேச்வர ருடைய அனுமதியினாலே அவரை முன்னிட்டுக்கொண்டு ஐம்புலன் களை பொருவழிப்பட நிறுத்தி காமவெகுளியை நீக்கி சித்தத்தில் பொ

ருந்தப் பாவித்து வாயினால் பஞ்சாக்ஷரத்தை சொல்லிக்கொண்டு கை
களில் மலர்களை ஏந்திக்கொண்டு மலையரையன் புத்திரியாய் மயில்
போலச் சாயலையும் மின்னலைப்போலப் பிரகாசிக்கும் திருமேனியையும்
சிறிய மருங்குலுக்குத் துன்பஞ் செய்யத்தக்கதாய் அழகுகொண்டி
ருக்கும் தனங்களையும் பதிவிரதா தர்மத்திற்கு அரசி என்று சொல்
லத்தக்க தன்மையும், சந்திரகலை என்கிற ஒருவித ஆபரணந் தாங்கிய
கரிய அளகத்தையும். அழகுக்கு அழகினைத்தருவதாகிய திருமுகத்தை
யுடைய பொன்கோம்புபோல விளங்கும் பார்வதிதேவியாரையும், மன்
மதனுடைய சரீரத்தை நீறுசெய்த தீயை வழங்கிய நெற்றிக்கண்ணை
யுடையவராய் அடியார்களுக்கு கரும்புபோலிருக்கும் இன்பகளஞ்சிய
மாயும், பிரமதேவனுடைய தலையினின்றும் நாறுகின்ற புலால் நாற்
றத்தை நீக்கப் பொன்னிறமுள்ள கொன்றைப்பூமாலையின் வாசனையா
னது அஷ்டதிசையளைக்கும் பரிமளிக்கும்படி அணிந்திருக்கும் அழ
கிய மார்பையுடைய ஒப்பற்ற பரமபொருளாயும், வெள்ளிமலையின்
மேல் மாணிக்கமலை வருவதுபோல விளங்குகின்ற சர்பசயனத்தில்
பள்ளிக்கொள்ளும் விஷ்ணுவாகிய ரிடபவாகனத்தில் பவனி செல்லு
கின்ற பரமசுடரும் சந்திரனுடன் பகைத்துத் துள்ளி அலைகள் ததும்பி
க்கொண்டிருக்கும் கங்கையை அணிந்த சடையையுடையவரும், இள
மையாகிய புள்ளிமான்கன்று விளங்கிக்கொண்டிருக்கும் செந்தாமரை
மலர் போன்ற திருக்கரங்களையுடையவரும், உலகத்தைச் சூழ்ந்திருக்
கும் அலைநிரையுடைய சமுத்திரத்தையும் மலைகளையும் பூமியையும்
மற்றுமுள்ள எல்லாவற்றையும் தாங்குகின்ற ஆதிசேஷனுடன் வேத
மாகிய சிலம்புகள் சத்தித்துக்கொண்டிருக்கும் திருவடிகளை யுடைய
வரும் நீர்மிகுந்த திருப்பாற்கடலில் உண்டாகிய ஆலகாலவிஷத்தை
உண்டு காக்கவிரக்கமுடையவரும், ஓங்குகின்ற சிகையினையுடைய
முத்தீயொளிருகின்ற சூலாயுதத்தை யுடையவருமான சிவபெரு
மானையும் ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு பரமானந்
தத்தை அனுபவிக்கின்ற உலகுக்கோர் தனிமுதலாகிய தந்தைதாயாயின
இருவர்களையும் தர்சனம்செய்து ஸாஷ்டாங்கமாக தண்டனிட்டு தலை
யில்வைத்த குவிந்த கையினர்களாய் மிக்க பக்தியுடன் ஸ்தோத்திரம்
செய்தார்கள்.

தேவா ஊக

### ஜகதுற்பத்தி ரக்ஷாதிஹேது அற்புதம் ஸஞ்சனம்

ஸமப்யர்ச்யாநுஜ்ஞாதா: இச்காம: ஸ்வம் ஸ்வமாலயம்
கர்தும் ஸமநுஜாநீதõ பூஜாயையுவயோர் ஹிக:

எல்லா உயிர்களிடத்தும் நிறைந்திருப்பவரும் தனுகரண புவனபோ கங்களை ஆத்துமகோடிகளுக்கு தந்து மறை தவறாமல்படைத்து காத் துக்கொண்டிருக்கும் பரமனும் பக்குவாத்மாக்களுடைய ஆணவமலம் நீங்கினவிடத்து விளங்குகின்ற மெய்ஞ்ஞானப் பார்வைக்குத் தரிசன மாகின்ற வேதங்களால் துதிக்கப்பட்ட ஆதிகாரணமாகிய தேவரீருக்கு முறைதப்பாமே கற்பூறதீபமும் நல்லவாசனையை தருகின்ற தூபமும் மற்ற எல்லா உபகாரங்களும் குறைவுபடாமல் இனிதாகச்செய்து தே வரீருடைய இரண்டு திருவடிகளையும் ஆராதித்துவிட்டு அடியோங் கள் தங்கள் தங்கள் இடங்களுக்குப் போக விரும்புகின்றேன். ஆகை யால் க்ருபைசெய்து எங்களுடைய மனோரதத்தை பூர்த்தி செய்விக்க வேணும்.

நைதாத்ரு சோ ஹிஸமய: ஸப்யதேஜ்ஞாதுசித்சக:
யதோயுவாம் பரம்தோஷம் ப்ராப்தைனலோக ஹிதைஷிணோ ஸ்ன
க்ருஷ்ண த்ரயோதசீ மந்தவாரயுதா ப்ரதோஷகா

உலகங்களுக்கெல்லாம் தாய்தந்தையரான நீங்கள் இருவரும் ஒருவ ரொடொருவர் சேர்ந்து மிக்க ஆநந்தமாக இருக்கின்றீர்கள். காலமோ ப்ரதோஷவேளை. இப்படிக்கொத்த ஸமயம் நேறிடுவது அறிது ஆகை யினால் கருத்தங்கும் என்பத்துநான்குலக்ஷ யோனி பேதமாகிய இரு வினை என்றும் சுழிபொருந்திய ஜெனன சாகரத்தை கடக்கத் தெப்ப மாக உயிர்க்கெல்லாம் உயிராய் வீற்றிருக்கும் நம்கடவுளாகிய பரம சுடரே. இந்த புண்யக்ஷேத்திரத்தில் இந்தபுண்யவேளையில் உங்களிறு வரையும் நாங்கள் பூசனைசெய்யும்படி அநுமதி தந்தருளவேணும்.

இதி விஞ்ஞாபிதௌ தேவிசங்கரௌ கருணாந்விதௌ
ஸமாராதயிதும் தேவான் விஷ்வாதின் அவமன்யத

என்று இங்ஙனம் தேவர்களுடைய மொழிகளைக் கேட்டு இறக்கங் கொண்டு பார்வதியும் சிவபெருமானும் தங்களை பூசனை செய்ய அநு மதி கொடுத்தார்கள்.

ததோ தேவாமஹாநந்தயாம் ஸ்னாத்வா ஸாய் சிசுத்தய:
க்ருதத்ரிபுண்ட்ர ருத்ராக்ஷா: புஷ்பாண்யா ஹ்ருத்யஸத்வரா:
ததா புருஷ ஸூக்தைச்சவிவிதைருபஹாரகை:

எதஸ்மிந்நந்தரே யோகீநாரதோ வைணிகோத்தம:
நாராயணம் நமஸ்க்ருத்ய ப்ரம்மாணமபி தைவதம்
ஸம்மாண்ய ப்ராஹகம்பீரம் ப்ரச்ரபாவனதஸ்ததா

அந்த ஸமயத்தில் வீணையை வாசித்துக்கொண்டு பகவத்குணங்களையே எப்போதும் பாடிக்கொண்டு ஏழு உலகங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டு காலக்ஷேபம் செய்கிற நாரதமகர்ஷியானவர் அங்குவந்து கைகூழ வாரேமியானை திருமாலையும், கமலாஸனத்திலிருந்து உண்டாகிய பிரமதேவனையும் நமஸ்கரித்து வணக்கமாய் சொல்லத் தொடங்கினர்.

நாரத:

பகவந்நத்ய தேவேச: பார்வத்யா ஸஹசங்கர:
க்ஷீராப்தி ஸமுத்பூத மஹோக்ரோ ஹாகுலோப்ருசம்
அரண்யாக்ய நத்தீரே. மஹாகடகநாமகே
க்ஷேத்ரே தத்புருஷாபிக்ய லிங்கவர்யஸ்ய தக்ஷிணே
புன்னாக த்ருமமூலே ச கௌஸ ஸமேசயனே வச:
..............நித்ரா நிபரமானந்த:

திருப்பாற்கடலை கடைந்து தேவர்களுக்கு அமுதமூட்டிய திருமாலே கேளும். உலகங்களை எல்லாம் தீயினில் தூகபோலாகாமல் அக்கொடிய காலகூட விடத்தை அருந்தியதனால் அவ்விடத்தின் தாபத்தை ஸகிக்கமுடியாமல் மிகுதுன்பமடைந்து தபித்துப்போய் சிவபெருமான் திருக்கைலாயத்திற்கு போகமாட்டாமல் மத்தியிலே அரண்ய நதியின் கரையில் மஹாகடகமென்ற பெயருடைய காலகூடாசன க்ஷேத்திரத்தில் தத்புருஷன் என்று பெயர்பெற்ற லல்மீகேஸ்வர லிங்கத்தின் தென்பக்கத்தில் புன்னைமரங்கள் அடர்ந்த தோப்பில் புஷ்பமயமான படுக்கையில் பரவசமாய் படுத்துறங்குகின்றார்.

............பார்வதீச கணேச்வர:
பரிவார்ய மஹாதேவம் நித்ராஸக்தபுஜம் சிவம்
வீஜநத்யுப சாரேண தூஷ்ணீம் பூதா உபாஸதே

இங்ஙனம் பரவசமாக படுத்துறங்குகின்ற சிவபெருமானைக் கண்டு கலங்கி என்செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் "எப்போது உறக்கம் தெளிந்து எழுந்திருக்கப் போகின்றாரோ தெரியவில்லையே" என்று விசாரப்பட்டுக்கொண்டு உமாதேவியாரும் மற்றப்ரமதகணங்களும் சிவபெருமானை சூழ்ந்துக்கொண்டு விசிறியினால் மெள்ள வீசிக்கொண்டு

செய்ய இந்த புண்ய க்ஷேத்திரத்தில் இதேமாதிரி சுந்தரமான மூர்த்தியுடன் வீற்றிருப்பீருக். அவ்வாறு இங்கு வீற்றிருந்து இந்த புண்ய க்ஷேத்திரத்தில் இந்த புண்யநதியில் ஸ்நாநம் செய்து இந்தப்ரதோஷ வேளையில் தேவரீரை பூசனை செய்யுமவர்களுக்கு முக்தியைதந்துவென்னாகில் முழுகாவண்ணம் உலகத்தை காத்தருள்வீராக

விசேஷ தஸ்திதாவஸ்யா பூஜயேத்தஹிமோயுவாம்

ஸாயுஜ்ய மேவகச்சந்து நாத்ரகார்யா விசாரணு

மேலும் மற்ற புண்ய ஸ்தலங்களைவிட இந்த புண்ய க்ஷேத்திரத்தில் இந்த ப்ரதோஷ வேளையில் தேவரீரை பூசனை செய்யும் அவர்களுக்கு ஸாயுஜ்ய மென்கிற முக்தியை ஸந்தேகமில்லாமல் கொடுத்தருள்வீராக இது இந்த புண்ய க்ஷேத்திரத்திற்கு ஓர் மகிமை

ஸ்தல மேதத் த்வதீயன நாம்னாக்யாதம்பவேத்புவி

இந்த புண்ய க்ஷேத்திரமானது தேவரீருடைய காலகூடவிஷத்தை அமுது செய்ததினுல் உண்டாகிய காலகூடாசனனென்கிற திருநாமத்தாலாய காலகூடவிஷாசக்ஷேத்திரமென்று பெயருடன் உலகெங்கும் புகழ்பெறும்படி அனுக்ரகம் செய்தருள்வீராக.

இதிஸம்ப்ரார்திதேனதேவா லங்கீக்ருத்யதவோமிதி

ஸம்ஸ் ப்ருச்யதாத்ருசீ மூர்த்திம் தஸ்தது கருணும்புதி

என்று இவ்வாறு தேவர்களால் பிரார்திக்கப்பட்ட சிவபெருமானும் உமாதேவியாரும் அங்கே செய்கிறோம் என்று சொல்லி விட்டு மிக்க ஆநந்தத்துடன் எழுந்தருளி இருந்தார்கள்.

அததேவோபி தாம் தேவீமனுஞாப்யபதாப்தயே

பூயோவ் ருஷபமாருஹ்ய ஸகணேகிரீம் அங்வகாத்

பிறகு அச்சோலையின் அழகைக் கண்டு அதை விட்டு பிரியமாட்டாமல் தயங்கிநிற்கிற பார்வதியின் அனுமதியின் பேரில் மறுபடியும் தமது வாகனமாகிய வ்ருஷபத்தின்மீதிஏறிக்கொண்டு ப்ரமதகணங்கள்சூழவும் ரம்பை முதலிய தேவகன்யர்கள் ஆடவும் கந்தர்வர்கள் பாடவும் தேவர்ஷிகள் துதிசெய்யவும் தமது வாஸஸ்தலமாகிய கைலாயமலைக்கு புறப்பட்டுப்போனர்.

கைலாஸ மகமத் க்ஷிப்ர:ம் தேவா ப்ராபு ஸ்வகம்பதம்

தேவதைகள் எல்லாரும் தூர்வாஸமாமுனிவரின் சாபத்தால் இழந்து போன ஸ்வர்கராஜ்யத்தை சிவபெருமானருளினால் பெற்று முன்போல் தங்கள் தங்கள் ஸ்தானங்களுக்கு சென்றனர்.

இதிலோ முனய: க்ஷேத்ரமாஹாத்மயம் விஷயாயின
ப்ராதுர்பாலப்ரகாரச்ச கதிதோ போகமோக்ஷத:

என்று இவ்வாறு இக்கதையை சொல்லி முடித்துவிட்டு மாமுனிவர்களைப்பார்த்து சொல்லுகிறார் சூதமுனிவர்.

வாரீர் மாமுனிவர்காள் நீங்கள் கோரியபடி காலகூடாசன க்ஷேத்ர மகாத்மியத்தையும் அதின் உத்பத்தி ப்ரகாரத்யும் சொல்லினேன்.

திவ்ய க்ஷேத்ரமிதம் குப்தம் திவ்யாரண்யநதீச

இந்த க்ஷேத்திர மாகாத்மியம் ஒருவராலும் உணரலாகாது. இந்த அரண்ய நதியின் மாகாத்மியமும் ஒருவராலும்உணரலாகாது ஏனென்றால் இது காட்டு வழியில் ஒரு மூலையில் இருக்கிறது.

வல்மீகேச்வரலிங்கம் சலிங்கம் ராமப்ரதிஷ்டிதம்
மூர்த்திர்விஷாசனே சஸ்யத்ரயமேதத்விலோகினம்
நமாதுர்ஜடோ வாஸ: முக்திரேவநஸம்சய:

எல்லா புண்ய க்ஷேத்திரங்களைவிட இந்த புண்ய க்ஷேத்திரத்திற்கு விசேஷமுண்டு. அதாவது வால்மீகிமஹரிஷியால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு வல்மீகேச்வரலிங்கமும் ராமனாலே ப்ரதிஷ்டை செய்யப் பட்ட லிங்கமும் தேவர்களாலே ப்ரார்திக்கப்பட்டு அங்கு எழுந்தருளி இருக்கும் மூர்த்தியும் ஆக மூன்றுவிதமாக அங்கு சிவபெருமான் ஸன்னிதானம் செய்திருக்கிறார். ஆகையால் இந்த புண்யக்ஷேத்திரத்தை தர்சனம் செய்த மாத்திரத்திலேயே தீவினைகள் எல்லாம் போய் முக்தியை பெறலாம் என்பது நிச்சயம்.

இதிச்ருத்வேத மாக்யானம் முனயோவீதகல்மஷா
ஸந்தோஷம் பரமம் ப்ராப்ய ஸூதம் முனிமபூஜயன்

இவ்வாறு சூதமுனிவர் அருளிச்செய்த காலகூடவிஷாசன மாகாத்மியத்தை கேட்டு நைமிசாரண்ய மாமுனிவர்கள்மிக்கஸந்தோஷமடைந்து அந்த சூதமாமுனிவரை பூஜை செய்தனர்.

ஸ்காந்த புராணத்தில் சிவரகஸ்ய கண்டம் உத்தரபாகம்
காலகூடாசன க்ஷேத்தி மாகத்மியம்.
ஐந்தவாது அத்யாயம்.
முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

திருநெறித்தமிழ்வேதமாகிய

# தேவாரப்பதிகங்கள்.

திருச்சிற்றம்பலம்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன்கழல்போற்றி
ஆழிமிசைக்கன்மிதப்பிலணைந்தபிரானடிபோற்றி
வாழிதிருநாவலூர்வன்றொண்டர்பதம் போற்றி
ஊழிமலிதிருவாதவூரர்திருத்தாள் போற்றி

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

திருப்பிரமபுரம்—பண்—நட்டபாடை

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன் விடையேறியோர்தூவெண்மதிசூடி
காடுடையசுடலைப்பொடிபூசியென்னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே.

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே.

திருவண்ணாமலை பண் நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரும்
அண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே.

வெம்புந்தியகதிரோனொளிவிலகும்விரிசாரல்
அம்புந்திமூவெயிலெய்தவனண்ணாமலையதனைக்
கொம்புந்துவகுயிலாலுவகுளிர்காழியுண்ஞான
சம்பந்தனதமிழ்வல்லவடிபேணுதறவமே.

## திருவண்ணாமலை பண் தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பூவார்மலர்கொண் டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கள்
மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க் கருள்செய்தார்
தூமாமழைநின் றதிரவெருவித்தொறுவின்னிரையோடும்
ஆமாம்பிணைவந் தணையுஞ்சாரலண்ணாமலையாரே.

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே.

## கோயில் பண் குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே.

ஞாலத்துயர்காழி ஞானசம்பந்தன்
சீலத்தார்கொள்கைச்சிற்றம்பலமேய
சூலப்படையானைச்சொன்னதமிழ்மாலை
கோலத்தாற்பாடவல்லார்நல்லாரே.

## திருவாலவாய் பண் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் திருவாலவாயான்றிருநீறே.

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும் வல்லவர்நல்லவர்தாமே.

# அப்பர் சுவாமிகள் அருளியது

## திருவதிகைவீரட்டானம் பண் கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கூற்ருயினவாறுவிலக்ககிலீர்
  கொடுமைபலசெய்தனநானறியேன்
ஏற்ருயடிக்கேயிரவும்பகலும்
  பிரியாதுவணங்குவனெப்பொழுதும்
தோற்ருதென்வயிற்றினகம்படியே
  குடரோடுதொடக்கிமுடக்கியிட
ஆற்றேனடியேனதிகைக்கெடில
  வீரட்டானத்துறையம்மானே.

போர்த்தாயங்கோரானையினீருரிதோல்
  புறங்காடரங்காநடமாடவல்லாய்
ஆர்த்தானரக்கன்றனைமால்வரைக்கீ
  ழடர்த்திட்டருள் செய்தவதுகருதாய்
வேர்த்தும்புரண்டும்விழுந்தெழுந்தா
  லென்வேதனையானவிலக்கியிடாய்
ஆர்த்தார்புனல்சூழதிகைக்கெடில
  வீரட்டானத்துறையம்மானே.

## திருவேகம்பம் பண் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறுஞ்சித்தனை
அரவாடச்சடைதாழவங்கையினிலனலேந்தி
இரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே.

அடுத்தானையுரித்தானையருச்சுனற்குப்பாசுபதம்
கொடுத்தானைக்குலவரையேசிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப்புரமெரியச்சினமல்குகயிலாயம்
எடுத்தானைத்தடுத்தானையென்மனத்தேவைத்தேனே.

# தேவாரப்பதிகங்கள்

## திருஅங்கமாலை பண் சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

தலையேநீவணங்காய் தலை
மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்
தலையேநீவணங்காய்.

கண்காள்காண்மின்களோ கடல்
நஞ்சுண்டகண்டன்றன்னை
எண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக்
கண்காள்காண்மின்களோ.

இறுமாந்திருப்பன்கொலோ ஈசன்
பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங்
கிறுமாந்திருப்பன்கொலோ.

தேடிக்கண்டுகொண்டேன் திரு
மாலொடுநான்முகனும்
தேடித்தேடொணாத்தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன்.

# திருத்தாண்டகம்

## கோயில்

திருச்சிற்றம்பலம்.

அரியானையந்தணர்தஞ்சிந்தையானை யருமறையினகத்தானை யணுவையார்க்குந் தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்திகழொளியைத் தேவர்கடங்கோனைமற்றைக், கரியானைநான்முகனைக் கனலைக்காற்றைக் கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற, பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப் பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

அருந்துணையையடியார்தமல்லறீர்க்கு மருமருந்தையகன் ஞாலத்தகத்துட்டோன்றி, வருந்துணையுஞ்சுற்றமும்பற்றும்விட்டு வான்புலன்களகத்தடக்கிமடவாரோடும் பொருந்தணைமேல்வரும் பயனைப்போகமாற்றிப் பொதுநீக்கித்தனைநினையவல்லோர்க்கென் றும்பெருந்துணையைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல் லாம்பிறவாநாளே.

கற்றானைக் கங்கைவார்சடையான்றன்னைக் காவிரிசூழ் வலஞ் சுழியுங்கருதினானை, அற்றார்க்குமலர்ந்தார்க்குமருள்செய்வானையா ரும்புகுவானையறிந்தோமன்றே, மற்றாருந்தன்னொப்பாரில்லா தானை . வானவர்களெப்பொழுதும்வணங்கியேத்தப், பெற்றானைப் பெரும்பற்றப்புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே

## திருக்காளத்தி

மனத்தகத்தான்றலைமேலான் வாக்கினுள்ளான் வாயாரத்தன் னடியேபாடுந்தொண்டர், இனத்தகத்தானிமையவர்தஞ்சிரத்தின் மேலானேழண்டத்தப்பாலாணிற்செய்பொன்புனத்தகத்தானறுங் கொன்றைப்போதினுள்ளான் பொருப்பிடையானெருப்பிடை யான்காற்றினுள்ளான், கனத்தகத்தான்கயிலாயத்துச்சியுள்ளான் காளத்தியானவனென்கண்ணுளானே.

நாரணன்காணான்முகன்காணாதவேதன்காண்
ஞானப்பெருங்கடற்கோர்நாவாயன்ன
பூரணன்காண்புண்ணியன்காண்புராணன்றான்காண்
புரிசடைமேற்புனலேற்றபுனிதன்றான்காண்
சாரணன்காண்சந்திரன்காண்கதிரோன்றான்காண்
டன்மைக்காட்டானேகாண்டக்கோர்க்கெல்லாங்
காரணன்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே.

## திருப்பூவணம்.

வடிவேறுதிரிசூலந்தோன்றுந்தோன்றும் வளர்சடைமேலிள மதியந்தோன்றுந்தோன்றுங்கடியேறுகமழ்கொன்றைக்கண்ணி தோன்றுங்காதில்வெண்குழைதோடுகலந்துதோன்றும், இடியேறு களிற்றுரிவைப்போர்வைதோன்றும், எழிறிகழுந்திருமுடியுமிலங் கித்தோன்றும், பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும் பொ ழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே.

## திருவாரூர்.

நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சேநீவாநித்தலுமெம்பிரா னுடையகோயில்புக்குப், புலர்வதன்முன்னலகிட்டுமெழுக்குமிட் டுப்பூமாலைபுனைந்தேத்திப்புகழ்ந்துபாடித், தலையாரக்கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கராசயபோற்றிபோற்றியென்றும், அலைபுனல் சேர்செஞ்சடையெம்மாதியென்று மாரூராவென்றென்றேயலறா நில்லே.

## திருவாடுதுறை.

திருவே! என்செல்வமே! தேனே! வானோர்செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற்சோதீ! மிக்க, உருவே! என்னுறவே! என் னூனே! ஊனினுள்ளமே! உள்ளத்தினுள்ளேநின்ற, கருவே! என்கற்பகமே! கண்ணே கண்ணிற்கருமணியே! மணியாடுபாவாய்! காவாய், அருவாயவல்வினைநோயடையாவண்ணமாவடுதண்டுறை யுறையுமமரரேறே.

## திருவீழிமிழலை.

சமரமிகுசலந்தரன்போர்வேண்டினானைச் சக்கரத்தாற் பிளப் பித்தசதுரர்போலும், நமனையொருகாற்குறைத்தநாதர்போலுநாரா ணனையிடப்பாகத்தடைத்தார்போலும், குமரனையுமகனாகவுடை யார்போலுங் குளிர்வீழிமிழலையமர்குழகர்போலும், அமரர்கள்பி னமுதுணநஞ்சுண்டார்போலுமடியேனையாளுடையவடிகடாமே.

## திருப்புள்ளிருக்குவேளூர்.

பேராயிரம்பரவிவானோரேத்தும் பெம்மானைப்பிரிவிலாவடி யார்க்கென்றும், வாராதசெல்வம்வருவிப்பானைமந்திரமுந்தந்திரமு மருந்துமாகித், தீராநோய்தீர்த்தருளவல்லான்றன்னைத்திரிபுரங்க

டயெழுத்திண்சிலைகைக்கொண்ட போரானைப்புள்ளிருக்கு வேளூ ரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே.

## திருக்கன்றாப்பூர்.

எவரேனுந்தாமாகவிலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங்கண் டாலுள்கி, உவராதேயவரவரைக்கண்டபோதுகந்தடிமைத்திற நினைந்தங்குவந்துநோக்கி, இவர்தேவரவர்தேவரென்றுசொல்லி யிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக், கவராதேதொழு மடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே

## திருச்சிவபுரம்.

வானவன்காண்வானவர்க்குமேலானான்காண் வடமொழியுந் தென்றமிழுமறைகணான்கும், ஆனவன்காணானைந்துமாடினான்கா ணையன்காண்கையிலனலேந்திபாடும். கானவன்காண்கானவனுக் கருள்செய்தான்காண் கருதுவாரிதயத்துக்கமலத்தூறுந், தேன வன்காண்சென்றடையாச்செல்வன்றான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ்செல்வன்றானே.

### பொது.

அப்பனீயம்மைநீயையனுநீ யன்புடையமாமனுமாமியுநீ, ஒப் புடையமாதருமொண்பொருளுநீ யொருகுலமுஞ்சுற்றமுமோரூ ருநீதுய்ப்பனவுமுய்ப்பவுனநீதோற்றுவாய்நீ துணையாயென்னெஞ் சந்துறப்பிப்பாய்நீ, இப்பொன்னீயிம்மணிநீ யிம்முத்துநீ யிறை வனீயேறூர்ந்தசெல்வனீயே.

திருநாமமஞ்செழுத்துஞ்செப்பாராகிற் றீவண்ணர்திறமொரு காற்பேசாராகில், ஒருகாலுந்திருக்கோயில்சூழாராகி லுண்பதன் முன்மலர்பறித்திட்டுண்ணாராகில். அருநோய்கள்கெடவெண்ணீ றணியாராகிலளியற்றார்பிறந்தவாறேதோவென்னில், பெருநோய் கண்மிகநலியப்பெயர்த்துஞ்செத்துப் பிறப்பதற்கேதொழிலாகி யிறக்கின்றாரே.

சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்து தரணியொடுவானாளத்தருவ ரேனும், மங்குவாரவர்செல்வமதிப்போமல்லோமாதேவர்க்கேகாந் தரல்லாராகில், அங்கமெலாங்குறைந்தழுகுதொழுநோயராயா வுரித்துத்தின்றுழலும்புலையரேனும்,கங்கைவார்சடைக்கரந்தார்க் கன்பராகிலவர்கண்டீர்நாம்வணங்குங்கடவுளாரே

## திருப்புகலூர்.

எண்ணுகேனென்சொல்லியெண்ணுகேனோ வெம்பெருமான் திருவடியேயெண்ணினல்லால், கண்ணிலேன்மற்றோர்களைகணில் லேன கழலடியேகைதொழுதுகாணினல்லால், ஒண்ணுளேயொன் பதுவாசல்வைத்தாயொக்கவடைக்கும்போதுணரமாட்டேன்புண் ணியாவுன்னடிக்கேபோதுகின்றேன் பூம்புகலூர்மேவியபுண்ணி யனே.

ஒருவனையுமல்லாதுணராதுள்ள முணர்ச்சித்தடமோற்றத்துள் ளேநின்று, இருவரையுமூவரையுமென்மேலேவியில்லாததறவறுத் தாய்க்கில்லேனலக் கருவரைசூழ்கானலிலங்கைவேந்தன் கடுந் தேர்மீதோடாமைக்காலாற்செற்ற பொருவரையாயுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர்மேவியபுண்ணியனே.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

## திருவெண்ணெய்நல்லூர் பண் இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா  
எத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை  
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையுள்  
அத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே

காருர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையால்  
பாருர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச்  
சீருர்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையுள்  
ஆரூரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே.

## திருப்பாண்டிக்கொடுமுடி. பண் பழம்பஞ்சரம்.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக்கின்றிநின்றிருப்பாதமேமனம்பாவித்தேன்  
பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்  
கற்றவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி  
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே.

கோணியபிறைசூடியைக்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
பேணியபெருமானைப்பிஞ்ஞகப்பித்தனைப்பிறப்பிலியைப்
பாணுலாவரிவண்டறைகொன்றைத்தாரனைப்படப்பாம்பரை
நாணனைத்தொண்டனூரன்சொல்லிவைசொல்லுவார்க்கில்லைத் து
[ன்பமே

## திருத்தொண்டத்தொகை பண் கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்தம்மடியார்க்குமடியேன்
திருநீலகண்டத்துக்குயவனார்க்கடியேன்
இல்லையேயென்னாதவியற்பகைக்குமடியே
னிளையான்றன்குடிமாறனடியார்க்குமடியேன்
வெல்லுமாமிகவல்லமெய்ப்பொருளுக்கடியேன்
விரிபொழில்சூழ்குன்றையார்விறன்மிண்டற்கடியேன்
அல்லிமென்முல்லையந்தாரமர்நீதிக்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே.

பத்தராய்ப்பணிவார்களெல்லார்க்குமடியேன்
பரமனையேபாடுவாரடியார்க்குமடியேன்
சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்க்குமடியேன்
திருவாரூர்ப்பிறந்தார்களெல்லார்க்குமடியேன்
முப்போதுந்திருமேனிதீண்டுவார்க்கடியேன்
முழுநீறுபூசியமுனிவர்க்குமடியேன்
அப்பாலுமடிச்சார்ந்தவடியார்க்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே.

## திருமழபாடி பண் நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேன்மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுண்மாணிக்கமே
அன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே

ஏரார்முப்புரமுமெரியச்சிலைதொட்டவனை
வாரார்கொங்கையுடன்மழபாடியுண்மேயவனைச்
சீரார்நாவலர்கோனாரூரனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே.

## மாணிக்கவாசக சுவாமிகள் அருளியது

திருவாசகச் சிறப்பு

தொல்லையிரும்பிறவிச்சூழுந்தளைநீக்கி
அல்லலறுத்தானந்தமாக்கியதே — எல்லை
மருவாநெறியளிக்கும்வாதவூரெங்கோன்
திருவாசகமென்னுந்தேன்.

### திருத்தெள்ளேணம்.

திருச்சிற்றம்பலம்.

திருமாலும்பன்றியாய்ச்சென்றுணராத்திருவடியை
யுருநாமமறியவோரந்தணனாயாண்டுகொண்டா
னொருநாமமோருருவமொன்றுமில்லாற்காயிரந்
திருநாமம்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

வான்கெட்டுமாருதமாய்ந்தழனீர்மண்கெடினுந்
தான்கெட்டலின்றிச்சலிப்பறியாத்தன்மையனுக்
கூன்கெட்டுயிர்கெட்டுணர்வுகெட்டென்னுள்ளமும்போய்
நான்கெட்டவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

பூசுவதும்வெண்ணீறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதுந்திருவாயான்மறைபோலுங்காணேடீ
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ.

சலமுடையசலந்தரன்றனுடறடிந்தநல்லாழி
நலமுடையநாரணற்கன்றருளியவாறென்னேடீ
நலமுடையநாரணன்றன்னயனமிடந்தரனடிக்கீழ்
அலராக்கிடவாழியருளினன்காண்சாழலோ.

## திருமூலநாயனாருளிச்செய்த
# திருமந்திரம்

திருச்சிற்றம்பலம்.

சிவனோடொக்குந்தெய்வந்தேடினுமில்லை
அவனோடொப்பாரிங்கியாவருமில்லை
புவனங்கடந்தன்றுபொன்னொளிமின்னுந்
தவளச்சடைமுடித்தாமரையானே.

அன்புஞ்சிவமுமிரண்டென்பரறிவிலார்
அன்பேசிவமாவதாருமறிகிலார்
அன்பேசிவமாவதாருமறிந்தபின்
அன்பேசிவமாயமர்ந்திருப்பாரே.

முன்னவனார்கோயில்பூசைகண்முட்டிடின்
மன்னர்க்குத்தீங்குளவாரிவளங்குன்றும்
கன்னங்களவுமிகுத்திடுங்காசினி
யென்னருநந்தியெடுத்துரைத்தானே.

ஈசனடியாரிதயங்கலங்கிடத்
தேசமுநாடுஞ்சிறப்புமழிந்திடும்
வாசவன்பீடமுமாமன்னர்பீடமு
நாசமதாகுமேநந்தியாணையே.

அரகரவென்னவரியதொன்றில்லை
அரகரவென்னவறிகிலர்மாந்தர்
அரகரவென்னவமரருமாவர்
அரகரவென்னவறும்பிறப்பன்றே.

கங்காளன்பூசுங்கவசத்திருநீற்றை
மங்காமற்பூசிமகிழ்வரேயாமாகில்
தங்காவினைகளுஞ்சாருஞ்சிவகதி
சிங்காரமானதிருவடிசேர்வரே.

புண்ணியஞ்செய்வார்க்குப்பூவுண்டுநீருண்டு
அண்ணலதுகண்டருள்செயாநிற்கும்
எண்ணிலிபாவிகளெம்மிறையீசனை
நண்ணறியாமனழுவுகின்றாரே.

சிவசிவவென்கிலர் தீவினையாளர்
சிவசிவவென்றிடத் தீவினைமாளும்
சிவசிவவென்றிடத் தேவருமாவர்
சிவசிவவென்னச் சிவகதிதானே.

வித்தகமாகியவேடத்தருண்டலூண்
அத்தனையன் மாலருந்தியவண்ணமாம்
சித்தந்தெளிந்தவர் செடம்பருகிடின்
முத்தியாமென்றுநம்மூலன்மொழிந்ததே.

பெறுதற்கரியபிறவியைப்பெற்றும்
பெறுதற்கரியபிரானடிபேணார்
பெறுதற்கரியபிராணிகளெல்லாம்
பெறுதற்கரியதோர்பேறிழந்தாரே.

பொல்லாப்புலாலை நுகரும்புலையரை
யெல்லாருங்காணவியமன்றன் தூதுவர்
செல்லாகப்பற்றியதீவாய்நரகத்தின்
மல்லாக்கத்தள்ளிமறித்துவைப்பாரே.

அருணகிரிநாத சுவாமிகள் அருளியது.

# திருப்புகழ்.

தானனத தானதன தானதன தானதன
தானதன தானதன—தந்ததான

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம — என்றுபூதி
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பதமே துணைய — தென்றுநாளும்
ஏறுமயில் வாகனகு காசரவ ணாயெனது
ஈசனென மானமுற — என்றுமோதும்
ஏழைகள் வியாகுலமி தேதெனவி னாவிலுனை
யேவர்புகழ் வார்மறையும் — என்சொலாதோ

நீறுபடு மாழைபொரு மேனியவ வேலஅணி
நீலமயில் வாகஉமை தந்தவேளே
நீசர் கடமோடெனது தீவினைகெலா முடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா
சீறிவரு மாறவுண ணுவியுணு மானேமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ்
சேருமழ கார்பழனி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே

## கதிர்காமம்.

தனதன்ன தான தனதன்ன தான
தனதன்ன தானத்——தனதான

திருமகளு லாவு மிருபுயமுராரி
திருமருக நாமப் பெருமாள்காண்
செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதரு குமாரப் பெருமாள்காண்
மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு
மரகதமயூரப் பெருமாள்காண்
மணிதரளம் வீசி யணியருவி சூழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்
அருவரைகள் நீறு பட அசுரர்மாள
அமர்பொருதவீரப் பெருமாள்காண்
அரவுபிறை வாரி விரவுசடை வேணி
அமலர் குரு நாதப் பெருமாள்காண்
இருவினையி லாத தருவினைவி டாத
இமையவர்கு லேசப் பெருமாள்காண்
இலகுசிலை வேடர் கொடியினதி பார
இருதனவி நோதப் பெருமாளே.



# RAMA-DASAR.

# ராம தாஸர்.

[ஒரு தமிழ் நாடகம்]



ராவ் பஹதூர்

**பம்மல் ஸம்பந்தம் முதலியார்**

அவர்கள், பி. ஏ. பி. எல்.

முன்னுரையுடன்

---

திருநெல்வேலி லோக்கல்பண்டு ஆடிட்,

**திரு—கே. எஸ். சங்கரய்யரால்**

எழுதப்பட்டது

---

விலை: அணா எட்டு. இரண்டாம் பதிப்பு.



டெக்ஸ்டு புக் கம்மிட்டியாரால் அங்கீகரிக்கப்பட்டது.

சென்னை கஜட்டு 12—4—32,

I. R. பக்கம் 245 பார்க்க.)

[illegible] பாளையங்கோட்டை—1933.

# SELECT OPINIONS

THE HINDU OF 20—12—31

The puranic story of saint Ramadas has been dramatised by the author in elegant Tamil in three acts. The story is a familiar one and the most pathetic portion of the drama, the soliloquy of Ramadas in prison and his prayer to Sri Rama to spare him further suffering and his despairing decision to put an end to his miserable life, is very inspiringly rendered. In his "Foreword" to the book Rao Bahadur P. Sambanda Mudaliar B. A. B. L, after referring to certain original touches in the drama, congratulates the author on the success of his maiden attempt.

36 A—Mount Road, Madras,
21st December 1931.

I have read through your "Ramadasar" in Tamil. I have great pleasure in telling you that I enjoyed the reading very well. The language is simple and direct.

I wish the book every success.

W. Duraiswami
(of Messrs Longmans Green & Co. Ltd).

Trichinopoly.
16th December 1931.

It is written very well and I think easier for adaptation than other books.

Rao Sahib R. G. Subramani
Supdt. Publicity and catering,
S. I. Ry.

# முகவுரை.

ஸ்ரீ ராம பக்தர்களுள் சிரேஷ்டரான ராமதாஸரின் சரிதத்தை
நாடக ரூபமாய் ஆந்த்ரபாஷையில் எழுதியுள்ள என் நண்பர்
கனம் ராவ் ஸாஹிப் D. வேங்கட்டரமணய்ய பந்துலுகாருவின்
அனுமதியின்பேரில்
தமிழ்நாட்டிற்கு ஓர் முக்ய ஆசிரியரும் நடிகருமான
கனம் ராவ் பஹதூர் பம்மல் ஸம்பந்தம் முதலியார் அவர்கள்
முன்னுரையின் தைர்யத்தில் அந்த திவ்ய சரித்ரத்தை
தமிழ் பாஷையில் நாடகமாய் வெளியிடத்துணிந்தேன்.

ஸ்ரீ ராம கதா ஸாரத்தில் இதன் குற்றங்குறைகளைப் பாராட்டாது குணங்களையே க்ரஹித்து அங்கிகரிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

கல்லிடைக்குறிச்சி,
திருநெல்வேலி ஜில்லா.
7—12—31.

கே. எஸ். சங்கரன்.

ஸுப்பா நாயுடு
ரெங்கைய்யஸெட்டி
க்ருஷ்ணா ராஜு
வேங்கட சாஸ்திரி
} பத்ராசலம். பௌர ஜனங்கள்.

ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரிகள்
ராம சாஸ்த்ரிகள்
அப்பய்ய தீக்ஷிதர்
குண்டப்ப சாஸ்த்ரி
} ஸ்ரீராம நவமி உத்ஸவத்தில் போஜனத்துக்கு வந்த ப்ராம்ஹணர்கள்.

(மற்றும்)-ப்ராம்ஹணர்கள் பஜனைகோஷ்டி, தாஸரி, மஹமதியர், பத்ராசலம் கோவில் தர்மகர்த்தா, வேலையாள், டபேதார், ஸிரஸ்ததார், ஸேவகன், ஸிப்பாய்கள், ப்ரபுக்கள், மந்த்ரிகள், அர்ச்சகர், பௌரவர்கள், ப்ராம்ஹணப் பையன்கள் முதலியோர்.

கதை நிகழுமிடம்:—பத்ராசலம்.
நேலகொண்டபல்லி.
கோல்கொண்டா.

## அங்கம்—I. காக்ஷி—1.

---

## பத்ராசலம் போகும் ரஸ்தா,

ப்ராம்ஹணர்கள் பஜனை கோஷ்டி—

(பாட்டு—பாடிக்கொண்டு ப்ரவேசம்).

*மோர, காலநயன, கமலவதன,*
*கௌசல்யா, ராம்.*

*பதித பாவனா ராம்*
*ஜானகி ஜீவனா ராம்*
*ஜானகி ஜீவனா தாரக நாமனா ராம்* (ஜோர)

*ஸங்கீத ஜனனி ஜானகி நாயகனே ராம்*
*ராமபாத ஸப்ரேம ப்ரேமாம்ருத சேதாம்*
*பதித பாவனா ராம் ஜானகி ஜீவனா ராம்.* (ஜோர)

கோபன்னா ப்ரவேசம்.

கோ:—*மித்ரர்களே! நீங்கள் பயணம் எந்த ஸ்தலத்தை உத்தேசித்தோ?*

ப்ராம்:—*ஸ்ரீபத்ரகிரி ஸ்ரீராம உத்ஸவத்திற்கும் போய்க்கொண் டிருக்கிறோம்.*

கோ:—*ஸந்தோஷம். நானும் அதே உத்தேசத்துடன் தானிருக்கிறேன். போகலாம் வாருங்கள்.*

ப்ராம்:—*கோபன்னா ஸ்வாமி, இப்படியே புறப்பட்டு வருகிறீரா என்ன?*

கோ:—*ஏன்! இப்படியே வர ஆக்ஷேபமென் ஸ்வாமி!*

ப்ராம்:—*க்ருஹத்திற்குச்சென்று ப்ரயாணத்திற்கு வேண்டிய ஸாமக்ரியைகள் எல்லாம் சேகரித்துக்கொண்டு தாயாருடைய அனுமதிபெற்று வாருங்கள். நாங்கள் மெல்லப் போய்க்கொண் டிருக்கிறோம்.*

கோ:—ஸ்வாமி—நாம் செல்வது ஸ்ரீராமருடைய பாதஸேவைக் கல்லவா? இதற்கு ஸாமக்ரியைகள் எதற்கு! ஒருவருடைய ஆக்ஞையெதற்கு?

ப்ராம்:—ஸரி-ஆனால் அப்படியே செய்யலாம்: வாருங்கள்.

(எல்லோரும் பஜனை செய்துகொண்டு போகிறார்கள்).

(வேறு பக்கத்திலிருந்து ஒரு தாஸரி பாடிக்கொண்டு வருகிறான். பாடி முடிந்ததும் பெருவயிற்றுப் பிள்ளையார்போலுள்ள ஒரு மஹமதீயர் ப்ரவேசம்).

மஹ:—அரே-கோயிந்தா, இந்த மலேக்கிட்டே கோயிந்தா கோயிந்தா இன்னு கூச்சல் செய்ரயே--உனக்கு பைஸா யார் கொடுக்கறாங்கபாய்?

தா:—ஸலாம் ஸாகேபு: தௌலத்மியா?

மஹ:—ஆலே கும் ஸலாம்.

தா:—ஸாஹேபு, பாத்து ரொம்ப நாளாச்சுதுங்களே, ஸவுக்யமாயிருக்கிறீங்களா?

மஹ:—அல்லா தயவு இருக்குது—நல்லா இக்ரோம்.

தா:—எந்த ஊருக்குப் போயிருந்தீங்க? என்ன ஸங்கதிங்க?

மஹ;—அரே பாயி, இப்போ நம்பள்கி கோல்கொண்டாலே நல்ல வேலையிக்ரான்—மூணுவாட்டி கானா, ரெண்டு வாட்டி ஸோனா, நடுவிலே நடுவிலே ஷர்பத் பீனா, காதுக்கு நல்ல கானா, ஜனானா, எல்லாம் நம்பள்கி ஸரீக்கு இருக்ரான். அதான், நம்பள் இப்டி இக்ரோம்.

தா:—ஸாஹேபு, இப்போ தொப்பை ரொம்ப பெருகிப்போச்சுதுங்களே.

மஹ:—அரே அல்லா சும்மா இரு பாய், நம்பள்கி பாட்கி ரொம்ப ஷோக்கி, அப்போ நம்பள் இதை தப்லா செய்றாங்க. (தன் வயிற்றைத்தடவிக் காண்பிக்கிறான்). ஸரி--அது இருக்கட்டும்பாய்-நம்ப ஊர்லே என்ன விசேஷம்? இந்த மலேமேலே நீங்கள் இப்போ என்ன ஸங்கதிக்கு வந்திருக்கிறீங்கோ?

தா:—தௌலத்மியா-இந்த மலை மஹாத்மியம் ரொம்ப ரொம்ப இருக்குது. இந்த மலைமேலேதான் ராமன்ன, லக்ஷ்மன்ன, ஸீதம்மா-மூணு விக்ரஹங்கள் கிடைச்சிருக்குது. வருஷாவருஷம் இந்த மலைமேலே ராமஸ்வாமிக்கு என்ன ஸம்ப்ரமம்--என்ன கோஷ்டி, இன்னைக்கு ஸ்ரீராம நவமி ஜாத்ரை, ஜனங்கள் ரொம்ப கும்பல் போறாங்க: நானும் அங்கேதான் போயிக்கினு இருக்கிறேன்.

மஹ:—அப்பா! அச்சா. ஆனால் பிட்டாய்துகானம் இக்ரான் அங்கே? நம்பள் போய்வர்ரான்-நிம்பள் போய்வர்ராங்கோ.

(போகிறார், தாஸியும் பாடிக்கொண்டு போகிறான்).

## அங்கம்--I. காக்ஷி--2.

(பத்ராசலம் கோவில் வாசல்முன்).

(கபீர் பாடிக்கொண்டு ப்ரவேசம். பாடி முடியும் ஸமயம் தர்மகர்த்தா வந்து தடுக்கிறார்).

தர்:—ஐயா பக்கிரி ஸாஹேபு, நீர் இங்கே வரக்கூடாது-எங்கள் ஸ்வாமி பாட்டு பாடக்கூடாது.

கபீ:—ஸ்வாமி. ஸ்ரீராமநாமகீர்த்தனம் தங்கள் செவிக்கு அத்தனை கடினமா?

தர்:—ஆம்! உம்முடைய வாயிலிருந்து வரும் ராமகீர்த்தனம் என் காதுக்கு கடினந்தான்.

கபீ:—ஏனோ!

தர்:—நீர் முஹம்மதியராதலால்.

கபீ:—ஆனால் முஹம்மதியருக்கு கடவுள் இல்லையா!

தர்:—இருக்கும். உம்முடைய கடவுள் உமக்கு--எங்கள் கடவுள் எங்களுக்கு.

கபீ:—ஸ்வாமி பகவான் எத்தனை பேருண்டு?

தர்:—அந்த அதிக ப்ரஸங்கம் வேண்டாம். உமது குலத்தவர் எங்கள் பகவான் பக்கலில் வரக்கூடாது.

கபீ:—ஸ்வாமி தங்கள் பகவான் எந்த குலத்தவர் சொல்லமுடியுமோ?

தர்:—இது ரொம்பவும் அதிகமான அதிக ப்ரஸங்கம். நீர் வரக்கூடாது. போகவேண்டுமென்றால்-

கபீ:—ஸ்வாமி, நான் யார், தாங்கள் யார் தெரியுமா?

தர்:—நன்றாய்த் தெரியும். நீர் பக்கிரி ஸாஹேபு-நான் கோவில் தர்ம கர்த்தாவென்று. இன்னும் அதிகமாய்ப் பேசினால் இங்கிருந்து வெளியாக்கும்படி செய்வேன்.

கபீ:—(மந்தஹாஸத்துடன்) அந்த ஸ்ரீராமசந்த்ரமூர்த்தி வரது செய்தபோதிலும் பரமஸந்தோஷமே (இன்னும் பாடுகிறார்).

தர்:—என்னய்யா, நான் சொல்வது என்ன, உமக்குப் பரிஹாஸமாயிருக்கிறதா? இனி தண்டப்ரயோகம் செய்தாலன்றி போக மாட்டீர் போலும். ஓய் தாஸரி-

(கோபன்னா ப்ரவேசம்).

கோ:—ஐயா, இவர் ஸத்புருஷராகக் காணப்படுகிறார். அதிரப் படவேண்டாம். நானிருக்கிறேன் இங்கே. நீங்கள் கொஞ்சம் தயவுசெய்து உத்ஸவ கார்யங்களைக் கவனிக்கச் செல்லுங்கள்.

தர்:—கோபன்னகாரு, இந்த துருஷ்கர்களுக்கு மாத்ரம் கொஞ்சமும் இடம் கொடுக்கக்கூடாது. ஜாக்ரதை. (போகிறார்).

(கபீர் கண்கள் மூடினவண்ணம் பாடுகிறார். கோபன்னா அவர் பக்தியில் கட்டுப்பட்டவராய் அவருக்குப் பாத நமஸ்காரம் செய்கிறார். கபீர் அவரை உடனே தூக்கி யெழுப்புகிறார்).

கபீ:—மஹாராஜ்-ராம் ப்ராம்ஹணர். நானோ துருஷ்கன். தாங்கள் எனக்கு நமஸ்காரம் செய்வது யுக்தமல்ல.

கோ:—ஹே ஜகத்-லோகத்திலுள்ள ஜீவாத்மாக்களெல்லாம் பேதாஹிதமான சைதன்ய ஸ்வரூபமென்னும் வாக்கு தங்களுக்குத் தெரியாதா? பேதமுள்ளது இந்த நசிக்கும் தேஹமென்னும் பேருள்ள கூடுதானேயல்லவா-என் நமஸ்காரம் தங்கள் அந்தரங்கத்தில் வஸிக்கும் பகவத் அர்ப்பிதமே.

கபீ:—ஐயா. என் ஹ்ருதயத்தில் பகவான் இருப்பது எங்ஙனம்?

கோ:—மஹாத்மா. இந்த வாக்யம் பகவானே சொல்லியிருக்கிறார்-"மனுஷ்யர்களை நான் ஸ்ருஷ்டித்திருக்கிறேன். அவர்களில் எனக்கு ப்ரியர் அப்ரியர் என்பது கிடையாது. பக்தியுடன் என்னை பஜிப்பவர்கள் என்னில் இருக்கிறார்கள்-நானும் அவர்களில் இருக்கிறேன்" என்று-இந்த மஹத் வாக்யம் வ்யர்த்தமாகுமா?

கபீ:—ஐயா, உமது வார்த்தைகேட்டு ஆனந்தமாயது. சில விஷயங்களைக் குறித்து உம்மைக் கேட்கலாமா?

கோ:—ஸத்புருஷா, தாம் மஹான் என்று நான் நன்றாய் அறிகிறேன். ஆகலால் தாம் கேட்கும் ப்ரச்னத்திற்கு எனக்குத் தெரிந்தவரை உத்தரம் சொல்ல ஸர்வ ஸம்மதித்தனாயிருக்கிறேன்.

கபீ:—பகவான் ஒரே ஒருவராய் அகோசரனாய் நிராகாரனாய்இருக்க விக்ரஹங்களை நிர்மாணம்செய்து அவைகளுக்கு நாமங்கள் சூட்டி அவைகளை தைவமென்று பூஜிப்பது முறையா?

கோ:—மஹா புருஷா, அது அப்படியல்ல. பேரெத்தனை சூட்டினாலும் பரமாத்மா ஒருவரே. அவர் ஸர்வ ஸ்வரூபி. விச்வமெல்லாம் அவரின் ரூபமே. அவரே விச்வமும். அவரில்லாத வஸ்துவேயில்லை. ஆகலால் பக்தர்கள் தங்கள் தங்கள் இஷ்டப்ரகாரம் ஸாதனமாய் எந்த வஸ்துவையும் பூஜிக்கலாமல்லவா?

கபீ:—நல்லவாக்கு. இந்த மண்டபத்தில் இத்தனை ஜனங்கள் வந்திருக்கிறார்களே—இவர்களில் ப்ராம்ஹணர்கள் யார்—சூத்ரர்கள் யார்?

கோ:—புருஷபுங்கவா இந்த ப்ரச்னத்துக்கு விடை ஸம்சய மின்றி சொல்லக்கூடும். பரமாத்மா ஸ்ரீ ராமச்சந்த்ரனை பஜிக்கும் பக்தர்களே ப்ராம்ஹணர்களாவார்கள். பக்திசூன்யர்களே சூத்ரர்கள்.

கபீ:—உத்தம வாக்யம். இன்னொரு விஷயம் மாத்ரம் உம்மைக் கேட்க விரும்புகிறேன். மோக்ஷத்தை அபேக்ஷிக்கும் மனுஷ்ய னுக்குப் பரமஸுலபமான மார்க்கம் எது?

கோ:—பண்டிதோத்தமா, இந்த ப்ரச்னத்திற்கு ஸரியான உத்தரம் சொல்ல எனக்கு கொஞ்சம் கூசுகின்றது. யக்ஞஹோம ஜப தப அனுஷ்டானாதி மார்க்கங்கள் எத்தனையோ உண்டென்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். அவைகளிலெல்லாம் மிகவும் ஸுலபமான மார்க்கம் எது என்று சொல்ல எனக்கு சக்தியில்லை. தாமே இந்த ஸம்சயம் தீர்த்து எனக்கு உப தேச கர்த்தாவாயிருந்து என்னை க்ருதார்த்தனாகச் செய்ய வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

கபீ:—குழந்தாய், நான் அவ்வளவு தெரிந்தவனல்ல, ஆயினும் உன் னைப்போன்ற பாகவதச்ரேஷ்டர்கள் உபதேசபலம்கொண்டு சொல்லுகிறேன். கேள்-

"பூபூதாம் ஜபயக்ஞங்கள் செய்யினும் முக்தியில்லை"
"மற்றும் வ்ருத நிஷ்டைகளாலும் முக்தியில்லை"
"மூழ்கி மூழ்கி தீர்த்தாடனஞ்செய்யினும் முக்தியில்லை"
"பக்தியால் ஸ்ரீ ராமனைப் பஜித்தாலேயே முக்தியுண்டாம்-

முக்தியுண்டாம்-முக்தியுண்டாம்"

குழந்தாய் இப்பொழுது உனக்கு அந்த ஸ்ரீராம மந்த்ரம் உப தேசிக்கிறேன். (கோபண்ணாவின் காதில் மந்த்ரோபதேசம் செய்கிறார்).

கோ:—ஆஹா-என்ன இந்த மந்த்ரோபதேச ப்ரபாவம். என்சரீர மெல்லாம் திவ்ய அம்ருதவர்ஷம் ஆனதொப்ப புளகாங்கித மாய் பரவசமாய் குணங்கள் எல்லாம் மக்னப்பட்டு மஹானந்த மானது-தன்யனானேன்! தன்யனானேன்! தேவா; இந்த திவ்ய

மந்த்ரம் எனக்குபதேசித்து எனக்கு குருவுமானீர். இனி என்னை ஆசிர்வதிக்க ப்ரார்த்திக்கிறேன். (காலில் விழுந்து நமஸ்கரிக்கிறார்).

(தர்மகர்த்தாவும் வெங்கடேசன் நரஸிம்ஹன் என்ற இரண்டு ப்ராம்ஹணர்களும் ப்ரவேசம்).

தர்:—(ஆச்சர்யத்துடன்) அடடா-இதென்ன விபரீதகார்யம்: ப்ராம்ஹணன் ம்லேச்சனின் காலில் விழுவதா? கோபன்னகாரு உம்முடைய புத்தியெல்லாம் எங்கே போயிற்றப்பா-

வே:—கோபன்னகாரு பக்தியெல்லாம் முற்றி பைத்யம் ஆனது போலும். கோபன்னகாரு, தாமே இப்பேர்ப்பட்ட கார்யம் செய்தால் நம்முடைய ப்ராம்ஹணத்வம் எங்கே நிற்கும்? நம் குலத்தாருக்கே இதனால் கௌரவஹானி யேற்பட்டு விட்டதே.

நர:—கௌரவம் இருக்கட்டுமப்பா. ப்ரஸ்துத விஷயத்தில் அதுமாத்ர மில்லையே, பரம பவித்ரமான நமது ஸ்ரீராமர் ஸந்நிதிக்கு இந்த துருஷ்கன் வந்ததினால் அசுத்தமேற்பட்டுவிட்டதே. இனி ஸம்ப்ரோக்ஷணம் செய்தாலன்றி வேறு கார்யம் ஆகாதே. ஐயா தர்மகர்த்தா, முதலில் இந்த துருஷ்கனை, இல்லாத போனால் அவனுடன் சேர்ந்த இந்த கோபன்னகாருவையும் சேர்த்து வெளியாக்கவேண்டும். இது என்ன அன்யாயம்!

கோ:—(அப்ரகாசமாய்) என்ன இவர்களது அக்ஞானம்: (ப்ரகாசமாய்) ஸஹோதரர்களே க்ஷமிக்கவேண்டும். இவர் ஸாமான்யரல்லர், மஹா பக்தர். அவர் மஹிமை தெரியாமல் வீண் வார்த்தை ஆடவேண்டாம்.

தர்:—ஸரி ஸரி, அவர் மஹிமை உமக்கே தெரிந்தால் போதும் எங்களுக்கு ஒன்றும் தெரியவேண்டாம், வேண்டுமானால் நீரும் அவர் மதத்தில் சேர்ந்துகொள்ளும். தான் கெட்ட குரங்கு வனத்தையெல்லாம் கெடுத்ததாம்.

கபீ:—ப்ராம்ஹணோத்தமர்களே, என்னைக்கொஞ்சம் மன்னியுங்கள், நான் "ம்லேச்சன்" நீங்கள் "ப்ராம்ஹணர்கள்" என்று சொன்னீர்களல்லவா? இதில் "நான்" "நீங்கள்" என்னும் பதங்களை எதற்கு அன்வயிக்க உத்தேசித்தீர்களோ சொல்லமுடியுமா? சரீரத்திற்கா? சரீரம் நசித்துப் போகக்கூடியதல்லவா! அன்றேல் ஜீவனுக்கோ? ஜீவனுக்கு நாமபேதம் எதுண்டு! எல்லா ஜீவனும் பகவத் அம்சமல்லவா? அப்படியிருக்க நீங்கள் சொல்லும் வார்த்தைகள் அர்த்தமில்லாதவைகள் ஆகின்றனவே; உங்களிலும் என்னிலும் மற்றெல்லோரிலும் இருக்கும் அந்த ஜகதீச்வரர் ஒருவர் தவிர வேறே ஒன்றும் கிடையாதல்லவா-இதெல்லாம் அக்ஞானமேயாம். ஜாதிமத பேதமும், ஸ்த்ரீ புருஷத்வமும் பாமர ஜனங்கள் பாஷிக்கத் தகுந்த வார்த்தைகளேயல்லாது தம்போன்ற பெரியோர்கள் சொல்லக்கூடியதா? பக்தனுடைய த்ருஷ்டிக்கு ப்ரபஞ்சமெல்லாம் ஸ்ரீராம மயமில்லாது, எதுவும் காணப்படாதல்லவா? நீங்கள் இன்னும் அந்த ஸர்வேச்வரனின் க்ருபைக்குப் பாத்ரர்களாகவில்லையே யென்றுமட்டும் நான் பரிதாபப்பட வேண்டியிருக்கிறது. மற்றும் ஒருமுறை தங்களை வேண்டிக் கொள்கிறேன்—என்னை மன்னியுங்கள்.

கோ:—ஸஹோதரர்களே கேட்டீர்களா இந்த மஹனீயரின் வார்த்தைகளை-என்ன ஸாரமாயிருக்கிறது பாருங்கள். நம்மெல்லோரையும் உத்தாரணம்செய்ய, நமது அக்ஞானத்தைப்போக்கி "மோக்ஷமார்க்கம் இதுதான்" என்று நமக்கு வழிகாட்ட இந்த மஹனீயர் திவ்ய தேஜோதரர் வைராக்யசித்தர், மஹா சாந்த மூர்த்தி நமது பூர்வ புண்ய விசேஷத்தால் ஸ்ரீராமசந்த்ர மூர்த்தியின் ஸந்நிதிக்கே வந்திருக்கிறார். அவரது பாதங்களில் நீங்களும் நமஸ்கரித்து ஆசீர்வாதம் பெறுங்கள். அவரது உபதேசத்தால் தன்யராவீர்.

வே:—(தர்மகர்த்தாவுக்கு) ஐயா தர்மகர்த்தா-இவர் துருஷ்கனாகக் காணப்பட்டாலும் அவர் வாயிலிருந்து வரும் வாக்குகள் ஒரு பெரிய மஹான் வாக்குபோலல்லவா இருக்கின்றன.

தர்:—அவர் யாரோ, விசாரிப்போம். (கபீருக்கு) ஐயா, தாம் யார்-தமது நாமதேயம் என்னவோ?

கபீ:—ஐயா என்னைக் "கபீர்" என்பார்கள்.

கோ:—ஆஹா-என்ன என் புண்ய விசேஷம்.

தர்:—அப்படியா! கபீர் என்ற மஹான் தாம்தானோ? தமது பக்தி ப்ரபாவத்தைப்பற்றிக் கேட்டிருக்கிறோமேயல்லாது தம்மை நேரில் இதுவரை தர்சனம் செய்ததில்லை. ஆதலால் எங்களை மன்னிக்கவேண்டும். ஜாதி மத பேதங்களை நினைத்து தமக்குச் செய்த அபராதங்களை மன்னித்து இப்படியே ஸ்ரீராமருடைய ஸந்நிதிக்கு எழுந்தருளி எங்களெல்லோரையும் ஆசீர்வதிக்க வேணடும் (எல்லோரும் கபீர் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரிக்கிறார்கள்).

கபீ:—ப்ராம்ஹணர்களே! எழுந்திருங்கள், எழுந்திருங்கள். நீங்கள் எனக்கு ஒரு அபராதமும் செய்யவில்லை. நம்மெல்லோருடைய பாபங்களையும் போக்கி நம்மை ரக்ஷிக்கத் தகுந்தவர்—அதோ (கோவிலைக்காண்பித்து) ஸ்ரீராமசந்த்ரமூர்த்தி யிருக்கிறார். தாங்கள் சொன்ன ப்ரகாரம் நாமெல்லோரும் அவர் ஸந்நிதிக்குச்சென்று அவரை ப்ரார்த்திப்போம் வாருங்கள். (எல்லோரும் பாடிக்கொண்டு போகிறார்கள்).

## அங்கம்--I. காக்ஷி—3.

(நெலகொண்ட பல்லியில் குப்பா சாஸ்த்ரி க்ருஹம்—திண்ணையில் குப்பா சாஸ்த்ரி உட்கார்ந்திருக்கிறார்).

கு:—"ஸம்ஸார ஸாகர ஸமுத்தாரக மந்த்ரம்
ப்ரும்ஹாதி யோகிஸுர ஸேவிதஸித்த மந்த்ரம்
தாரித்ர்ய துக்கபவ ரோகவிநாச மந்த்ரம்
வந்தே மஹாபயஹரம் ரகுராம மந்த்ரம்".

என்று — உன்னைத்தானே—

(சேஷம்மாள் ப்ரவேசம்).

சே:—என்ன லோகமே முழுகிப்போறாப்லே கூச்சல் போடரேரே-என்ன விசேஷம் இப்போ.

கு:—ஒண்ணுமில்லே. கோபன்னாரு இன்னிக்கு ஹைதராபாத்துக்குப் போகப்போரார். அவர் போரத்துக்குமுந்தி நம்ம ஊர் பஜனமடத்திலே ஒரு பெரிய பஜனை நடத்தணும்இன்னு ஏற்பாடாயிருக்கு, நானும் போகணும் அங்கே—சுருக்க சமையலாகட்டும்.

சே:—ஆமாம்—ஆமாம். எனக்கென்ன பத்துக்காலும் இருபது கையுமிருக்கோன்னோ. ஆத்திலே கார்யம் கிர்யம் செய்ய யாராவது ஒரு மொட்டைமுண்டையிருந்தால் நானும் ஹாயின் னுட்டுத்தான் உககாந்திருப்பேன். உமக்கென்ன சொல்ரத்துக்கு? எல்லா எழவுக்கும் நான்தான் அழணும். இது நான் பிறந்தவேளை-என்னவோ ஆகிறவேளைக்குத்தான் ஆகும். அது போட்டும் இந்த பஜனையென்ன! இன்னிக்குத்தான் வந்துதா? இல்லாட்டால் இன்னியோடே போச்சோ? ராத்ரியில்லே பகலில்லே—உமக்கும் அந்த கோபன்னாருக்கும் இதேதானே வேலே, வேறே யென்ன உத்யோகமா. எல்லாம் தான் ஸரியாய்ப்போச்சே! இன்னும் என்ன! மலேபோல இருந்த குடும்பம் இப்போ குப்பைக்கும் கீழே ஆயாச்சு. என்ன கோபன்னாரு—சும்மா பஜனை ப்ராம்ஹண சந்தர்ப்பணம் இன்னு பெரியவாள் ஸம்பாதிச்சுவைச்சிருந்த ஆஸ்தியெல்லாம் தொலேச்சாச்சு. மஹானுபாவர்தான் அவர், உமக்கு குரு அவர், இன்னும் நம்முடைய கதி எப்படியாகப்போறதோ: ஈச்வரா இன்னு இருக்கேன் நான்.

கு:—கதியா? நம்முடைய கதிக்கென்ன வந்தது—கதியாம். இந்தப் பொம்மனாட்டி புராணம் எல்லாம் கட்டிவை-நீ. நிஜமாய்ச் சொல்ரேன். அந்த கோபன்னாரு மாதிரி மனுஷ்யாள் இந்த லோகத்திலேயே கிடையாது. பாமரனாது, மஹாபக்தர்.

அவரை ஒரு வார்த்தை அனுவச்யமாய்ச் சொன்னால் மஹா நரகம் ஸம்பவிக்கும். இப்பவும் அவருக்கு என்ன குறை. அவர் மாமாமார், அக்கண்ணா மாதண்ண பந்தலு ஹைத்ராபாத் திவான்கள் இன்னு உனக்குத் தெரியுமோ அன்னே? கோபண்ணகாரு தகப்பனார் தஹசீல் உத்யோகம் செய்தார் அவருக்கும் கூடிய சீக்ரம் அதே பதவி ஆகும் பார்நீ-கதியென்ன கதி.

சே:—கோபண்ணகாரு பேரெடுத்தேனே இல்லையோ அப்பவே எதுக்கு உமக்கு இப்படி படபடஇன்னு பொத்துண்டுவரது கோபம். நான் ஒத்திதான் சொன்னேனே என்ன! இந்த ஊரெல்லாம் சொல்றாள். இப்போ அவர் தஹசீல்தார் வேலை பாத்தா எனக்கென்ன! இல்லாப்போனா திவான்ஜி வேலை தான் பாத்தா என்ன? அப்படி உமக்கு எதாவது உத்யோகம் வந்தா நன்னாயிருக்கும். அது ஒண்ணையும் காணமே-வெரு மனே பேச்சு என்னத்துக்கு?

கு:—போரும் போரும் வாயைமூடு. உன் வார்த்தையைக் கேட்டால் எனக்குக்கூட மஹாபாதகம் வந்து சேரும்.

சே:—ஸரி ஸரி உள்ளத்தைச் சொன்னால் கொள்ளாப்பு என்னத்துக்கு.

கு:—ஸரி. அது எப்படியாவது போகட்டும்--நீ இப்போ மாத்ரம் கொஞ்சம் தயவுசெய்து சுருக்க சமையல்செய்-நானும் அதுக்குள்ளே ஸப்பாவதானி ஆத்திலே போய் புராணம் கேட்டுட்டுவரேன்.

(போகிறார்)

சே:—ஆஹா! அதுக்கென்ன குறைச்சல்.

(மற்றொரு பக்கம் போகிறாள்)

## அங்கம்-I. காக்ஷி-4.

---

கோல்கொண்டா—

(அக்கன்ன மாதன்ன பந்துலு க்ருஹம்—ஒரு தனி அறை—ராஜாங்க விஷயமாய் ஆலோசிக்கின்றனர்).

அ:—(ஒரு தஸ்தவேஜைப்பார்த்து), ஆஹா! தானிஷா பாதுஷா காருக்கு என்ன வித்யாபிமானம், ஸர்வஜனஸமத்வம், நிஷ்பாக்ஷிகஸ்வபாவம், இப்பேர்ப்பட்ட ப்ரபுவரேண்யரின் ஸேவா பாக்யம் நமக்கு லபித்தது நமது பூர்வ புண்ய விசேஷம் தான்—இல்லாவிட்டால் இது நமக்குக் கிட்டுமா.

மா:—அன்னய்யகாரு, தாம் சொல்வதே ஸத்யம்-ஸ்ரீ ஹரி கடாக்ஷத்தினால் தானிஷாபோல் உதார ப்ரபுவுக்குத் தம்போல் மஹான் ப்ரதான மந்த்ரியா யமைந்ததினால்தான் ஸ்வர்ணத்தில் ரதனம் பதித்ததுபோல் அவரது ப்ரபுத்வம் இத்தனை விசேஷமாய் நிறைவேறி வருகிறது. (ஒரு தஸ்தவேஜைக் கொடுத்து) இதைக் கொஞ்சம் கவனியுங்கள்.

அ:—(அதை வாங்கி வாசித்துப்பார்த்து) ஒகோ—பத்ராசலத்தில் தஹஸீல்தார் அகஸ்மாத்தாய் பரலோக ப்ராப்தியானதினால் தற்காலம் அதைக் கவனித்துக்கொண்டிருக்கும் ஸிரஸ்ததார் ராகவராவ் எழுதினது. "உடனே மிகுந்த ஸாமர்த்யசாலியான எவரையாவது நியமித்துவிட வேண்டுமென்று" -தம்பி, மாதன்ன இந்தப் பதவிக்கு யாரை நியமிக்கலாம்—சொல்.

மா:—அன்னய்யகாரு எனக்கொரு யோசனை தோன்றுகிறது. நமது மருமான் காமப்பா குமாரனை நியமித்தால் என்ன? முக்யமாய் அவனுக்கு இந்த பத்ராசலம் தஹஸீல்தார் பதவியைக்கொடுத்தால் அவன் கோரிக்கை ப்ரகாரம் ஸ்ரீராமஸேவையும் அவனுக்கு ஸுலபமாய் கிடைக்கும். அவனுக்கு அவச்யம் இந்த உபகாரம் தாம் செய்யத்தான் வேண்டும்.

(ஓர் ஸேவகன் வருகிறான்).

**ஸே:**—ஸ்வாமி. நெலகொண்ட பல்லியிலிருந்து கோபன்ன வந்திருக்கிறார்.

**அ:**—ஆஹா! அப்படியா? உடனே வரச்சொல்.

(ஸேவகன் போய்-கோபன்னா வருகிறார்).

**கோ:**— நமஸ்காரம்—பெரியமாமா: சின்னமாமா நமஸ்காரம்.

**அ / மா** :—வா வா—கோபன்னா, வா உட்கார்.

**அ:**—என்ன! வருகிறேன் என்று எழுதக்கூட இல்லையே. ஆனாலும் நினைத்த வேளைக்கே வந்தாய். இப்பொழுது தான் சின்னமாமா உன் விஷயமாய் ப்ரஸ்தாபித்துக் கொண்டிருந்தான்.

**கோ:**-நான்வரும் விஷயமும் முன்னதாகவே தங்களுக்குத் தெரியப் படுத்த அவகாசமில்லாமற் போயிற்று நினைத்தபடியே புறப் பட்டேன். இன்று தங்கள் தர்சனபாக்யத்தால் தன்யனானேன்.

**மா:**—கோபன்னா-இப்படி யுட்கார். அம்மாயி ரகுராமன் முதலிய எல்லோரும் க்ஷேமந்தானே?

**அ:**—அவர்களையும் கூட அழைத்து வரவில்லையா என்ன?

**கோ:**—எல்லோரும் க்ஷேமமே. அவர்களும் கூடவே வந்திருக் கிறார்கள்.

**அ:**—அப்பாயி. இதுவரையில் எத்தனையோ தடவை வரும்படி சொல்லியனுப்பியும் வராத நீ இப்பொழுது அந்த ஸ்ரீ ராம ருடைய அனுக்ரஹத்தினால் வந்திருக்கிறாய், அன்றியும் இதில் இன்னொரு விசேஷம். அந்த ஸ்ரீ ராமருடைய ஸன்னிதான ஸேவையை நீ வஹித்து நடத்துவதற்கு ஸ்ரீ ராமரே இப் பொழுது ஒரு திவ்ய ஸந்தர்ப்பத்தை கல்பித்திருக்கிறார். ஆகையால் உன்னை அதற்கு ஸம்மதிக்கச் செய்வதும் அவர் கடமை என்று தைர்யமும் எனக்கு ஏற்படுகின்றது. கோபன்னா-நாயனா ஸ்ரீ ராம ஸன்னிதான ஸேவை செய்வ தற்கு உனக்கு ஆக்ஷேபணையொன்றும் உண்டாகாதல்லவா?

**கோ:**—மாமய்யகாரு-என்ன இப்படிக்கேட்கிறீர்கள்? எத்தனையோ கோடி ஜன்மங்களில் கடினதபஸ்செய்தாலும் ஸ்ரீராம ஸன்னிதானஸேவை லபிக்குமா-அதை நான் வேண்டாமென்பேனா?

**மா:**—அதுதான் உத்தமலக்ஷணம். இனி தாமதமென். பத்ராசலத்தில் தஹஸீல்தார் ஸ்தானம் காலியேற்பட்டது. அதை உனக்குக்கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று நானிப்பொழுதுதான் பெரியமாமாவிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். ஆனால் ஸ்ரீ ராம ஸேவாதத்பரனாயுள்ள நீயும் இதற்கு ஸம்மதிப்பாயோ-என்னவோ என்று மாத்ரம் கொஞ்சம் ஆலோசனையுண்டாயது. அந்த ஸமயத்திற்கே நீயும் வந்தாய். ஆகையால் நீ வேறு பதில் சொல்லாமல் அங்கீகரிப்பாய் இதை

**கோ:**—மாமகாரு. எந்த விதத்தில் பார்த்தாலும் இது எல்லாம் ஸ்ரீராமருடைய ஆக்ஞையேயன்றி வேறில்லையென்று ஸ்பஷ்டமாய் தெரியவருகிறது. இனி ஸம்சயம் கொள்வதில் பயனில்லை. ஸ்வாமி ஆக்ஞையை நிறைவேற்ற ஸர்வ ஸம்ஸித்தனாயிருக்கிறேன்.

**அ:**—இதுவரை-ஸ்ரீ ராமானுக்ரஹத்தினால் எல்லாம் அனுகூலமாய் முடிந்தது. நானிப்பொழுதே போய் தானிஷாகாருக்கு விண்ணப்பம் செய்து கார்யஸித்தி செய்துகொண்டு வருகிறேன்-தம்பி மாதன்னா நீ இங்கேயேயிருந்து கோபன்னாவை விசாரித்துக்கொள்.

**மா:**—சித்தம் (அக்கன்னா போகிறார்). அடே யாரடா அங்கே?

(ஸேவகன் வர) அன்னகாருக்கு பல்லக்கு ஸித்தமாக்கு.

**ஸேவகன்:**—சித்தம் (போகிறான்).

**மா:**—அப்பாயி—ப்ரயாணத்தினால் அலுத்திருக்கிறாய். ஸ்நானம் செய்து பூஜையை முடித்துக்கொண்டு போஜனத்துக்குப் போகலாம் வா. (போகிறார்கள்).

## அங்கம்-II. காக்ஷி--1.

பக்ர[illegible]ம்—

கோபன்ன க்ருஹம்—ரகுராமன் ஸ்ரீராமர் படத்தின்
முன் நின்று அதையே பார்த்து ஆனந்திக்கிறன்.
(பக்கத்து ஆத்துப் பையன்கள் வருகிறார்கள்).

பை:—ரகுராமா நீ என்னடா? ஆத்தைவிட்டு எதடா வெளியிலே வரமாட்டேன் என்கிறாய்?

ரகு:—வெளியிலே என்னத்துக்குடா வரணும்?

பை:—விளையாடரத்துக்கு.

ரகு:—நான் தான் ஆத்திலேயே விளையாடரேனே!

பை:—ஆத்திலே யா[illegible]டே விளையாடராய் நீ?

ரகு:—ஸ்ரீராமசந்த்[illegible].

பை:—அவன் யார்[illegible] ஸ்ரீராமசந்த்ரன்?

ரகு:—இதோ (பட[illegible]த்தைக் காண்பிக்கிறான்) பாருங்கள்.

பை:—(சிரித்து) இவன் கூடவா எப்படியடா விளையாடறாய்?

ரகு:—காண்பிக்கிறேன்—பாருங்கள். (படத்திற்கு மாலை போட்டுப் பாடுகிறான்).

பை:—ரகுராமா! இந்த ஆட்டம் நன்றாத்தான் இருக்குடா. எப்படி எங்களுக்கும் சொல்லிக்கொடேன்.

ரகு:—அப்படியே யாகட்டும். இந்தப் புஷ்பங்களை படத்தின்மேல் போட்டு நான் சொல்லுகிற மாதிரி சொல்லுங்கள்.

(எல்லோரு[illegible] படத்தின்மேல் புஷ்பங்கள் போட்டு ரகுராமன்பாட பின் தொடர்ந்து பாடுகிறார்கள்).

(கோபன்னவும், அவர் பார்யை கமலாம்பாளும் ப்ரவேசம்- பையன்கள் பயப்பட்டுப் போகப் புறப்படுகிறார்கள்— கோபன்ன அவர்களைத் தடுக்கிறார்).

கோ:—பாலர்களே இப்படி வாருங்கள். நீங்கள் செய்கிறது மிகவும் ச்ரேஷ்டமான வேலை. ஆகவே ஒன்றும் பயப்படவேண்டாம்.

ஸ்ப:— கொஞ்சம் பயமாயிருந்தது.

கோ:—குழந்தைகளே இனி இவ்விதம் பயப்படவேண்டாம். ப்ரதிதினமும் எங்கள் ரகுராமன்கூட இம்மாதிரியே விளையாடுங்கள். ஊரிலும் உங்களுக்குத் தெரிந்த பாலர்களுக்கும் இந்த ஆட்டத்தைக் கற்றுக்கொடுங்கள்.

பை:—அப்படியே செய்கிறோம்.

கோ:—இந்த ஆட்டத்தின் ஆரம்பம் எங்கள் ரகுராமன் காண்பித்தான்—இதனை முடிக்கும் விதம் நான் காண்பிக்கிறேன்.

(கற்பூரம் பொருத்தி கமலாம்பாள் கையிற் [illegible], ஸ்ரீராமருக்கு ஹாரத்தியெடுத்தி

கம:—(ஹாரத்தியெடுத்து மங்களம் பா[illegible]

கோ:—பாலர்களே இனி நீங்கள் உ[illegible]கள் [illegible]த்திற்குச் செல்லுங்கள். (ஒவ்வொருவரும் [illegible]ம [illegible]ற்கு நமஸ்காரம் செய்து போகிறார்கள்)

கம:—(ரகுராமனைக்கட்டியணைத்து) [illegible]டைய பூர்ண கடாக்ஷம் உனக்கு உண்டாகட்டும் 'எ[illegible]ஆசீர்வதிக்கிறாள்).

கோ:—நாயனா-ரகுராமா-உன் தாயார் உன்னை நன்றாய் ஆசீர்வதித்தாள். ஸ்ரீ ராமருடைய க்ருபாகடாக்ஷ மொன்றுமட்டுமிருந்தால் நமக்கு வேறு என்னவேண்டும். ஸகல ஸம்பத்தும் ஒருங்கே சேர்ந்துவந்தாற்போலல்லவா—ஆக[illegible] எப்பொழுதும் அந்தப் பரமாத்மாவை-ஸ்ரீ ராமசந்த்ரனைமட்டும் மறவாதே. அவர் உன்னைப் பூர்ணமாய் ஆசீர்வதிப்பார்.

கம:—நாதா இந்த மாஸம் ஸ்ரீராமநவமி உத்ஸவம் வரும் அல்லவா? இன்னும் எத்தனை நாட்களிருக்கின்றன.

கோ:—பத்து தினங்களே. அதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் அப்பொழுதே செய்துவிட்டேன்.

ரகு:—நாயனா அன்று நம்முடைய ஆத்தில் ஒரு பெரிய பண்டிகை யல்லவா? நம்மூர் ப்ராம்ஹணர்கள் எல்லாரும் வந்து ஸ்ரீராம பஜனை செய்வார்கள் அல்லவா?

கோ:—ஆம் குழந்தாய். அப்பொழுது நீயும் அவர்களுடன் சேர்ந்து பஜனை செய்யலாம்.
(ஸேவகன் வர)-என்ன ஸாப்பண்ணா-என்ன விசேஷம்.

ஸே:—எஜமான், ஸிரஸ்ததார் ராகவராவ்காரு காத்திருக்கிறார். (போகிறான்)

கோ:—ஸரி, இதோ வந்தேன். (போகிறார்)

கம:—நாயனா-வா. நாமும் உள்ளே போகலாம். (போகிறார்கள்)

## அங்கம்--II. காக்ஷி-2.

*ஸ்ரீராம நவமி தினம் கோபண்ணாவின் க்ருஹத்திண்ணையில் ப்ராம்ஹணர்கள். போஜனமாய் தக்ஷிணை தாம்பூலத்திற்கு காத்திருக்கிறார்கள்.*

ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரிகள்:—அன்னதாதா ஸுகீபவ—மஹாராஜன். என்ன ஸாப்பாடு என்ன ஸாப்பாடு! சொல்லமுடியவில்லை இன்று.

ராமா சாஸ்த்ரி:—ஆமாம் ஆமாம். எத்தனைவித பதார்த்தங்கள், எத்தனைவித பக்ஷணங்கள் எத்தனைவித பாயஸங்கள்-அடடா ஒரு — போராது—இரண்டு இருந்தாலும் போருமோ—என்ன, அதுவும் ஸந்தேஹம்தான்.

ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரி:—ராமா சாஸ்த்ரிகாரு. நன்றாய்ச் சொன்னீர். ஒவ்வொரு பதார்த்தமும் தேவாம்ருதமாயிருந்ததுன்னா. எதையாவது ஒன்னை விட்டுடலாமின்னாலோ-மனஸு கேக்கரதா-ஆனால் எல்லாத்தையும் ஸாப்பிடலாமின்னாலோ வயிறு கொள்ளாதே-என்ன செய்யாது. ரொம்ப ச்ரமப்பட்டுப் போனேன்.

**அப்பய்யா தீக்ஷிதர்:**—ஓய்! ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரிகாரு. நன்றாய் ஸாப்படர உமக்கே இவ்வளவு ச்ரமமானல் நாங்கள் எல்லாம் என்னதான் செய்வோம். அதுவுமில்லாதே, இத்தனையும் ஸித்தம் செய்து பரிமாறுகிறார்களே! அவர்களுக்கு என்ன ச்ரமமிருக்கும். என்ன ஸாப்பாடு-தர்மி தர்மி புண்யாத்மா.

**ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரி:**—ச்ரமமிருக்கட்டும் அய்யா! எவ்வளவு பக்தி ச்ரத்தை. அதுதானய்யா ரொம்ப விசேஷம்.

**ராமா சாஸ்த்ரி:**—பக்தி ச்ரத்தைக்கு என்ன குறைச்சல். அவரோ மஹா பக்தர். அதனாலே பகவத் பக்தியோடே ப்ராம்ஹண பக்தியும் சேர்ந்தது.

**அப்பய்யா தீக்ஷிதர்:**—அதிலேயும் அந்த கோபன்னகாரு பார்யை இருக்காளே-அந்த அம்மாள்-மஹா பதிவ்ருதை. அவரைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகம்—ச்ரத்தை. பார்யை இருந்தால் அப்படி இருக்கணும்.

**ஸ்ரீநிவாஸ சாஸ்த்ரி:**—அதெல்லாம் பூர்வ புண்யவசம். கோபன்ன காருக்கு என்ன குறைச்சல். எல்லா பாக்யங்களும் ஸம்பூர்ண மாய் நிறைந்திருக்கின்றன. அதிகாரம், ஐச்வர்யம், பகவத் பக்தி, வைராக்யம், பரோபகாரசிந்தை-இவைகளெல்லாவற்றி லும் முக்யமாய் அனுகூல்யமான தாம்பத்யம்.

**அப்பய்யா தீக்ஷிதர்:**—கோபன்னகாருவைப்போல புண்ய புருஷர் நம் தாலூகாவுக்கு தஹஸீல்தாராய் வந்ததே நம்முடைய பூர்வ ஜன்ம பலம்தான். அவர் வந்ததுமுதல் ஸ்வாமி கைங்கர்யம் என்ன-ப்ராம்ஹண கைங்கர்யம் என்ன-இவைகட்கு என்ன குறை.

(குண்டப்ப சாஸ்திரி வயிற்றைத் தடவிக்கொண்டு ப்ரவேசம்).

**கு:**—ஆமாம் ஆமாம். ஒன்றும் குறைச்சல் இல்லை. எல்லாம் ஸம் பூர்ணமாயிருக்கு.

(ச்ரமத்தோடு உட்காருகிறார்).

ரா:—என்னய்யா! உமக்கேனித்தனை தாமஸம்.

கு:—(ச்ரமபரிஹாரம் செய்துகொண்டு) அதிருக்கட்டும். இன்னும் தக்ஷிணை கொடுக்கலையே? (அங்குமிங்கும் பார்க்கிறார்).

(டபேதார் வருகிறான்).

ட:—ஸ்வாமிகளே! எஜமான் அவர்கள் வீட்டுப் பின்புறத்துக் கிணற்றுப்பக்க மிருக்கிறார்கள். உங்களை யெல்லாம் அங்கே வரச்சொன்னார்கள்.

ஸ்ரீ:—அங்கென்னத்துக்கடா வரணும்?

ட:—அது எனக்குத் தெரியாது ஸ்வாமி.

கு:—ஹாம்! அது வேறே ச்ரமமா? ஸரி-போவோம்.

(ச்ரமப்பட்டுப் போகிறார்கள்)

## அங்கம்–II. காக்ஷி--3.

---

(கோபன்னவின் க்ருஹத்தின் பின்புறத்தில் ஒரு கிணற்றுப் பக்கத்தில் கோபன்னவும் கமலாம்பாளும் சோகமுற்ற முகத்துடன் நிற்கிறார்கள்).

கம:—(துக்கத்துடன்). நாதா! ப்ராம்ஹணர்கள் போஜனம் செய்கிறார்களென்று நமது சோக ஆரவம் அவர்களது செவியில் படுமென்று நமது புத்ரனின் மரணம் அவர்களறிந்தால் போஜனம் செய்யாமல் எழுந்துவிடுவார்களே என்று பயப் பட்டு இதுவரை என் மனத்திலுண்டான வருத்தத்தையெல் லாம் பொறுத்து நிக்ரஹித்துக் கொண்டிருந்தேன். இனி என்னால் தாள முடியாது. ஹா குமாரா, ரகுராமா இந்த நிர்ப் பாக்கியசாலியை கோர துக்கஸாகரத்தில் மூழ்கச் செய்து விட்டு நிமிஷ நேரத்தில் என்னைவிட்டுப் பிரிந்தாயே-பாலா அந்தப்பாழுங் கிணற்றின் பக்கத்தில் ஏன் போனாயடா. (கிணற்றருகில் சென்று கிணற்றுள் உற்றுப்பார்த்து) என்

கண்மணீ! என் செல்வமே—என்னப்பா, இந்தப் பாழுங் கிணற்றில் விழுந்து அலறி அடிபட்டு என்னென்ன அலறி ணயோ? "அம்மா அம்மா" என்று என்னை நினைந்து எத்தனை தரம் கூவினையோ? கண்ணே இதோ நான் வந்திருக்கிறேனே! "ஏன்" என்று பதில் சொல்லலாகாதா! "அம்மா" என்று கூப்பிடேன் இப்பொழுது. அய்யோ! ரகுராமா என் பதில் கூறமாட்டேனென்கிறாய். (கொஞ்சம் சோகமுற்று வ்யஸனம் அதிகரித்து) அய்யோ இனி யேது தனயன். என் ப்ராண மணி போயிற்று—என் ஜீவமணி போயிற்றே. அய்யோ இனி என்னை அம்மாவென்று கூப்பிடுபவரும் உண்டோ. என் பக்கலில் இருந்து ஸ்ரீராம பூஜைசெய்வது யார் இனி? அஹா ஸுகுமாரா, ரூபஜிதமாரா, வம்சகவிஸ்தாரா, ஸௌபாக்ய ஸாகரா என்னை விட்டுச்சென்றாயே. நான் எப்படி பொறுப்பே னிதை! துக்க பாரம் [illegible] எங்ஙனம் சோகம் நீங் குமோ! அய்யோ என் புத்ரனை ஜீவிதனாகச்செய்பவர் ஒரு வரும் இல்லையா? ஸ்வர்க்க தேவதைகளே [illegible] நாபலிகளே பூமியிலுள்ள பூஸுரர்களே பதிவ்ரதைகளே புண்ய புருஷர் களே ம்ருகங்களே பக்ஷிகளே யாராவது நீங்கள் எனக்கு புத்ர தானம் கொடுங்கள். ஓ ராமசந்த்ரா [illegible] ராமனைக் கொடுத்து எம்மை ரக்ஷிப்பாய் (கீழ்வீழ்ந்து [illegible]சையாகிறாள்).

கோ:—ராமசந்த்ரா இன்று உனது ஜனனதினம் என்று ஆனந்தத் துடன் உன்னை பூஜித்து விப்ரபுங்கவர்களுக்கு போஜனம் செய்வித்து அவர்களுக்கு தக்ஷிணை தாம்பூலம் அளித்து ஸந் துஷ்டர்களாக்கி நான் க்ருதார்த்தனாக வேண்டுமென்று பரி சுத்த ஸங்கல்பம் செய்திருக்க ப்ராம்ஹணர்கள் போஜனம் செய்யும்பொழுதே என் தேஹத்துக்கு அசுசி ஏற்பட்டு என் ஸங்கல்பம் பூர்த்தியாகாமல் என் கைகளைக் கட்டிவைத்தாயே. ராமசந்த்ரா—இந்தப் பாபம் என்னைச்சேர்ந்ததா? அல்லது உன்னையா? அதோ ப்ராம்ஹணர்கள் வருகிறார்களே. (ப்ராம் ஹணர்கள் வந்து ஒரு பக்கமாய் துக்கமுகத்துடன் நிற்கிறார் கள்) இவர்கள் பாதத்தில் வீழ்ந்து இவர்களது ஆசிர்வாதம்

பெற யோக்யமில்லாதவனு யிருக்கிறேனே—ரிக்த ஹஸ்தர்களாய் அனுப்பவா இவர்களை? இல்லை இல்லை-அது என்னலாகாது. ஹே ஜானகீரமணு என் ஸங்கல்பம் நிஷ்களங்கமானது உண்மையானுல் அதை ஸித்திக்கச் செய்வது உன் பாரம். இந்த ப்ராம்ஹணர்கள் உன் அதிதிகள்—கீர்த்தியோ அபகீர்த்தியோ அது உன்னைச் சேர்ந்தது. நான் உனது தாஸன்-உன் ஸேவை செய்வதுதான் என் கார்யம்.

ஸ்ரீ:—கோபன்னகாரு எங்களுக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. அஹா என்ன கஷ்டம் என்ன கஷ்டம்—

ரா:—உமக்குத் தெரியாததில்லை. போன கார்யத்தைப்பற்றிச் சிந்திப்பதில் பயனில்லை. எப்பேர்ப்பட்டவர்களுக்கும் கர்மபலம் அனுபவிக்காமல் தப்பமுடியாது. ஆகையால் கொஞ்சம் தைர்யப்படுத்திக் கொள்ளுங்கள்.

அ:—ஆஹா! இந்தக் குழந்தைக்குத்தான் என்ன பக்தி என்ன விநயம்!

கம:—(மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து)—ஓ ராமசந்த்ரா! கருணு ஸமுத்ரமென்றும் ஸத்ய ஸந்தனென்றும் சதுர்தச புவனங்களிலும் புகழ்கின்றனவே. நீ ஸார்வ பௌமனுய் அயோத்யாநகரம் பரிபாலிக்கும் ஸமயம் ப்ராம்ஹணனொருவன் தன் புத்ரன் மரணம் தாளாது உன்னிடம்வந்து முறையிட அவ்விப்ர குமாரனை ஜீவிதனுக்கிக் காப்பாற்றினுய் என்றும் சொல்லுகிறுர்களே! அந்த வாக்யம் நிஜமானுல் என் ரகுராமனை எனக்கு இப்பொழுதே கொடு. ஓ ரகுராமா—உன் அதிதிகள் காத்துக்கொண்டிருக்கிறுர்கள். சீக்கிரம் வா.

ரகு:—(கிணற்றுள்ளிருந்து) வந்தேன் அம்மா! இதோ வந்தேன். (என்று சொல்லிக்கொண்டு உயிர்பெற்று வெளியில் வருதல்)

கம:—(எதிர்சென்று தனயனைக்கட்டியணைத்து) நாயனு, வந்தாயா! ஸ்ரீ ராமருக்குக் கருணை ஏற்பட்டதா.

கோ:—ராமா ஜகதபிராமா ஜானகிரமணா என்ன உன் மஹிமை என்ன உன் க்ருபாகடாக்ஷம். (ரகுராமனைப் பக்கத்தில் சேர்த்து ஆசீர்வதிக்கிறார்) நாயனா உனக்கு ஸர்வமங்களமு முண்டாகட்டும்.

ப்ராம்:—கோபன்னகாரு உம்முடைய ப்ரபாவம் அதி அத்புதம். அதி அத்புதம்.

கோ:—என் ப்ரபாவம் என்ன-எல்லாம் அந்த பரமாத்மா ஸ்ரீராம சந்த்ரமூர்த்தியினுடையதே! அவரது கடாக்ஷம் மட்டுமிருந் தால் சாவது என்பது என்ன! பிழைப்பது என்பதுதான் என்ன! அவரது க்ருபைமாத்ரமிருந்தால் அஸாத்யமென்பது எதுவுமில்லை நமக்கு.

ஸ்ரீ:—கோபன்னகாரு, உம்முடைய பக்தி மஹிமையினால் இந்த லோகமெல்லாம் ஸ்ரீராமமயம் செய்துவிட்டீர்- ஆகையால் உமக்குத் தாய் தகப்பன் சூட்டிய 'கோபன்ன' நாமம் அவ்வ ளவு நன்றாயில்லையென்று தோன்றுகிறது.

கோ:—(மந்தஹாஸத்துடன்) ப்ராம்ஹண ச்ரேஷ்டர்களே பின் எப்பெயர் உங்களுக்குப் பொருந்தினதாகத் தோன்றுகின் றதோ?

(கபீர் உள்ளிருந்து, "ராமதாஸு" என்று பாடிக்கொண்டு வருகிறார். எல்லோரும் நமஸ்கரிக்கிறார்கள்)

கபீ:—குமாரா உன் பக்தி மஹிமையை ஸ்ரீ ராமரே இன்று ஸ்பஷ்டமாய் பஹிரங்கம் செய்துவிட்டார். ராமபக்தர்களுள் நீயொரு ச்ரேஷ்டமானவன். ஆகவே, உனக்கு, 'ராமதாஸு' என்று பிதாவுக்கும் குருவுக்கும் ஸமானமான நான் நாம காணம் செய்கிறேன்.

ராம:—பாக்யம் எல்லாம் தங்கள் க்ருபாகடாக்ஷமே.

கபீ:—குமாரா ராமதாஸு இனி யுன் பக்தி நிஷ்டைக்கு க்ஷீணம் ஏற்படாது. நீ சேகரித்திருக்கும் பக்தியென்னும் ஸ்வர்ண

மெல்லாம் உன் பார்யை ஆபரணமாக்குவாள். அதற்கு உன் தனயன் ரத்னம் பொருத்துவான். உனக்கு ஸகல மங்களமு முண்டாக. நான் இனிப் போய்வருகிறேன்.

ராம:—குருவர்யா—இந்த தாஸனின் ஆதிக்யம் கொஞ்சம் ஸ்வீகரித்துப் போகவேண்டும் என்று ப்ரார்த்தனை.

கபீ:—ஸரி அங்ஙனமே போகலாம் வாருங்கள்—ஜயஜயராம்.

(எல்லோரும் பாடிக்கொண்டு போகிறார்கள்).

## அங்கம்-II. காக்ஷி-4.

ஜலகொண்டபல்லி க்ராமம் குப்பா சாஸ்த்ரி க்ருஹம்—

(குப்பா சாஸ்திரி கையில் ஒரு கடிதத்துடன் இருக்கிறார்).

சேஷம்மாள் ப்ரவேசம்

கு:—பார்த்தயா-பாவம். அந்த கோபன்னகாருவை நீ எவ்வளவோ தூஷிச்சயே-பார். பகவானை நம்பினவன் ஒருநாளும் கெட்டுப் போகமாட்டான். பின்னை யென்னன்னு நினைக்கிறாய்—பத்ராசலத்திலேயே அவருக்கு இப்போ தஹஸீல்தார் ஆய்ட்டது. இனிமேலே நீ உன்னுடைய பைத்யகாரப் பேச்செல்லாம் கட்டிவைச்சுடணும் தெரியுமா?

சே:—என்ன! கோபன்னகாருக்குத் தஹஸீல்தார் ஆய்ட்டதா!

கு:—இன்னமும் ஸந்தேகமா உனக்கு? இதோ பாரேன் காகிதம்—அவரே பத்ராசலத்திலிருந்து தானே எழுதியிருக்கிறார். அவருக்கு கர்வமின்கிறது லேசம்கூட கிடையாது. அண்ணா குப்பா சாஸ்த்ரிகாரு இன்னு எழுதியிருக்கார். பார் நீ—

(கடிதத்தைக் கொடுக்கிறார்).

சே:—போகட்டும் போ! எப்போ பார்த்தாலும் ஒத்தருடைய ஐச்வர்யத்தைப்பார்த்து ஸந்தோஷப்படாதே நம்முடைய பிழைப்பு பாய்ப் போச்சு. நமக்கு என்ன கிடைச்சுது-ஒன்னுமில்லை—

ஒரு காசுகூட கிடையாது. இப்போ கோபன்னகாருக்கு தஹ ஸீல்தாரானல் நமக்கு என்ன லாபம்—நல்லவர், நல்லவர் என்கிறு—என்ன நல்லவர் புற்றுக்குள்ளே? அண்ணு இன்னு எழுதிட்டாராம் பின்னே என்ன குறைச்சல் எல்லாம் ஸம்பூர்ணமாய் நிறைஞ்சுபோச்சோ அன்னே—தானிஷா மந்த்ரி தன் மாமாமார் கிட்டே உங்க ஸங்கதியும் கொஞ்சம் சிபார்சு செய்து ஒரு முஸ்தீபு வேலையாவது வாங்கிக்கொடுத்தால், நல்லவர்தான்-எல்லாம் அவாவாள் கார்யம்தான் அவாவாள் பாத்துக்குவாள்—அவ்வளவுதான்.

கு:—உன் ஸ்வபாவம் ரொம்ப கெட்டது. ஒர்த்தரை நிந்திக்காதே உனக்கு ஸந்தோஷம்போலே இருக்கு. நம்ம மனஸிலே என்ன இருக்கு இன்னு அவருக்கென்ன தெரியும்-நாமும் போய் அவர்கிட்டே ஸமாசாரத்தைச் சொன்னல் அவரும் அவராலான ஸஹாயம் அவச்யம் செய்யத்தான் செய்வார்.

சே:—இல்லேன்ன, உம்மைக்காட்டிலும் அந்த கோபன்னகாரு என்ன ஒஸ்தி இங்கரேன்—படிப்பு விஷயத்திலேயா! இல்லே குலகோத்திரங்களிலேயா? எதிலேயும் உமக்கு ஒன்னும் குறைச்சலில்லே! அவருக்கும் ஒன்னும் அதிகமில்லே. இல்லாப்போன ஒரு வேளே அவர் மாமாமார் என்னவோ பெரிய அதிகாரத்திலே இருக்காள் இன்னு சொன்னீரே, அது வேணுமானல் உமக்கில்லே அவ்வளவுதானே. ஆனல் இந்த ஸங்கதி அந்த கோபன்னகாருக்குத் தெரியாதா என்ன? காலமே பிடிச்சு நாய்க்குட்டிமாதிரி அவர் பின்னலேயே திரிஞ்சுண்டிருக்கிரே உமக்கு அந்த மட்டும் ஸஹாயம் செய்யணும்னு அவருக்கு ஏன் தெரியாமல் போச்சு இங்க்ரேன். இதுதான் நல்லவாளுக்கு லக்ஷணம் போலிருக்கு. இப்பவாவது உம்மை அங்கே புறப்பட்டுவரும்படி எழுதியிருக்கா! அந்தப் பேச்சே இல்லேயே: எப்படியோ நீர் என்ன செய்வீரோ எனக்குத்தெரியாது: எந்த உபாயத்தினலேயாவது அந்த கோபன்னகாரு மாதிரி நீரும் ஒரு தஹஸீல்தார் உத்யோகம் ஸம்பாதிச்சுக்காதபோனல் நமக்கு கௌரவமே கிடையாது.

கு:—(தலையசக்கி அங்கீகரிப்பை அபிநயித்து) ஆமாம், ஆமாம். நீ சொல்ரத்திலே கொஞ்சம் விஷயம் இருக்கு—ஸரிதான். நானும் பத்ராசலம் போய்வர்ரேன்—எல்லாத்துக்கும்.

சே:—இதோ பாருங்கோ! நீர்மாத்ரம் போனால் ஒரு ப்ரயோஜனமும் உண்டாகாது. கோபன்னகாருவைப் பாத்துட்டேரோ இல்லையோ அப்பவே உமக்கு இந்த லோகமே மறந்துபோம். கூட என்னைப்போலே ஒத்தி இருந்து உம்மை அப்பப்போ தூண்டிண்டிருந்தாலன்னியிலே ஒரு கார்யமும் நடக்காது, அதுக்குத்தான் சொல்ரேன்-நானும் வர்ரேன்கூட. சீக்ரமாய் பஞ்சாங்கம் பாத்து ஒரு நல்ல முஹுர்த்தம் பாருங்கோ.

கு:—நேக்கு ஜோதிஷத்திலே அவ்வளவாக பரிசயம் கிடையாது. ஸீதாராம வஸித்தாந்திகாரு ஆத்துக்குப்போய் முஹுர்த்தம் வைச்சுண்டுவர்ரேன். நீயும் அதுக்குள்ளே-சீக்ரம் சமையல் ஆகட்டும்.

சே:—ஸரி. சீக்ரம் போய்வாருங்க. அம்ருதமானாலும் ஆலஸ்யமானால் அது விஷம்தான்இன்னு சொல்லுவாள்—நீர் அங்கி போட்டுண்டு தலைப்பாகையெல்லாம் வைச்சுண்டு முன்னும் பின்னும் வில்லைச்சேவகன்போகப் பல்லக்கிலேறி தஹஸீல்தார் அமல் செய்ரதை எப்போடா பார்க்கப்போரோம் இன்னு இருக்கு, சீக்ரம் போய்வாருங்க. (குப்பா சாஸ்த்ரி ஸந்தோஷத்துடன் போகிறார்).

சே:—(அதே பக்கம் பார்த்துக்கொண்டிருந்து சிறிது நேரம் பொறுத்து திரும்பி தலையையசைத்து) இன்னும்பார்-அந்தப் பக்கத்தாத்து காமாக்ஷி கர்வத்தை அடக்கணும் அப்போ.

(மற்றொரு பக்கம் போகிறாள்).

ஒரு காசுகூட கிடையாது. இப்போ கோபன்னுகாருக்கு தஹ ஸீல்தாரானால் நமக்கு என்ன லாபம்—நல்லவர், நல்லவர் என்கிறு—என்ன நல்லவர் புற்றுக்குள்ளே? அண்ணு இன்னு எழுதிட்டாராம் பின்னே என்ன குறைச்சல் எல்லாம் ஸம்பூர்ணமாய் நிறைஞ்சுபோச்சோ அன்னே—தானிஷா மந்த்ரி தன் மாமாமார் கிட்டே உங்க ஸங்கதியும் கொஞ்சம் சிபார்சு செய்து ஒரு முஸ்திபு வேலையாவது வாங்கிக்கொடுத்தால், நல்லவர்தான்-எல்லாம் அவாவாள் கார்யம்தான் அவாவாள் பாத்துக்குவாள்—அவ்வளவுதான்.

கு:—உன் ஸ்வபாவம் ரொம்ப கெட்டது. ஒர்த்தரை நிந்திக்காதே உனக்கு ஸந்தோஷம்போலே இருந்து. நம்ம மனஸிலே என்ன இருக்கு இன்னு அவருக்கென்ன தெரியும்-நாமும் போய் அவர்கிட்டே ஸமாசாரத்தைச் சொன்னால் அவரும் அவராலான ஸஹாயம் அவச்யம் செய்யத்தான் செய்வார்.

சே:—இல்லேன்னு, உம்மைக்காட்டிலும் அந்த கோபன்னுகாரு என்ன ஒஸ்தி இங்க்ரேன்—படிப்பு விஷயத்திலேயா! இல்லே குலகோத்திரங்களிலேயா? எதிலேயும் உமக்கு ஒன்னும் குறைச்சலில்லே! அவருக்கும் ஒன்னும் அதிகமில்லே. இல்லாப்போனு ஒரு வேளே அவர் மாமாமார் என்னவோ பெரிய அதிகாரத்திலே இருக்காள் இன்னு சொன்னீரே, அது வேணுமானல் உமக்கில்லே அவ்வளவுதானே. ஆனல் இந்த ஸங்கதி அந்த கோபன்னுகாருக்குத் தெரியாதா என்ன? காலமே பிடிச்சு நாய்க்குட்டிமாதிரி அவர் பின்னலேயே திரிஞ்சுண்டிருக்கீரே உமக்கு அந்த மட்டும் ஸஹாயம் செய்யணும்னு அவருக்கு என் தெரியாமல் போச்சு இங்க்ரேன். இதுதான் நல்லவாளுக்கு லக்ஷணம் போலிருக்கு. இப்பவாவது உம்மை அங்கே புறப்பட்டுவரும்படி எழுதியிருக்கா! அந்தப் பேச்சே இல்லையே: எப்படியோ நீர் என்ன செய்வீரோ நேக்குத்தெரியாது: எந்த உபாயத்தினலேயாவது அந்த கோபன்னுகாரு மாதிரி நீரும் ஒரு தஹஸீல்தார் உத்யோகம் ஸம்பாதிச்சுக்காதபோனல் நமக்கு கௌரவமே கிடையாது.

கு:—(தலையசக்கி அங்கீகரிப்பை அபிநயித்து) ஆமாம், ஆமாம். நீ சொல்ரத்திலே கொஞ்சம் விஷயம் இருக்கு—ஸரிதான். நானும் பத்ராசலம் போய்வர்ரேன்—எல்லாத்துக்கும்.

சே:—இதோ பாருங்கோ! நீர் மாத்ரம் போனால் ஒரு ப்ரயோஜனமும் உண்டாகாது. கோபன்னகாருவைப் பாத்துட்டேரோ இல்லையோ அப்பவே உமக்கு இந்த லோகமே மறந்துபோம். கூட என்னைப்போலே ஒத்தி இருந்து உம்மை அப்பப்போ தூண்டிண்டிருந்தாலன்னியிலே ஒரு கார்யமும் நடக்காது, அதுக்குத்தான் சொல்ரேன்-நானும் வர்ரேன்கூட. சீக்ரமாய் பஞ்சாங்கம் பாத்து ஒரு நல்ல முஹூர்த்தம் பாருங்கோ.

கு:—நேக்கு ஜோதிஷத்திலே அவ்வளவாக பரிசயம் கிடையாது. ஸீதாராம ஸித்தாந்திகாரு ஆத்துக்குப்போய் முஹூர்த்தம் வைச்சுண்டுவர்ரேன். நீயும் அதுக்குள்ளே-சீக்ரம் சமையல் ஆகட்டும்.

சே:—ஸரி, சீக்ரம் போய்வாருங்க. அம்ருதமானாலும் ஆலஸ்யமானால் அது விஷம்தான்இன்னு சொல்லுவாள்—நீர் அங்கி போட்டுண்டு தலைப்பாகையெல்லாம் வைச்சுண்டு முன்னும் பின்னும் வில்லைச்சேவகன்போகப் பல்லக்கிலேறி தஹஸீல்தார் அமல் செய்ரதை எப்போடா பார்க்கப்போரோம் இன்னு இருக்கு, சீக்ரம் போய்வாருங்க. (குப்பா சாஸ்த்ரி ஸந்தோஷத்துடன் போகிறார்).

சே:—(அதே பக்கம் பார்த்துக்கொண்டுஇருந்து சிறிது நேரம் பொறுத்து திரும்பி தலையையசைத்து) இன்னும்பார்-அந்தப் பக்கத்தாத்து காமாக்ஷி கர்வத்தை அடக்கணும் அப்போ.

(மற்றொரு பக்கம் போகிறாள்).

## அங்கம்--II. காக்ஷி--5.

---

*பத்ராசலம் தஹஸீல்தார்-கச்சேரி.*

*(சில பௌர ஜனங்கள் கூடியிருக்கின்றனர்).*

**ஸுப்பா நாயுடு:**—என்னுங்க ஸிரஸ்தார்காரு—இந்த வேளைக்கு எங்கள் எல்லாரையும் அழைப்பிச்சீங்களே! அது வந்து என்ன விஷயத்துக்கு—கொஞ்சம் சொல்றீங்களா?

**ரங்கைய ஸெட்டி:**—இது ஸர்க்கார் வ்யவஹாரமா-இல்லே ஸொந்த வ்யவஹாரமா—வரிகிரி யொன்னும் இல்லேயே கொஞ்சம் அது மாத்ரம் சொல்லுங்கோ.

**க்ருஷ்ண ராஜு:**—வரி கிரி இங்க்ர ஸங்கதி உங்களுக்கு என்னத்துக்கு—பரி கிரி ஒண்ணுமில்லேயே இண்ணு கேளுங்கய்யா.

**ரங்கைய ஸெட்டி:**—என்னுங்க ராஜுகாரு—நம்ப வார்த்தை இண்ணு உங்களுக்கு அத்தனை இளக்காரமாய்ப்பட்டதுங்க நமக்கென்னய்யா பயம். உங்க மாதிரி ராஜகுமாராளும் அவங்கமாதிரி ஸர்தார்களும் மெத்தைமேலே இருக்கவங்கள். அப்போ பரி கிரிக்கு என்னய்யா குறைச்சல் இருக்கும். நாங்கள் எல்லாம் என்னய்யா-அப்படியெல்லாம் மோசம் செய்தவங்க அல்ல, ந்யாயமா தம்படிக்கி தம்படி லாபம் ஸம்பாதிக்கிறவங்க—அவ்வளவுதான்.

**வேங்கட சாஸ்த்ரி:**—இருங்கோ அய்யா. அதெல்லாமில்லே-ஏதோ ஸந்தர்ப்பணமோ ஸமாராதனையோ இருக்கும். அநேகமாய் நவராத்ரி உத்ஸவம் ஸ்ரீராமர் ஆலயத்திலேயே நடக்கும் இன்னு சொல்றுள். தினம் ஒன்றுக்கு ஆயிரம்பேருக்கு ப்ராம்ஹண போஜனமும் தக்ஷிணை தாம்பூலமும்—

**ஸுப்பா:**—இந்த ப்ராம்ஹணருக்கு எப்போ பார்த்தாலும் போஜனமும் ஸமாராதனையும்தான்—வேறென்ன வேலே?

ஸிரஸ்:—என்னத்துக்கையா அவஸரப்படரீங்க! தஹஸீல்தார். அவர்களே வந்து நேரே ஸங்கதியைச் சொல்லுவார்கள். இதோ—

டபேதார்:—ஐயா எஜமான் அவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள். (ராமதாஸ் ப்ரவேசம். எல்லோரும் எழுந்து நிற்கிறார்கள்

ராமதாஸர் ஆஸனத்திலமர்ந்ததும் எல்லோரும் உட்காருகிறார்கள்)

ராம:—(ராமத்யானம் செய்து) ப்ரபுக்களே வந்தனம். கொஞ்சம் ஆலஸ்யம் ஏற்பட்டதற்கு நீங்களெல்லோரும் என்னை மன்னிக்கவேண்டும். உங்களை இங்கே அழைப்பித்த விஷயம் என்னவென்றால், ஸ்ரீராமசந்த்ரனுடைய ஆலயமண்டப நிர்மாணத்தைப்பற்றி ஆலோசிக்கவே. ஸ்ரீராம கைங்கர்யம் நம்மெல்லோருக்கும் அதி முக்யமான விஷயமல்லவா? இந்தப் பத்ராசலத்தில் ஸ்ரீ வைகுண்டநாயகன் லோகஹிதத்தை உத்தேசித்து ஸ்ரீ ராமமூர்த்தியாய் வந்திருக்கிறார். முன் மஹா பக்தர்களான தம்மல தம்மக்க என்பவர்களுக்கு ஸீதா ராம விக்ரஹங்கள் இந்த மலைமேல் கிடைத்தன. அவை களைக்கொண்டு இப்பொழுது ஜீர்ணமாயுள்ள ஆலயத்தை கட்டுவித்தார்கள். அந்த தேவாலயத்தை அநேக மண்டப ப்ராகாரத்துடன் பெரிதாகக்கட்டி அந்த பகவானுக்கு அலங் கார வாஹனவைபவங்களுடன் சிறப்பிவிக்கவேண்டுமென்று என் உத்தேசம். அதற்கு தங்கள் எல்லோருடைய அபிப் பிராயத்தையும் கேட்க விரும்புகிறேன்.

ங்:—இதுக்கெல்லாம் பணம் எங்கேயிருக்குதுங்க?

ராம:—நமது தாலுகாவிலுள்ள ப்ரஜைகளெல்லாம் ராம பக்தி யிருந்தவர்களே. அவர்கள் இந்த உத்தம கார்யத்திற்கு யதா சக்தி பணம் கொடுத்து மற்றும் உதவி புரிவார்கள் என்று நம்புகிறேன்.

ப:—ஏன் இதற்கு தாங்கள் இத்தனை தூரம் சொல்லவேண்டிய அவச்யமே இல்லை. நம்முடைய தாலுகா ப்ரஜைகளிலே ஒருவர் கூட இதிலே பின்வாங்கரவங்க இருக்கமாட்டாங்க.

ஆனாலும் ஜனங்களுக்கெல்லாம் இந்த ஸமாசாரம் எல்லாம் தெரியப்படுத்தி தனம் எல்லாம் சேர்த்து செய்யாதாயிருந்தால் சீக்ரமாய் வேலை முடியுங்களா—சில மாஸங்களாவது தாமஸமேற்படாதுங்களா?

ராம:—அதற்கென்ன-ஸர்க்கார்ருக்குச் சேரவேண்டிய வரிப்பணம் ஆறுலக்ஷம் வாரஹன் நம் தானாகாவிலிருக்கிறதல்லவா? முதலில் அதைக்கொண்டு வேலையை ப்ராரம்பம் செய்வோம், பின்னால் ப்ரஜைகளிடமிருந்தும் ப்ரபுக்களிடமிருந்தும் கிடைக்கும் தனத்திலிருந்து அதைப் பூர்த்திசெய்து கொள்ளலாம்.

ஸிரஸ்:—எஜமான் அவர்களுக்கு-நான் ஒரு ஸங்கதி தெரியப்படுத்திக்கொள்கிறேன். நான் தர்மகாரியத்திற்கு குறுக்குக் கட்டை போடுகிறேனென்று எண்ணக்கூடாது. தாங்கள் மிகவும் பரமார்த்தர்—பால்போல் கபடமில்லாத ஸ்வபாவமுள்ளவர்-லோகமெல்லாம் தங்களைப்போலவேயென்று எண்ணும் ஸ்வபாவம். இந்தக்கலியுகத்திலே அது ஸரியாகாது. நமக்குள்ளேயே நமக்கு கெடுதல்செய்ய எப்போது ஸமயம் வாய்க்கும் என்று காத்திருப்பவர் அநேகம் பேருண்டு. ஆகையால் ஸர்க்கார் பணத்தை சிலவு செய்வதற்கு முன்னதாகவே தானிஷா பாதுஷாகாருவின் அனுமதிபெறுவது உத்தமம் என்று விண்ணப்பம் செய்துகொள்கிறேன். தங்களுக்கும் ஸ்ரீ ராமர் நமக்கு வழிபடும் கடவுளேயல்லாது தானிஷா[illegible]ருக்கு அவ்வாறல்ல-ஆகையால் இதெல்லாம் கொ[illegible]க்க வேண்டும்.

ராம:—ஸிரஸ்தார்காரு அப்படியல்ல-நம்முடைய தானிஷாகாரு மஹமதியரானாலும் ஹிந்து மஹமதிய பேதம் என்பது சிறிதும் எண்ணாத பரம உத்தமோத்தமர்-தர்மபரிபாலகர். ஆகையால் அவர் இந்தக் கார்யத்துக்கு அபேக்ஷணையொன்றும் சொல்லமாட்டார் என்று நம்புகிறேன். அன்றியும் என் மாமன்மார்களும் அங்கிருக்கிறார்கள்—அவர்கள் முன் எவர் வார்த்தையும் செல்லாது. எப்படியிருந்தபோதிலும் கார்யம் ஆரம்பமானதும் தானிஷாகாருக்கும் விண்ணப்பம் செய்

கிறேன். எனது ஸ்ரீமஹ்ஸ்ரீகளுக்கும் எழுதுகிறேன். நீங்க ளெல்லோரும் இந்தக் கார்யத்தை உங்கள் ஸொந்தக்கார்யம் போல் பாவித்து வேண்டிய ஸஹாயம் செய்வீர்களென்று நம்புகிறேன்.

ஸ்ரஸ்:—என்னவோ! எல்லாவற்றிற்கும் அந்த ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்திதான் ஸஹாயம் செய்யவேண்டும்.

ரங்:—அதிருக்கட்டுங்க: இந்த ஆறு [illegible]க்ஷம் வராஹனுங்களும் ஜனங்களிடமிருந்து வஸூலாவது ஸரிதான். இல்லாவிட்டால் எப்படி?

ஸா.—ஸ்ரேஷ்டிகாரு அத்தைப்பத்தி உங்களுக்கு என்னத்துக்கு ஸந்தேஹம்? நான் ஒருவனே ரெண்டுலக்ஷம் வஸூல்செய்ய முடியும்.

ரங்:—ஆஹா-வாய்ப்பேச்சுக்கென்ன:சும்மா சொல்லலாம். செய்யும் போது தாமே தெரியும் கஷ்டம்.

ராம:—ஸ்[illegible]காரு நமக்கு இந்த ஸம்சயமேவேண்டாம், அப்போதைக்கப்போது அந்த ஸ்ரீ ராமரே நமக்கு வழிகாட்டுவார்—எல்லாம் அவர் கார்யமேயல்லவா? நம் ஒவ்வொருவருடைய ஸகல பாரங்களையும் வஹித்து நம்மெல்லோரையும் ரக்ஷிக்கும் அந்த பக்தவத்ஸலன் தன் ஸொந்தக்கார்யமான தன் தேவ[illegible] நிர்மாணபாரம் வஹிக்கமாட்டாரா? அவச்யம் வஹிப்பார். ஜய ஜய ராம் (எல்லோரும் ஜய ஜய ராம் என்கிறார்கள்). அப்படியானால் நீங்களெல்லோரும் இதற்கு ஸம்மதித்தீர்களென்றல்லவா?—

ல்லோரும்:—ஆம் ஆம் பூர்ண ஸம்மதம்.

ம:—[illegible]பஸ்ய சீக்ரம். இன்றோ நாளையோ நல்ல முஹூர்த்தம் [illegible]ர்த்து இந்த சுப கார்யத்தை ஆரம்பிப்போம். வாருங்கள், இப்பொழுதே நாம் எல்லோரும் தேவாலயத்திற்குச்சென்று வேண்டிய ஏற்பாடுகளுக்குப் பார்த்துவருவோம்.

(எல்லோரும் போகிறார்கள்).

---

## அங்கம்—II. காக்ஷி—6.

பத்ராசலம்

குப்பா சாஸ்த்ரி க்ருஹம்.

சே:—என்ன: நாம்ப வந்து ஒருமாஸமாச்சே கோபன்னகாரு ஒன்னும் சொல்லலியே—என்னமோ ரொம்ப ஸந்தோஷப் பட்டார்-அப்படி இப்படி இன்னு சொன்னீரே அவ்வளவுதானா? ஆகப்போற கார்யம் ஏதாவதுண்டா-ஒண்ணுமில்லேயோ?

கு:—என்னத்துக்குத்தான் நீ இப்படி அவஸரப்படறயோ-சொல்ரத்துக்குமந்தி!

சே:—நான் கூட ரண்டு மூணுதரம் கமலாம்பாளைப்போய்ப் பாத்துட்டுவந்தேன். நாம்ப இந்த ஊருக்கு வந்ததே ரொம்ப ஸந்தோஷமாச்சு இன்னாள். வேறே ஒரு இடத்திலே இருப்பானேன் நம்ம ஆத்திலேயே இருக்கப்படாதா இன்னு கூட சொன்னாள். ஆனால் நாம்ப வந்திருக்கிறது உத்யோகத்துக்குன்னு பந்துக்களோடே சீராடரத்துக்கில்லையே இன்னு மனஸிலே வைச்சுக்கிண்டு "அதுக்கென்னம்மா எல்லாம் உங்க பாக்யம்தான்" இன்னு சொல்விட்டுவந்தேன். நான் என்ன செய்யரது, உமக்குன்னா வேணும் ஸாமர்த்யம்.

கு:—என்ன-ஸாமர்த்யமில்லாதே-சும்மா சொல்றயே இதோ பார்—ராமதாஸகாரு வேலைக்கு உத்தரவு கொடுத்திருக்கார்.

சே:—(ஆவலுடன்) என்ன! உத்தரவு கொடுத்தாரா! என்ன உத்தரவு?

கு:—ப்ரஸ்துதம் குமாஸ்தா வேலைதான் காலியாயிருக்கு, அதிலே ப்ரவேஸிச்சா க்ரமேண பெரிய உத்யோகமாகும் இன்னு ரொம்பதூரம் சொன்னார். ஏதோ ஒண்ணு ப்ரவேசம் கிடைச்சா எல்லாத்துக்கும் நல்லதுதானே இன்னு ஸம்மதிச்சேன்.

சே:—அதுதான் ஸரி. நல்லவேலை செய்தீர்-ஆனால் ஒன்னு-இந்த உத்யோகம் வந்தது பெரிசில்லை, தஹஸீல்தாருக்கு முக்ய ஸ்நேகிதர் இன்னு, தாலூகாவிலுள்ள ஜனங்கள் எல்லாருக்கும் தெரியும்படி நடந்து கொள்ளணும். அப்படிச்செய்தா ஏதோ வரது வந்துதான் தீரும், நீர் மாத்ரம் அந்த கோபன்னு' காரு மாதிரி மடி கட்டிக்கொண்டும் மூக்கைப்பிடிச்சுக் கொண்டும் "ராம் ராம்" இன்னு உட்கார்ந்திருந்தால் போறாது. நாமோ பிள்ளைகுட்டிக்காரராள்—காயோ பழமோ அப்பப்போ வந்துண்டிருக்கணும். நம்மைப்போலொத்தவாளுக்கு லஞ்சம் பஞ்சம்தான் ஆதாரம். பக்திவழி பக்திதான்—புக்திவழி புக்திதான்.

கு:—நீ எல்லாத்துக்கும் கெட்டிக்காரிதான். உன் ஆலோசனையைக் கேக்றத்திலே ரொம்ப லாபமிருக்கு, அப்படியே செய்ரேன்—இன்னுங்கேள்—கோபன்னகாரு ஸ்ரீ ராமருக்கு கோவில் கோபுரம் எல்லாம் கட்டறார், அந்தப் பொறுப்பை எங்கிட்டேயே ஒப்பிச்சிருக்கார், அந்தக்கார்யம் பூர்த்தியாரவரைக்கும் வேறே ஒரு கார்யமும் பார்க்கவேண்டாமென்னுகூட சொல்லியிருக்கார்.

சே:—(ஆச்சர்யத்துடன்) அப்படியா? ஆனால் நமக்கு நல்ல காலம் தான்—ஸாமான்கள் வாங்கரத்திலேயும் வேலைக்காராளை வைக்கரத்திலேயும் மூணு செலவானால் நாலு ஆனதாய் கணக்கு எழுதணும், இல்லாப்போனா எல்லாரும் எப்படி லக்ஷாதிகாராளாயிடாரள்? அதிருக்கட்டும் இதுக்கெல்லாம் அவருக்குப் பணம் எங்கே இருந்துவரது, அந்த கோபன்னகாருக்கு?

கு:—ஸ்ரஹஸ்யமாய் ஸர்க்கார் பணமென்னு சிலபேர் சொல்றா, இன்னுஞ் சிலபேர் என்னமோ அக்கன்ன மாதன்ன பந்துலு அனுப்பிச்சா இங்கறா அது எப்படியிருந்தா நமக்கென்ன—

சே:—என்ன என்ன இது ரொம்ப முக்யமான விஷயமின்னா. உமக்கு தஹஸீல்தார் ஆகணும்இன்னு இருக்கோ அன்னோ? நீர் இந்த ரஹஸ்யம் ப்ரும்ஹாவுக்குக்கூடத் தெரியாமல் கட்டுதிட்

மாய் வேலெசெய்யணும். அந்த ரஹஸ்யம் தெரிஞ்சு எனக்கு அப்பப்போ சொன்னால் நான் வேண்டியபடி யோசனைசொல்றேன். இந்த விஷயத்திலே பஹுஸாஹஸம்வேணும் தர்மம் அதர்மம் இன்னு எல்லாம் பாத்தா ஸரிப்படாது. தீபம் இருக்கிறபோதுதானே தேடமுடியும்--இருட்டிலே முடியுமா?

கு:—(தலையைச் சொரிந்துகொண்டு) நீ என்னென்னவோ சொல்றாய்—நேக்கு ஒன்னும் புரியலேயே!

சே:—ஸரி சமையல்ஆச்சு சுருக்க போஜனத்துக்கு வாருங்கோ. பின்னாலே எல்லாம் ஸாவதானமாய்ச் சொல்றேன். (போகிருள். குப்பா சாஸ்த்ரி திகைத்து ஆலோசனையிலிருக்கிருர். சேஷம்மாள் திரும்பிப்பார்த்து "என்ன" என்று சொன்னதும்).

கு:—(திடீரென்று திரும்பி) ஸரி இதோ வந்துட்டேன் (என்று பின் தொடர்ந்து போகிருர்).

## அங்கம்-III. காக்ஷி-1.

---

தாணிஷாவின் அந்தரங்க அரை
தாணிஷா ஒரு ஆஸனத்திலமர்ந்திருக்கிருர்.
நாஜர்ஜங் என்ற மஹமதீய மந்த்ரி
பக்கத்தில் சில காகிதங்களுடன் நிற்கிருர்.

தா:—வஜீர்! ராஜகார்யங்கள் எல்லாம் ஸரிவர நிறைவேறி வருகின்றனவா- ஒருகுறையுமின்றி?

நா:—சித்தம் ஹுஜூர்.

தா:—எல்லா தாலுகாக்களிலிருந்தும் வரவேண்டிய கிஸ்து வஸூல் பாக்கியன்னியில் வந்து சேர்ந்துவிட்டதா?

நா:—(மௌனம்).

தா:—வஜீர் ஏன் மௌனம் ஸாதிக்கிறீர்?

நா:—(ஆத்மகதமாய்) இதுதான் நமக்கு நல்ல ஸமயம். (ப்ரகாச மாய்) ஸந்நிதான உத்திரவானுல் தெரியப்படுத்துகிறேன்.

தா:—ஏன்? அதில் எத்ாவது விசேஷமுண்டோ? சொல் சீக்ரம்.

நா:—எல்லா தாலூகாவிலிருந்தும் வரவேண்டிய கிஸ்துப்பணம் எல்லாம் பாக்கியில்லாமல் வந்து சேர்ந்துவிட்டது. ஆனுல் பத்ராசலம் தாலூகாவிலிருந்துமட்டும் ஒன்றும் வரவில்லை. எல்லாம் பாக்கிதான்.

தா:—என்ன! என்ன! இதுவரை ஒன்றும் வந்து சேரவில்லையா! அந்த ப்த்ராசலம் தஹஸீல்தார் யார்?

நா:—கோபன்னுவென்ற ராமதாஸ்: அக்கன்ன மாதன்ன அவர்கள் மருமகர்.

தா:—என்ன! அக்கன்ன மாதன்ன பந்துலு மருமகரா? அவர்கள் மிகுந்த யதார்த்த வாதிகள் அல்லவா? அப்பேர்ப்பட்டவர் களுக்கு இப்படி ஒரு மருமகன் எங்கிருந்து ஏற்பட்டான்? என்னவோ விசாரிப்போம்.

நா:—ப்ரபூ! நான் எல்லாம் விசாரித்தாய்விட்டது. குடிகள் எல் லோரும் பாக்கியில்லாமல் வரி செலுத்திவிட்டார்களாம். ஆனுல் அந்த வரிப்பணம் ஆறு லக்ஷம் வராஹன்களும் இந்த கோபன்னுவால் பத்ராசலத்திலிருக்கும் ஹிந்துக்கள் வழி படும் ஸ்ரீ ராமர் தேவாலயம் கட்டுவதற்குச் செலவுசெய்யப்பட் டனவாம். அதற்கு அதிகாரம் தானே எடுத்துக்கொண்ட தாகத் தெரியவருகிறது. ஹஜூருக்கு யாதொரு விக்ஞா பனமும் செய்யவில்லை; அங்கீகாரமும் பெற்றுக்கொள்ள வில்லை.

தா:—(யோசித்து) இந்த ஸங்கதி அக்கன்ன மாதன்னுவுக்கும் தெரியுமா?

நா: எனக்கென்னவோ அவர்களும் சேர்ந்தே இந்த ஆறு லக்ஷம் வராஹன்களையும் அபஹரித்திருக்கவேண்டுமென்று தோன்று கின்றது. இல்லாவிட்டால் இது ஸமயம் பார்த்து அவர்கள் அனுமதி பெற்றுப்போகவேண்டிய அவச்யம் என்னவோ!

தா:—அவர்கள் உத்திரவு வாங்கிப்போய் எத்தனை காலமாயிற்று?

நா:—ஆறுமாதங்களாயின.

தா:—வஜீர் எனக்கென்னவோ அவர்கள் அப்படிச் செய்பவர் களென்று தோன்றவில்லை; என்றாலும் நன்றாய்விசாரிப்போம்.

நா:—ஹுஜூர் இன்னும் என்ன விசாரிக்க வேண்டியதிருக்கிறது. இதில் ஸந்தேஹம்தான் ஒன்றுமில்லையே-பத்ராசலம் தஹஸீல் தார் கச்சேரியிலேயேயுள்ள ஒரு ப்ரமுக உத்யோகஸ்தர் வந் திருக்கிறார்; அவரேதான் எனக்கு இந்த ஸங்கதி தெரிவித் தார்—ஸந்நிதானத்திலேயே அவரை வரவழைத்து நேரில் விசாரிக்கலாம்.

தா:—அவன் யார் அவன்? உடனே வரவழை அவனை.

நா:—யாரங்கே! (ஒரு ஸேவகன்வர) அந்த குப்பா சாஸ்த்ரி யென்னும் ப்ராம்ஹணரை உடனே கூட்டிவா.

ஸேவகன்—சித்தம்.

(ஸேவகன் போய் குப்பா சாஸ்த்ரியுடன்வர-குப்பா சாஸ்த்ரி நன்றாய்க் குனிந்து ஸலாம் செய்தல்).

தா:—ஓய் ப்ராம்ஹணா நிஜம்சொல்லவேண்டும்; இல்லாவிட்டால் தலை போய்விடும்-ஜாக்ரதை-ஸர்க்கார் பணம் செலவுசெய்து உங்கள் தஹஸீல்தார் கோபன்னகாரு பத்ராசலத்தில் உங்கள் ராமர் ஆலயம் கட்டியிருக்கிறாரென்பது நிஜம்தானா?

கு:—நிஜம்தான் மஹாப்ரபூ! நான்தான் அவரது ஆக்ஞைப்ரகாரம் அந்த வேலையெல்லாம் செய்துமுடித்தேன். செலவு முழுதும் என் கையால்தான் பட்டுவாடா செய்யப்பட்டது. இதில்

அஸத்யம் சிறிதுமில்லை. இந்த விஷயமாய் கோபன்னுகாரு வைக் கேட்டாலும் சிலவு செய்யவில்லையென்று சொல்லமாட் டார். பிறகு ப்ரபு ஆக்ஞை.

தா:—(கோபத்துடன்) ஆனுல் இதற்கு நீயும் ஸம்மதித்துத்தா னிருந்தாயல்லவா?

கு:—(மிகுந்த பயவினயத்துடன்) மஹாப்ரபூ! என்மீது குற்ற மில்லை. நான் எத்தனை சொல்லியும் அவர் அதைப் பொருட் படுத்தவில்லை. அவரோ தஹஸீல்தார்-நானோ-அவர் கீழ் உத் யோகம் செய்யும் வேலையாள். மன்னிக்கவேண்டும்.

தா:—அடே! அந்த கோபன்னுவுக்கு அத்தனை நெஞ்சு தைர்யமா? ராஜபீதியென்பது கொஞ்சமும் இல்லாமற் போயிற்ரு?

கு:—ஸ்வாமி அவரது மாமன்மார் ப்ரதான மந்த்ரிகளாயிருக்க தனக்கு ஒரு பயமுமிருக்கவேண்டிய அவச்யமில்லையென்று அவர் தாத்பர்யம்போலும்.

தா:—ஸரி: அவரையும் அவரது மாமன்மார்களேயும் பார்க்கின் றேன் இனி.

நா:—ப்ரபூ இத்தகைய த்ரோஹிகளே உபேக்ஷிக்கலாகாது. கொஞ்ச மாவது கருணை காண்பிவித்தால் மற்ற உத்யோகஸ்தர்களும் இவ்விதமே செய்ய முற்படுவார்கள். அப்பொழுது தமது ப்ரபுத்வத்திற்கே மிகுந்த ஹானி ஏற்படும்.

தா:—இனிவேறே யோசனை எதற்கு? உடனே அந்த கோபன்னுவை அவரது ஸொத்துக்களுடனே இங்கே கொண்டுவருவாய்- நான்நேராய் விசாரிக்கிறேன். அன்றியும் அக்கன்ன மாதன்னு வின் ஸொத்துக்களேயும் ஜப்தி செய்துவை. இதற்கு எல்லாம் என் ஆஞாபத்ரம் எழுதியனுப்புவாய்—நான் வருகிறேன். (போகிருர்).

கு:—(போகும் வழியில்—) என்ன வஜீர்காரு என் ஸமாசாரம் ஒன்றும் நவாப்காரிடம் தெரியப்படுத்தவில்லையே!

நா:—ஓய் ப்ராம்ஹணு ஆத்திரப்படவேண்டாம். ஒவ்வொன்ருய் ஆகட்டும். இப்பொழுது அந்த அக்கன்ன மாதன்ன இவர்கள் தலைக்கு கல்போட்டாய்விட்டது. இனிமேல் நானேதான் ப்ரதான மந்த்ரி: இனி எல்லாவற்றிற்கும் நான்தான்: என் வார்த்தையின் மேல்தான் எதுவும் நடைபெறும்-நீர் ஒன்றும் பயப்படவேண்டாம்.

கு:—என்னவோ! ஞாபகமிருக்கவேண்டும்-ப்ராம்ஹணன் பிள்ளை குட்டிக்காரன்.

நா:—ஐயா, உமக்கு ஆகவேண்டியது என்ன? பத்ராசலம் தஹஸீல்தார் வேலைதானே?

கு:—அவ்வளவுதான் மஹாப்ரபூ. அதிகம் ஒன்றும் வேண்டிய

நா:—அது உமக்கு அவச்யம் செய்துவைக்கிறேன், போய்வாரும். (போகிருர்).

கு:—(கொஞ்சம் பொறுத்து) ஆஹா! இது என்ன-எவ்வளவு த்ரோஹத்துக்கு ஏற்பட்டுவிட்டேன். இது ஸரியாகுமா— (யோசித்து) ஆனல் என்ன செய்யாது-இந்த லோகத்திலே ஒருத்தர் கெட்டுப்போனலன்றி மற்ருருவர் ஸுகப்படுவது எப்படி? ஹும்! அவ்வளவுதான். (போகிருர்).

## அங்கம்—III. காக்ஷி—2.

---

ராமதாஸர் க்ருஹம்.

ராமதாஸர் ராமாயணம் படித்துக்கொண்டிருக்கிருர்.

கமலாம்பாள்-ரகுராமன் எடுத்துக்கொடுக்க

ரகு:—பிதா நம் ஸ்ரீ ராமசந்த்ரரின் குமாரர்களுக்கு குசலவர்கள் என்று ஏன் விநோதப் பெயரிட்டார்கள்?

ராம:—குமாரா வால்மீகி ஆச்ரமத்தில் ஸீதாதேவி அர்த்தராத்ரியில் ப்ரஸவித்தார்கள். பிறந்த குழந்தையை பூதங்கள் அணுகாதிருக்க அந்த வால்மீகி ஒரு தர்ப்பையை மந்த்ரோச்சாடனஞ்செய்து அதினால் ஒரு பாலகனை முதலுள்ள பாலகனுக்கு ஸஹாயமாய்ச்செய்தார். அதனால் தான் அவர்கள் குசலவர்கள் எனப்பட்டார்கள்.

ரகு:—அயோத்யாபட்டணம் விட்டு ஸீதாதேவி அரண்யத்தில் வால்மீகி ஆச்ரமத்தில் ஏன் ப்ரஸவிக்கச்சென்றார்கள்?

ராம:—ஸ்ரீ ராமர் அனுப்பிவித்தார்.

ரகு:—எதற்காக—

கம:—குமாரா-அதிருக்கட்டும்-நாதா ஸ்ரீ ராமர் ஸீதாதேவியைக் கொடுங்கானகத்திற்கு அனுப்பிவித்தது நீங்களும் ஸரியென்று சொல்கிறீர்கள்?

ராம:—ஸ்ரீ ராமர் மானவதேஹத்துடன் இருந்ததால் லோகாபவாதத்திற்கு பயந்து அப்படிச்செய்தார்.

கம:—நாதா பத்னியைக் காட்டிற்கு அனுப்பினதற்கு மாத்ரம் ஸ்ரீ ராமருக்கு லோகநிந்தை ஏற்படவில்லையோ?

ராம:—காந்தாமணி நீ சொல்வது நிஜமானாலும் ஸ்ரீ ராமர் செய்தது தீரனுடைய செய்கை. அவர் ப்ராக்ருத கர்மத்தை அனுபவித்தார்.

கம:—ஸ்ரீமந் நாராயணனுக்குமா ப்ராக்ருதம் நாதா?

ராம:—ஸ்ரீமந் நாராயணன் லோகபோதகர்: ஆகவே தானனுபவித்து ப்ரபஞ்சத்துக்கு காண்பிவித்தார். பூர்வ காலத்தில் தைத்யர்களுக்கு அபயம் கொடுத்து ஸ்ரீ ஹரியை திக்காரம் செய்த ப்ருகுபத்னியை சக்ரி ஸம்ஹரித்தார். அதனால் ப்ருகு மஹரிஷி மஹா கோபமடைந்து நாராயணனும் "மானவஜன்மமெடுத்து பார்யாவியோகமேற்பட்டு ஸந்தாபமடையட்டும்" என்று சாபம் கொடுத்தார். அது தீருவதற்காகவே மஹா லக்ஷ்மீஸமேதராய் ஸீதாதேவியாய் பூமியில்ஜன்மிக்கச்செய்து

ஸந்தாபம் அடைந்தார். யாருக்கானாலும் பூர்வ கர்மபலம் அனுபவித்தே தீரவேண்டும்-தப்பாது-வரப்போகும் ஸுக துக்கங்கள் நமக்குத் தெரிந்துவரா.

கம:—நாதா. இதுயென்ன-என் வலதுகண் துடிக்கின்றது! மனஸிலும் சொல்லொணாத ஸங்கடமுண்டாகிறது. ஒரு நாளும் இம்மாதிரியிருந்ததில்லையே. (பயமும் துக்கமும் அபிநயிக்கிறாள்).

ராம:—கமலா நிதானி—எல்லாவற்றிற்கும் அந்த ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தி இருக்கிறார். அவர் ரக்ஷிப்பார்-நாயனா ரகுராமா நேற்று உனக்கு ஒரு புதுப்பாட்டு கற்பித்தேனல்லவா? அதை உன் தாய்க்குப் பாடிக்காண்பி.

(ரகுராமன் பாடுகிறான். பாடிமுடியும் ஸமயம் பல்வந்த்ராவ் இரண்டு ஸிப்பாய்களுடன் ப்ரவேசம், கமலாம்பாள் ஒதுங்கி நிற்கிறாள்).

பல்:—ராமதாஸ்நாரு நமஸ்காரம். இந்த ராஜ ஆக்ஞையைப் பாருங்கள். (ஒரு காகிதத்தைக் கொடுக்கிறார்).

ராம:—(அதை வாங்கி வாசித்துப்பார்த்து) பலவந்த்ராவ்காரு-இந்த ஆறு லக்ஷம் விஷயமாய் நான் தானிஷா பாதுஷா காருக்கு முன்னதாகவே விக்ஞாபனம் அனுப்பியிருந்தேனே.

பல்:—அதெல்லாம் எனக்குத் தெரியாது—பணம் கொடுக்கவேண்டும்; இல்லையேல் சிறைப்பட ஸித்தமாயிருக்கவேண்டும்.

ராம:—என் கையில் பணம் எங்கே இருக்கிறது? சிறைப்பட ஆயத்தமாயிருக்கிறேன். ஆயினும், இந்த ஆக்ஞாபத்ரம் மஹா மந்த்ரிகளான அக்கன்ன மாதன்ன பந்துலு அவர்களும் இருந்தே அனுப்பப்பட்டதா?

பல்:—அவர்கள் ஊரிலில்லை. தீர்த்தயாத்ரைக்கென்று ஆறுமாதத்திற்கு முன்னேயே உத்தரவுபெற்றுப் போயிருக்கிறார்கள். அவர்கள்மீது கூட நவாப்காருக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டிருக்கிறது.

ராம:—எதற்காகவோ?

பல்:— அதெல்லாம் எனக்கொன்றும் தெரியாது. வீண்வார்த்தையால் ஆவதொன்றுமில்லை. இந்த ராஜ ஆக்ஞைக்குத் தாம் என்ன சொல்கிறீர்?

ராம:—ஐயா! நான் சொல்வது என்ன! தாம் அவச்யம் ராஜ ஆக்ஞையை நிறைவேற்றலாம்.

பல்:—(ஸிப்பாய்களுக்கு கண்ஜாடைசெய்ய அவர்கள் உடனே ராமதாஸருக்கு விலங்கிட்டு இருபக்கமும் நிற்கிறார்கள்).

கம:—(ராமதாஸரின் காலில்விழுந்து) நாதா நீங்கள் ஸ்ரீ ராமருக்குச் செய்த ஸேவாபலம் இதுதானா? அய்யோ! அந்தத் தைவத்துக்கும் கண்ணில்லாமற் போயிற்றே? அனவரதமும் ராமத்யானம் செய்து பழகும் உங்கள் கைக்கும் விலங்கா! நிரந்தர ராமத்யான பரவசமாயுள்ள உங்கள் தேஹத்துக்கும் நிர்ப்பந்தமா! புண்யவான் என்று பெயர் பெற்ற அந்த தானிஷாகாரு ப்ரபுத்வம் எப்படி அதர்ம ராஜ்யமாய் மாறி விட்டது! நாதா அந்த ராஜபடர்கள் தங்களை என்ன அவஸ்தைக்குள்ளாக்குவார்களோ? ஸ்ரீ ராமனை நம்பி தாங்கள் தேஹ அர்த்த ப்ராணமெல்லாம் ஒப்பிவித்தீர்களே! எல்லாம் இப்பொழுது என்னவாயிற்று!

ரகு:—(பல்வந்தராவுக்கு) ஐயா என் தந்தை நிரபராதி—வேண்டுமானால் என்னைக்கொண்டு போங்கள்.

ராம:—குமாரா காந்தா "எந்தவேளைக்கு எது வருமோவென்று நமக்குத் தெரியாது" என்று இப்பொழுதுதானே சொல்லிக்கொண்டிருந்தேன். வருவது வந்துதான் தீரும்; அனுபவிக்காமல் தப்ப முடியாது. ப்ரபஞ்சத்தில் துக்கங்கள் க்ஷணநேரத்திற்குத்தான்—ஸுகங்களும் அவ்வாறே. வீணாய் ஸ்ரீ ராமனை நிந்திக்காதே. ஸ்ரீ ராம ஸேவாஸுக்ருத பலமொன்றுதான் ஸ்திரமானது. ஆனால் அதற்குக் காலம் வரவேண்டும். இந்த விலங்குகளைப்

பார்த்து நீங்கள் என் ப்ரலாபிக்கிறீர்கள்? எமபாசத்தை கண்டங்கண்டமாய்த் துண்டிக்கும் ஸ்ரீ ராமமந்த்ரத்துக்கு முன் இந்த விலங்குகள் எம்மாத்ரம். (பாடுகிறார்).

(உடனே திடீரென்று விலங்குகள் தெரித்து வீழ்கின்றன).

பல்:—(ஆச்சர்யப்பட்டு) ஸ்வாமி தங்கள் மஹிமை அமானுஷ்ய மானது. தங்களுக்கு விலங்குபோட்ட பாபம் என்னைச் சேர்ந்ததல்ல—ராஜ ஆக்ஞையை நிறைவேற்றினேனேயன்றி வேறில்லை. என்னை க்ஷமிக்கவேண்டும். (நமஸ்கரிக்கிறார்).

ராம:— பல்வந்தராவ்காரு—நீர் என்ன செய்தீர். உம்மீது தப்பு ஒன்றுமில்லை. எல்லாம் எனது கர்மபலம்—காந்தா குமாரா வ்யஸனியாதீர்கள். நான் இல்லையென்று ஸ்ரீராம ஸேவையை மட்டும் மறவாதீர். ஸ்ரீராமன் எப்படியும் நமக்கு அனுக்ரஹம் செய்வார். சீக்ரம் திரும்பிவந்து காண்பேன் உங்களை. பல்வந்தராவ்-போகலாம் இனி.

கம:—நாதா உங்களைவிட்டு நான் எப்படித்தனதிருப்பேன். நானும் கூடவே வருகிறேன். (வ்யஸனிக்கிறாள்).

ரகு:—நாயனு நானும் வருகிறேன்கூட (அழுகிறான்).

ராம:—(கைகூப்பி பத்ராசலமலையைப்பார்த்து) பத்ரகிரிமேல் ஸிம்ஹாஸனத்திலிருந்து சதுர்தச புவனங்களையும் பரிபாலிக்கும் ஸத்தர்ம சக்ரவர்த்தி ஸ்ரீ ராமசந்த்ரமூர்த்தி நமஸ்காரம். உனக்கு நான் ஸேவைசெய்தது ஒரு அபராதம் என்று தானிஷா ராஜா என்னைச் சிறைப்படுத்தி சிக்ஷிக்கிறார். நான் போகிறேன். (பாடிக்கொண்டு போகிறார். பல்வந்தராவும் ஸிப்பாய்களும் கூடவே போகிறார்கள்).

கம:—நாதா நாதா (என்று கீழ்வீழ்ந்து மூர்ச்சையாகிறாள்).

ரகு:—அம்மா அம்மா (என்று ஸமாதானம் சொல்கிறான்).

(திரை விழுகிறது)

## அங்கம்-III. காக்ஷி-3.

*தானிஷா தர்பார்—மஹமதிய மந்த்ரிகள் ப்ரபுக்கள் பௌரவர்கள். எல்லோரும் வீற்றிருக்கின்றார்கள்.*

சோப்தார்:—*அல்லாஹோ அக்பர்-குதாவந்த் கரீப் பர்வர் பாதுஷா நைஜாம் தானிஷா ஸாஹேப்கா ஸவாரீ ஆதாஹை ஹுஷி யார்-ஹுஷியார்.*

(*தானிஷா ப்ரவேசம். எல்லோரும் எழுந்து வணங்கி நிற்கிறார்கள். தானிஷா பாதுஷா ஆஸனத்திலமர்ந்ததும் எல்லோரும் தத்தம் ஆஸனங்களில் உட்காருகிறார்கள். நர்த்தனம் - உடன் ஆரம்பிக்கிறது-முடிந்ததும்*).

நாஜர்:—*ஸன்னிதான உத்தரவு ப்ரகாரம் பத்ராசலம் தஹஸீல்தார் ராமதாஸரை கைதிசெய்து கொண்டு வந்திருக்கிறோம். ஹுஜூர்வாரு ஸந்நிதிக்குக் கொண்டுவர ஆக்ஞையை எதிர் பார்க்கிறோம்.*

தா:—*ஸரி! கொண்டுவாட்டும்.*

நா:—(*பல்வந்த்ராவுக்கு ஸைகைசெய்ய பல்வந்த்ராவ் போய் ராம தாஸருடன் திரும்பி வருகிறார்*).

ராம:—*தானிஷா பாதுஷாகாருக்கு என் அனந்தகோடி நமஸ் காரம்.*

தா:—*ஐயா! ராமதாஸ்காரு. நீர் பத்ராசலத்தில் உங்கள் ராமர் தேவாலயம் கட்டியிருப்பது நிஜந்தானா?*

ராம:—*ஆம் நிஜமே.*

தா:—*நிஜமே! ஆனால் அதற்கு எத்தனை தனம் சிலவு ஏற்பட்டது?*

ராம:—*எட்டு லக்ஷம் வராஹன்.*

தா:—*எட்டு லக்ஷம் வராஹன்! அத்தனை தனம் உமக்கு எங் கிருந்து கிடைத்தது?*

ராம:—இரண்டு லக்ஷ வராஹன் பக்தர்கள் ஸந்தா வஸூலாயிற்று. மிகுந்த ஆறு லக்ஷம் பத்ராசலம் தாலூகா கிஸ்து வசூல்.

தா:—அந்த ஆறு லக்ஷம் யாருடையது?

ராம:—ஸ்வாமி ஸர்க்காரைச்சேர்ந்ததே.

தா:—யார் அனுமதிபெற்று அத்தனை தனத்தையும் சிலவு செய்தாய்? ராஜத்ரவ்யம் என்று உன்மனதில் எள்ளத்தனையும் தோன்றவில்லையல்லவா?

ராம:—ஹஜூர்வாருக்கு விக்ஞாபனம் எழுதியனுப்பியே சிலவு செய்தேன்.

தா:—விக்ஞாபனம் அனுப்பினையா? நாஜர்ஜங் எங்கே அந்த விக்ஞாபனம்?

நா:—ஹஜூர்! அப்படி ஒன்றும் வரவில்லையே!

தா:—ஸரி இருக்கட்டும்—விக்ஞாபனம் அனுப்பினையென்றே வைத்துக்கொள்வோம்: ஆனால் அதற்கு நான் ஸம்மதித்து அனுமதி கொடுத்தேனா?

ராம:—மஹாப்ரபூ—இது தர்மகார்யமானதால் ஸன்னிதானத்தில் அவச்யம் அனுமதியேற்படும் என்று நம்பி முன்னதாகவே சிலவு செய்துவிட்டேன். அதில் நான் ஒன்றும் கெட்ட கார்யம் செய்யவில்லையே: ஏன் என்பேரில் உக்கண்டமான கோபம்கொள்கிறீர்கள். நான் செய்த வேலையினால் தங்களுடைய கீர்த்தியை இந்தப் பூமண்டலம் முழுதும் பரவச்செய்தேன்: அவ்வளவே.

தா:—என் கீர்த்தியை பரவச்செய்தாயா! நல்லது. இந்த விஷயத்தில் உன்னை என் ப்ரதானியாக நியமித்தது யார்? என் தொகை முழுதும் இப்பொழுதே என்னிடம் ஒப்புவித்து விட்டு வேறு கார்யம் பார்.

ராம!—மஹாப்ரபூ ஏன் இப்படி என் மீதில் கோபம்? அப்படிப் பட்ட கார்யம் நான் என்ன செய்துவிட்டேன்: நான் சிலவு

செய்திருக்கும் ஆறு லக்ஷம் தனம் ஸந்நிதானத்தில் பிரதான நகரில் ஒரு தினம் நடக்கும் சிலவுக்கு ஸமானமாகுமா?

தா:—அடே ராமதாஸ்! என்ன ஸாஹஸவார்த்தையடா இது? இப்படி என்னை ஸ்தோத்ரம் செய்தமாத்ரத்தில் உன்னைச் சும்மா விட்டுவிடுவேன் என்று எண்ணினையா! அடே அன்ன மிட்ட வீட்டில் கன்னம்வைத்த த்ரோஹியல்லவா நீ? நீ செய்த ராஜத்ரோஹத்திற்குத் தலைபோகும்என்று கொஞ்சமும் ஆலோசிக்கவில்லையா?

ராம:—ஹா ஜா-ஹர் தேஹம் புத்புத்ப்ராயமாயதே தவிர ஸ்திரமாயிராது. பக்தி பாரவசம்கொண்டு பத்ராசல ராமனையும் உம்மைப்போலவே ஒரு ப்ரபுவென்று அவ்விதம் செய்தேன். வேறு ஒன்றுமில்லை. மன்னிக்கவேண்டும்.

தா:—சீ துன்மார்க்கா வாய்மூடு! ராஜனுகிய நம்மை ப்ராணஹீனமாயுள்ள கற்சிலையோடு ஸரிஸமானமாய்ப் பேசுகிறுயா? அந்தக்கற்சிலையைப்போல் எனக்குங்கூட புத்திக்கூர்மை சூன்யம் என்று எண்ணினையா?

ராம:—ப்ரபூ-என்ன! நம் ராமனை கற்சிலையென்று எண்ணினீர். இதென்ன இப்படி-எந்த பகவான் மானவாவதாரத்தில் ஸகலதாராதரமண்டல சக்ரவர்த்தியாய் தர்மபரிபாலனம் செய்தாரோ—எந்த பகவானின் நாமஸ்மரணமாத்ரத்தினுல் ஸர்வ பாபங்களும் பரிஹரிக்கப்படுமோ—எந்த ஸர்வேச்வரனை ஸேவிப்பதினுல் ஸர்வாபீஷ்டங்களும் ஸித்தியாய் கைவல்ய பதவியும் கிட்டுமோ—எந்த லோகரக்ஷகன் ப்ரபஞ்சமெல்லாவற்றையும் போஷிக்கின்றுனே—எந்த தானசீலன் தமக்கும் இந்த ராஜ்ய பாக்யமெல்லாம் அளித்து தம்மையும் ஆனந்திக்கச்செய்கிறுனே-அந்த ஸ்ரீ ராமனை, ச்ருங்காரவிலாஸனை பூஜனீயனை கற்சிலையென்கிறீர்களே! தம்போலுள்ள ஞானவான்கள் இங்ஙனம் சொல்லலாமா?

தா:—அடே உன் ராமனை நீ இத்தனைதூரம் புகழ்கின்றாயே-அவன் உனக்கு இந்த ஆறு லக்ஷம் தனமும் இப்பொழுது கொடுக்க முடியுமா?

ராம:—ஹா-ஜ-ஸர். இதென்ன இப்படி உத்தரவு ஆகிறது! விலையில்லா மோக்ஷ ஸாம்ராஜ்ய பதவியை அளிக்க வல்ல நமது ரகுராமனுக்கு இந்த ஆறு லக்ஷம் ஒரு பெரிதா? வேண்டுமானால் தாங்கள் உத்தரவு அளித்தால் நான் இப்பொழுதே பத்ராசலம்போய் என் ராமனிடம் கேட்டு வாங்கிவருகிறேன்.

தா:—அடே ராமதாஸ் இதென்னடா வார்த்தை-ராமனும் இவன் கையில் ஆறு லக்ஷம் தனமும் எண்ணிக்கொடுக்கப்போகிறானும்-அதை நான் நம்பி இவனை பத்ராசலம்போக விடைகொடுக்க வேண்டுமாம். அடேடே! அப்படியே தப்பித்துக் கொண்டு ஓடிவிடலாமென்று ஆலோசனையோ? அதெல்லாம் நடக்காது நீ இப்பொழுதே என் ஆறு லக்ஷம் வராஹனையும் கொடுக்கிறாயா? இல்லையேல் கடின சிக்ஷைக்குட்பட்டு ப்ராணனை விடுகிறாயா — இதன்றி வேறுமார்க்கம் இல்லை. என்ன சொல்கிறாய்?

ராம:—மஹாராஜ் நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது. எப்படியும் ஸ்ரீ ராமர் கொடுக்கமுடியும் என்பதே என் நம்பிக்கை-பிறகு சித்தம்.

தா:—ஸரி. உன் பைத்யக்கூத்து எல்லாம் இனிபோதும். அடே-உன்னை இப்பொழுதே இந்தக் கட்கத்திற்கு பலிகொடுப்பதே முறையானாலும் உன்னைப்போன்ற ராஜத்ரோஹியை அத்தனை ஸுலபமாய்க் கடைத்தேறவிடக்கூடாது. நாஜர்ஜங் இவனை இப்பொழுதே கொண்டுபோய்க் காராக்ருஹவாஸம் செய்வித்து கடின சிக்ஷைக்குட்படுத்திச் சாகடிப்பாய். கொண்டுபோ சீக்ரம்.

ராம:—ஹா: ராமசந்த்ரா! (திரைவிழுகிறது).

## அங்கம்—III. காக்ஷி—4.

---

கோல்கொண்டா காராக்ருஹம்.

(ராமதாஸர் காராக்ருஹத்தினுள் இருக்கிறார்—
இரண்டு பாரா ஜவான்கள் காவலிருக்கிறார்கள்).

ரஹீம்:—அரே இதென்னடா ஷைத்தான்கு இர்க்ரான். இந்த ராமதாஸ்கு அடிக்கருன் நம்பள் காலமேபுடிச்சு—ஒரே பீடையாவந்திருக்குது நம்பள்கி. அரேரே இதென்னடா இது! ராத்ரியில்லே—பகலில்லே—தூக்கமில்லே—சோறுஇல்லே கஞ்சியில்லே—தாகமில்லே—அரேரே காது புளிச்சுபோருன் ஒரே ராம் ராம் சொல்ருன்!

உஸ்மான்:—ஆமாம் பாய்! அந்தப் பாழும் பொம்மன்கு புடிச்சிருக்றபீடை நம்பள்கு ப்ராணன் போறப்போலேஇருக்குது! நம்பள்குகூட தூக்கம் இல்லாதே சாவடிக்கிருன் பாய். என்ன செய்ரது?

ரஹீம்:—செய்ரதென்ன கிய்ரதென்ன! எல்லாம் நம்ப கிராசாரம் அப்படி இருக்குது. காலமே புடிச்சு பாதி ராத்ரிவரைக்கும் ஒரே பேச்சு சொல்ரான் அய்யா! அந்தப் பாழும்பேச்சு-'ராம் ராம்' இன்னு. அடிச்சாலும் இல்லே, பிடிச்சாலும் இல்லே, ஒதைச்சாலும் இல்லேஇன்னு—என்னசெஞ்சாலும் கூட ஒண்ணுமில்லேன்னு. அரே அல்லா அவன்கி த்ரேஹம் என்ன கல்லுத்ரேஹமா? 'ஆ' இல்லே 'ஊ' இல்லே 'வலி' யில்லே கிலியில்லே 'அம்மா' இல்லே 'அப்பா' இல்லே எல்லாம் அந்த 'ராம் ராம்' தான் இண்ணு.

உஸ்:—அரே. அவனை சும்மாவுடக்கூடாது—வா கிட்டிபோட்டு கொரடாலே அடிச்சு ரத்தம்பீறிடாப்போலே செய்யணும். அப்போ அந்த ராமன் என்ன செய்யான் பாக்கலாம்.

ரஹீம்:—ஆமாம் வா-அவனை இஸ்துவாலாம். (உள்ளே போய் ராமதாஸை விலங்குடன் வெளியில் கொண்டுவருதல்).

உஸ்:—அரே பொம்மன்-உனக்கு வேலைகொடுத்தா ஸர்க்கார் பணமெல்லாம் எடுத்து கல்லுக்கு தோலுக்கு கொடுக்கச்சொன்னுங்களா! இப்போ எங்கடா இருக்கிறாரு உன் ராமன்? (அடிக்கிறார்கள்).

ராம:—ஹரா! ராமா!

ரஹீம்:—எங்கேடா ராமன் (இன்னும் அடிக்கிறார்கள்).

ராம:—ஹரா! ராமா, பட்டாபிராமா! இந்த அடி பொறுக்கமுடியவில்லையே! (அவர்கள் இன்னும் அடிக்கிறார்கள்). ராமசந்த்ரா சின்ன ப்ராயமுதல் என்னைப்பெற்ற தந்தை நீயே யென்று இடைவிடாமல் நித்ரையிலும் உன்னை மறவாது அனவரதமும் உன்சரண ஸேவாரக்தியுடனிருக்கின்றேனே! நீ யளித்த இந்தக்ஷணபங்குரதேஹமும் ஸர்வாங்கங்களுடன் உன்மங்களகர ஸேவா ஸாங்கத்ய பரவசத்தையே நாடுகின்றதே. (இன்னும் அடிக்க அடி பொறுக்கமாட்டாமல் மூர்ச்சையடைகிறார்).

உஸ்:—அரே பாய் பீடைபோச்சு அப்பா: இனிமேலிக்கு ராம் ராம் சொல்லமாட்டான் நம்ப போய் கொஞ்சம் படுத்துக்கலாம் வா. (போகிறார்கள்).

(ராமதாஸர் மெல்ல எழுந்திருந்து)

ராம:—எதுவரை தான் ஸஹிப்பேன்?

இன்னும் என்றுதான் எனக்கு அனுகூலம் ஏற்படுமோ? எத்தனை தூரம் கதறியழுது விண்ணப்பம்செய்தும் காதுகொடுக்காதிருந்தால் எப்படி-நீ யிப்படியிருக்க காரணம் ஏதாவதுண்டா! என்னைக்காக்க உன்னைவிட எனக்கு வேறுதிக்குண்டா இந்த ஸமயத்தில் ஹே ஜானகீரமணா? ராமா உனக்காக நான் என்ன கஷ்டப்பட்டேன், எவரையெல்லாம் வேண்டிக்கொண்டேன்? எவ்வெவரை ஆச்ரயித்தேன், எவ்வளவு அபகீர்த்தியையடைந்தேன் மேலும்கடனாளியுமானேனே! தானிஷாகாரு தனத்தில் அரைக்காசும் என்குடும்ப ஸம்ரக்ஷணைக்கு உபயோகம்செய்யே-எல்லாம் உன் ஆலயத்திற்கும் மண்டபத்திற்

கும் வாஹன அலங்காரவைபவங்களுக்குமே ஸமர்பித்து ஆனந்தித்தேன். ஏன் இத்தனை நிர்த்தயை உனக்கு? மஹாத் ஐச்வர்ய ஸம்பன்னனுகிய உன் அந்தஸ்துக்குத் தக்கவாறே கைங்கர்யம், நடத்தியிருக்க நீமட்டும் என்னை அதற்கேற்றபடி நடத்தாததேன்? ஸர்வஉபசாரங்களுக்கும் ஏற்றபடி ஏற்பாடுகள் செய்தேன். இது எல்லாம் உனக்குக்கூட அபராதம் என்று தோன்றுகிறதா? நீ மனம்வைத்தால் ஸ்வர்ணமழை பெய்யச்செய்வது கஷ்டமா! இந்த ஆறு லக்ஷம் எல்லாம் உனக்கு த்ருணமாத்ரம் அல்லவா? என்னை ரக்ஷிக்கவாராததேனே? ஏன் மௌனமாயிருக்கிறுய்?'

(கொஞ்சம் யோசனை அபிநயித்து வினயத்துடன்) ஆஹா! இன்னமும் உனக்கு கருணையேற்படவில்லையல்லவா? ஸகல லோகங்களும் உன்னில் இருக்கின்றனவென்றும் நீயும் அவைகளில் இருக்கின்றுய் என்றும் ச்ருதிகள் முறையிட என் செவிகள் ஆஹ்லாதம் அடையக் கேள்வியுண்டு. அப்பேர்ப்பட்ட நீ காப்பாற்றுவிட்டால் வேறு யார்தான் காப்பவர்? சரணம் என்று உன்னையே யடைக்கலம் அடைந்திருக்கிறேன். அளவு கடந்த ப்ரேமையை வேறு எந்த இடத்தில் நான் காண்பிவிப்பேன்? சரணுகத ரக்ஷக பிருதுடையவனென்று அல்லவா உன்னைச் சரண்புகுந்தேன். நான் உனது சொத்து என்பது நிஜமானுல் என் பாபங்களனைத்தையும் உடன் நிவிர்த்திப்பாய். ரக்ஷிக்கும்பதியென்று உன்னையே நான் நம்பியிருக்க சிக்ஷிப்பதற்கு நான் என்ன தப்புதான் செய்தேன்? என்னைக் காப்பாற்றுவதற்கு உன்னைக்காட்டிலும் அதிபதி யார்? பெற்ற தந்தையாகிய உனக்கு என்னைக் காப்பாற்றுவதற்கு கருணை ஏன் உண்டாகாது—கரீ ப்ரஹ்லாத விபீஷணுதிகளை ரக்ஷித்தாய் என்று கேள்வியுண்டு. அப்படியிருக்க என்னை ரக்ஷிப்பதற்குமட்டும் சக்தியில்லையா? உன்னைத்தவிர நான் வேறெவரையும் அறியேனே! நீயேதான் எனக்குகதி—கோபம் செய்யலாகாது. பாமரன் என்று என்னைத் தள்ளிவிடக்கூடாது. நான் எத்தனை அபராதியானுலும் க்ஷமித்து ரக்ஷிப்பாய். "ராமர் ரக்ஷகர்-ரகுராமனை நம்பினுல்—இனி பயமில்லை—இனிக்கவலையில்லை—எது வந்தாலும் ரகுஸ்வாமியதுகீர்த்தி-ஸத்யமிது ஸத்யம்" என்று உன்னையே நம்பியிருக்கிறேன்—ஜானகீபதி.

(ஆலோசித்து கொஞ்சம் பொறுத்து நிர்த்தாக்ஷண்யமாய்)

ராமா-ராமசந்த்ரா-என் நம்பிக்கையையெல்லாம் வ்யர்த்த மாக்குகின்ருயா—காப்பாற்ருது உபேக்ஷிக்க நான் செய்த அபராத மென்ன சொல்லுவாய். எனது பத்து விரல்களுக்கும் ரத்னம் பதித்த உங்குரங்கள் கேட்டேனு! அல்லது ஸால்வைகள் பாகை கள் அங்கிகள் அங்கவஸ்த்ரங்கள் விரும்பினேனு! உனது கால் சிலம்பு கஜ்ஜைகளை இச்சித்தேனு-தானகங்கணத்தைத்தான்யாசித் தேனு? இல்லையே. நீ ஏன் எனக்கு தர்சனம் கொடுக்கமாட்டாய்-நான் என்ன மிகவும் கடினசித்தமுடையவனு? இதோ சொல் கிறேன் கேள். என் கடனைத் தீர்க்காமற்போனுல் உன்னை நானினி விடமாட்டேன். அடியெடுத்துவைக்கவும் ஸம்மதியேன். அடிக்கடி திரும்பத்திரும்பக் கேட்டேன். கேட்டுக்கேட்டுச் சலித்தேன். இனி நான் பொறுக்கமாட்டேன். என் ஹ்ருதய கமலத்தில் உன் ம்ருது பாதங்களை அந்த மஹா பக்தன் ஸஹாதேவன்போல் நானும் கட்டிவைப்பேன் இந்த க்ஷணத்தில். தீனஜனனென்று என் கோரிக்கையை ஈடேற்ருவிட்டால் இன்னும் ஸாக்ஷிவைத்து இன்றே வேறுமார்க்கங்களால் என் கார்யத்தை ஸாதித்துக்கொள் வேன். இன்னும் என்னை மோசம் செய்யமுடியாது—நானும் மோசம்போகேன். உனது ஆக்ஞை யெல்லாவற்றிற்கும் 'ஸரி ஸரி' யென்று தலையசைக்க நான் அந்த ஹனுமான் அன்று. துரிதமாய் உன் வலையில்சிக்க அந்த விபீஷணனுமன்று. "பொறு பொறு" என்ருல் பொறுக்க அந்த முசுகுந்தனுமன்று. ஆகையால் என் ரணத்தைத்தீர்த்தே பிறகு நீ அடியெடுத்துவைப்பாய் (கொஞ்சம் யோசித்து) ஆஹா அறிந்தேன் அறிந்தேன்! இப்பொழுது அறிந் தேன். உன்னை நம்பி நான் அதமனைவிட அந்யாயமாய் அவல மானேன். நீ நிஜமாய் என் ராமனல்லபோலும். அப்படியிருந் தால் என்னை இவ்வாறு உபேக்ஷிப்பாயா! முன்னெருநாள் கஷ் டங்களை அனுபவித்திருக்கும் அந்த ராமர் என்னைக் கஷ்டப்பட ஸம்மதிப்பாரா! கல்லைப்பெண்ணுக்கிய ராகவன் ரக்தியுள்ள பக் தனைக் காப்பாற்ருதிருப்பாரா! ஸேதுபந்தனஞ்செய்த தீர ராமன் ஸீதாராமன் சரணுகதி யடைந்தவனைக் கைவிடுவானு?

கஜபதியைக் காப்பாற்றிய அவர் நிஜதாஸனைக் காப்பாதிருப்பாரா? (கொஞ்சம் யோசனையை அபிநயித்து வ்யஸனத்துடன்) இது என்ன இப்படி நான் பிதற்றினேன். அய்யய்யோ! பாமபாதகனு மானேன்! என்னப்பனை என்னென்ன கடிந்த வார்த்தைகள் ஆடினேன்—அவர் கருணாமூர்த்தி! ராமா-ராமா—மன்னிப்பாய்-ரக்ஷிப்பாய். உன்னைத்தவிர எனக்கு அன்யதைவமுண்டா? நீயே ராமன். நீ தான் ஜகதபிராமன்—நீ தான் ஜானகீரமணன்—கல்யாணராமன்-உன்னையன்றி வேறு ராமர் எனக்கில்லை-ராமா-ராமா-ரகுராமா-ரகுநந்தன-ரகுநாயக-ரகுகுலதிலகா—

(ஸ்தோத்ரம்செய்து முடிந்ததும்-திரைவிழுகிறது).

## அங்கம்—III. காக்ஷி—5.

தானிஷா அந்தப்புரம். தானிஷாவும் அவரது பத்னிகள் சம்பா மோஹனா இருபக்கமும் இருக்க நித்ரையிலிருக்கிறார். (ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் ஸிப்பாய்களாகப் ப்ரவேசம்).

ஸ்ரீரா:—தம்பி லக்ஷ்மணா-இது தான் தானிஷாவின் சயனக்ருஹம் போலும். இந்த அந்தப்புரத்திற்குள் யாருமறியாதபடி இத்தனை தூரம் வந்துவிட்டோம்: ஆயினும் இனி அம்மாதிரிப் போவது ஸரியல்ல. ஆகையால் தானிஷாவை முதலில் இங்கிருந்தே எழுப்புவோம்.

லக்ஷ்:—தானிஷா ராஜ—கதவு திறவுங்கள். கதவு திறவுங்கள். (கொஞ்சம் பொறுத்து கதவு திறக்கப்படாததுகண்டு) அண்ணா-தானிஷா கதவு திறப்பதாகக்காணோம்; ஆகவே நாமே தான் கதவைத் திறக்கவேண்டும்போலும். (கதவைத் தொடுகிறார்-கதவு திடீரென்று திறக்கின்றது. இந்த சப்தம் கேட்டு தானிஷா நித்ரை நீங்கி படுக்கையில் அங்குமிங்கும் புரளுகிறார்).

ஸ்ரீரா:—தானிஷா ராஜ் எழுந்திருங்கள். ராமதாஸர் தமக்குக் கொடுக்கவேண்டிய பணத்தைக் கொண்டுவந்திருக்கிறோம். பணத்தை பெற்றுகொண்டு சீக்ரம் ரஸீது கொடுங்கள்.

தா:—(ஆச்சர்யத்துடன் எழுந்து) சம்பா சம்பா யார் என்னைக் கூப்பிட்டது யார்.

ச:—(எழுந்து அந்தப்புரம் முழுதும் சுற்றிப்பார்க்கிறாள்-ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் அவள் கண்ணுக்குப் புலப்படவில்லையாகையால்) யாரையும் காணோமே-ஸ்வப்னம் கண்டீர்களா என்ன? சயனித்துக் கொள்ளுங்கள்.

(போய் சயனித்துக்கொள்கிறாள்).

தா:—அதோ நிற்கிறார்களே இருவர்: (எழுந்து முன்வந்து) ஆஹா! என்ன ஸௌந்தரம்! என்னதேஜஸ்-இவர்கள் யாராயிருக்கலாம்? அதிலும் இந்த அர்த்தராத்ரியில் என் அந்தப்புரத்திற்குள் எப்படி வரமுடிந்தது இவர்களால்? காவல்படர்கள் தான் என்ன ஆனார்களோ தெரியவில்லையே! (ஸ்ரீராமரைப் பார்த்து) அய்யா தாம் யாரோ-தயை புரிவீரா? எந்த தேசத்தில் வஸிப்பவரோ-எங்கிருந்து இங்கு ப்ராப்தமானீர்களோ?

ஸ்ரீ ரா:—புண்ய பாவனையான கோதாவரி தீரத்தில் நாமிருப்பது—எங்கள் வாஸஸ்தலம் பத்ராசலம் என்பார்கள்.

தா:—தங்களைப் பார்த்தால் ஸிப்பாய்களாகக் காணப்படுகிறீர்கள். தாங்களும் யாருடைய ஜவான்களோ—எவரால் அனுப்பப்பட்டு வந்திருக்கிறீர்களோ?

ஸ்ரீ ரா:—தாஸர்களுக்கெல்லாம் நாங்கள் ஜவான்களே! தற்சமயம் ராமதாஸர் விஷயமாய் அனுப்பப்பட்டு வந்திருக்கிறோம்.

தா:—நீங்கள் ராமதாஸர் ஜவான்களா? ஸரி அதிருக்கட்டும், தாங்கள் எந்தக்குலத்தைச் சேர்ந்தவர்களோ—தங்களிருவருக்கும் என்ன பாந்தவ்யமோ?

ஸ்ரீ ரா:—நாங்கள் ஸூர்யவம்சத்தில் ஜனித்தவர்கள். நாங்களிரு வரும் அண்ணன் தம்பி முறையாவோம்.

தா:—தாங்களிருவரும் அண்ணன் தம்பியா! நாமதேயம் அறிய லாமோ—தங்களது நியமம்தான் என்னவோ?

ஸ்ரீ ரா:—ராமோஜி லக்ஷ்மோஜி என்பார்கள்: ராம அனுஜமதத்தைச் சேர்ந்தவர்கள்.

தா:—ஸரி-அதிருக்கட்டும். என்ன கார்யமாக உங்களை அனுப்பி வித்தார்கள்? நீங்கள் வந்த கார்யமென்ன—சொல்லுங்கள் தயைசெய்து.

ஸ்ரீ ரா:—ஸர்க்கார் பாக்கிப்பணத்தை எங்கள் கையில் ஒப்புவிக்க நாங்கள் அதைக் கொண்டுவந்திருக்கிறோம்.

தா:—அப்படியானால்—அந்த அர்த்தம் முழுமனும் கொண்டுவந் திருக்கிறீர்களா? இல்லையேல்—வீணாய்—வ்யர்த்தமாய் காலங் கழிக்க உத்தேசமோ?

ஸ்ரீ ரா:—ஆறு லக்ஷம்வராகன்களையும் எண்ணி ஸரிபார்த்துக்கொள் ளுங்கள், உடனே எங்களுக்கு ரஸீதும் கொடுத்தனுப்புங்கள். நாங்கள் ஏன் இத்தனை தூரம் பணமில்லாமல் வ்ருதாவாய் காலம் கழிக்க வருகிறோம்? இதோ பாருங்கள்-தம்பி லக்ஷ்மணா அந்த தனமெல்லாம் எண்ணி ஒப்புவிப்பாய்.

லக்ஷ்:—தானிஷாராஜ் இப்படி வாருங்கள்-உங்களுடைய தனம் எல்லாம் எண்ணிக்கொள்ளுங்கள் (தன் துவாலையை உதர அதிலிருந்து பணம் குப்பல் குப்பலாய் வீழ்தல்).

தா:—(ஆச்சர்யப்பட்டு) அரே அல்லா! இதென்ன ஸ்வர்ணமழை பெய்கிறதா அல்லது இவையெல்லாம் இந்த்ரஜாலம் தானோ! யோசித்தால் இவையெல்லாம் மாயாதனமேயல்லாது நிஜமான தனமில்லையென்று தோன்றுகிறது. ஆதலால் நான் பொழுது விடியும்வரை நம்பமாட்டேன்: அதுவரை ரஸீதும் கொடுக்க மாட்டேன்.

ஸ்ரீ ரா:—தானிஷாராஜ் நாங்கள் அப்படியெல்லாம் மோசம் செய்பவர்களன்று-தைர்யமாய் ரஸீது எழுதுங்கள்.

தா:—நீங்கள் இந்த்ரஜாலக்காரர்கள் என்பதற்கு ஸந்தேகம் சிறிதுமில்லை. இல்லாவிட்டால் சிறுவர்களாகக் காணப்படும் உங்களுக்கு இத்தனை தனம் எப்படிக்கிடைத்தது! அதுவுமல்லாமல் கதவு மூடப்பட்டிருக்கும் அரைக்குள் உங்களால் எப்படி வரமுடிந்தது. ஆகவே அவச்யமாய் நான் விடியும்வரை நம்பமாட்டேன்.

ஸ்ரீ ரா:—ஆஹா! தானிஷா நீங்கள் எங்களை நம்பாதபோனாலும் நாங்கள் உங்களை நம்பி இத்தனை தனத்தையும் விட்டுப் போகிறோம்: நாளையே பொழுது விடிந்ததும் ரஸீது எழுதி ராமதாஸருக்கு அனுப்புங்கள். நாங்கள் போகிறோம். (ராம லக்ஷ்மணர்கள் மறைகிறார்கள்).

தா:—நீங்கள் போகாதீர்கள்—நீங்கள் போகாதீர்கள். (பின்தொடர்ந்து செல்ல அவர்களைக் காணாமல் வருத்தத்துடன் திரும்புதல்). ஆஹா! இருந்தாற்போலிருந்து காணாமற் போய்விட்டார்களே! (கொஞ்சம் ஆலோசித்து) இதெல்லாம் பார்த்தால் வந்தவர்கள் ஸாமான்யரல்லர் என்றே தோன்றுகிறது. யாராயிருக்கலாம் இவர்கள்! ராமதாஸரின் ஜவான்கள் என்றார்களே! பாபம்! சிறையில்பட்டு அவஸ்தைப்படும் அந்த ராமதாஸருக்கு ஜவான்கள் எங்கிருந்து ஏற்பட்டார்கள்: அவர்கள் தம் பேர் என்னவென்றார்கள்? (ஞாபகப்படுத்த முயன்று) முதலவர் ராமோஜி-இரண்டாவதவர் லக்ஷ்மோஜி; ராமோஜி லக்ஷ்மோஜி, லக்ஷ்மோஜி, ராமோஜி. ஆஹா! தெரிந்தது தெரிந்தது—இப்பொழுதுதான் தெரிந்தது. ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களல்லவா?

ஆஹா! என்ன அந்த ராமசந்த்ரனின் பக்தவாத்ஸல்யம். தன் பக்தனைக் காப்பாற்றுவதற்கேயல்லவா இந்த அர்த்தராத்ரியில் வந்து இத்தனை தனமும் கொண்டுவந்து கொடுத்துப்போயினர். என்ன அந்த ராமதாஸரின் பக்தி விசேஷம்தான்! அய்யோ நான்எவ்வளவுஅக்ஞானியானேன்!

கையிற்கிடைத்த சிந்தாமணியைத் தப்பவிட்டேனே! என்னைப் பெற்ற தந்தையை அத்யந்த பக்தியுடன் ஆதரிக்காமல் ஸேவிக்காமல் பூஜிக்காமல் த்யானிக்காமல்—பாகவத அபசாரத்தோடு பகவத் அபசாரமும்கூட ஏற்பட்டுவிட்டதே! நான் என்ன செய்வேன் இதற்கு? (அங்குமிங்கும் சுற்றிப் பிதற்றுகிறார்).

(இந்த சப்தம் கேட்டுக் கண்விழித்த சம்பா மோஹனு முன்வருதல்-நாதனுக்கிருபக்கமும் வந்து நின்று)

சம்:—நாதா இது இன்ன இப்படிப் பிதற்றுகின்றீர்கள்?

தா:—சம்பா-மோஹனு-நான் என்னவென்று சொல்வேன். இப்பொழுதுதான் ஸ்ரீ ராம லக்ஷ்மணர்கள் வந்து ராமதாஸர் கொடுக்கவேண்டிய தனமெல்லாம் கொடுத்துப்போனுர்கள். அய்யோ! அப்பொழுது அவர்கள் ஸ்ரீ ராம லக்ஷ்மணர்கள் என்று அறியாமற்போனேனே!

மோ:—ஆமாம்—ஆமாம். இதென்ன விசித்ரம்—ராமராம் வந்தாராம்-எப்படி வந்தார்? தைவம்போலே வந்தாரா-அல்லது பூதம்போலே வந்தாரா?

சம்:—அதிருக்கட்டும்—நாதா! நானும் விழித்துக்கொண்டேதானிருந்தேனே, நான் ஒருவரையும் காணவில்லையே! ஒன்றும் காதிலும் கேட்கவில்லையே! நீங்கள் மாத்ரம் எப்படிப் பார்த்தீர்களோ! உங்களுக்கென்னவோ மதிப்ரமை ஏற்பட்டிருக்கிறதுபோலும்.

தா:—சம்பா-இதோபார். இந்த தனக்குவியலை—இதுவும் மதிப்ரமைதானே?

சம்:—(நாணயங்களைப்பார்த்து ஆச்சர்யமடைந்து) ஆமாம் பார் மோஹனு-இதோ இந்த தங்க நாணயங்களை-இவை எப்படி வந்ததோ இங்கே: நாம் சயனித்துக்கொள்ளும்பொழுது இந்த தனராசி இங்கில்லவேயில்லையே! இப்பொழுது மாத்ரம். எப்படி வந்ததோ தெரியவில்லையே!

மோ:-அதென்னவோ எனக்குத்தெரியாது. ஆனாலும் தானென்ன- தைவமாவது என்ன! வர்ரதாவது என்ன! உங்களுக்கும் நாத னைப்போல் மதிப்ரமையுண்டாயிருக்கிறதுபோலும்.

சம்:—(நாணயங்களைப் பரீக்ஷித்துப்பார்த்து) நாதா இவையெல் லாம் ஸ்ரீராம மொஹராக்கள் அல்லவா! பத்ராத்ரி ஸ்ரீ ராமலக்ஷ் மணர்களே இங்கு வந்திருக்கவேண்டும்-அய்யோ நான் இத் தனை நிர்ப்பாக்யளானேனே! அவர்களது ஸேவை எனக்கு லபிக்காமற்போய்விட்டதே. (பணத்தைக் கண்ணில் ஒற்றிக் கொள்கிறாள்). அல்லாஹோ அக்பர்!

மோ:—அக்கா இதென்ன! உனக்கும் ஹைந்தவப்பிசாசு பிடித்து விட்டதா என்ன! சீக்ரம் வைத்யர்களை வரவழைக்கவேண்டி யதுதான்.

சம்:—தங்காய் வீண் வார்த்தைவேண்டாம். பகவான் ஒருவரே யென்று அறிவாய். நாமெல்லாம் அல்லாவென்று பூஜிக் கிறோம். ஹிந்துக்கள் ஸ்ரீ ராமர் என்றும் லக்ஷ்மணர் என் றும் சிவம் என்றும் ஆயிரம் பேர்வைத்து பஜிக்கிறார்கள். நமக்கு குரான்ஷெரிப் பக்திக்ரந்தம்போல் அவர்களுக்கு வேதோப நிஷத்துக்கள் இருக்கின்றன. இந்த நிசிவேளையில் இத்தனை தனமும் கொண்டுவந்து கொடுத்து சிறைபிலுள்ள தன் பக்தனை காப்பாற்றமுற்பட்டவர் "அல்லாபர்வர்தீர்" அன்றி வேறொருவராயிருக்குமா! அவச்யம் ஸ்ரீ ராமரே வந்திருக்கவேண்டும்.

தா:—சம்பா-உன் வார்த்தையே நிஜம், நான் இந்த ரஹஸ்யம் தெரிந்துகொள்ளாமல் பரம பாகவதரான ராமதாஸரைச் சிறையிலிட்டு எவ்வளவு எல்லாம் பாதைக்குள்ளாக்கினேன்! நானிப்போதே சென்று அவர் பாதத்தில் வீழ்ந்து க்ஷமா பனத்தைக் கோருகிறேன். (வெறிபிடித்தவர்போல ஓடுகிறார். சம்பா மிகுந்த ஆனந்தமடைந்தவளாய் பின் தொடர்கிறாள். மோஹனா ஆச்சர்யமும் கவலையுமடைந்தவளாய் அந்தப் பக்கமே பார்க்கிறாள். திரைவிழுகிறது).

## அங்கம்-III. காக்ஷி-6.

---

*கோல்கொண்டா—காராக்ருஹம்.*

*ராமதாஸர் மூர்ச்சையாய்ப் படுத்திருக்கிறார்—பக்கத்தில் ஒரு கிண்ணம் வைக்கப்பட்டிருக்கிறது.*

ராம:—(மெல்ல மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து) ராமா! நான் எத்தனைதான் உன்னை வேண்டிக்கொள்வேன். இன்னும் எப்படிவேண்டினால்தான்உனக்கு கருணைஏற்படுமோ? யோகமோ அறியேன்! யாகமும்செய்து ஹவிர்ப்பாகமீந்து அறிய நான் எவ்வளவு சக்தியற்றவன்! இன்னும் உனக்கு கருணைஏற்படாதல்லவா? உன்கருணை ஏற்பட்டு என் பாதைகளைத் தீர்க்காத போனாலும் நான் இந்த விஷபானத்தினாலாவது என் பாதைகளைத் தீர்த்துக்கொள்வேன். என்னை மன்னிப்பாய். என்னைப் பெற்ற தந்தையே! ஸ்ரீ ராமசந்த்ரா இதுதான் கடைசிமுறை இந்த ஜன்மத்தில் உன்னை நான் ஸ்மரிப்பது (ஸ்தோத்ரம் செய்து) ஸ்ரீ ராமா—ரகுநந்தன என்னை மன்னிப்பாய். (கீழிருக்கும் பாத்ரத்தை எடுத்துப்பார்த்து அதில் விஷமில்லாதிருப்பதுகண்டு மிகவும் கவலையும் வருத்தமும் கொண்டவராய்) இது என்ன இது! இந்தப் பாத்ரத்திலிருந்த விஷம் என்ன ஆயிற்று? பாரா ஜவான்கள் இதையெடுத்துக் கொட்டிவிட்டார்களோ? இருக்காதே—நான் எவ்வளவோ வேண்டி வருந்தினபிறகேயல்லவா அவர்களே இதை எனக்குக்கொண்டு வந்துகொடுத்தார்கள். வேறுயார் இங்குவந்து போயிருப்பார்கள்? ஐயோ! அந்த ஸ்ரீ ராமருக்குத்தான் கருணை ஏற்படாத போனாலும் போகட்டும்-ம்ருத்யுதேவா உனக்குமா என் மேல் தயை என்பது இல்லாமல் போய்விட்டது! ஆஹா! இனி எனக்கு கதியாருண்டு? (என்று அங்குமிங்கும் ஓடி ப்ரலாபிக்கிறார். அது ஸமயம் தானிஷா வேகமாய் ஓடிவந்து ராமதாஸரின் காலில்வீழ்ந்து நமஸ்கரிக்கிறார். ராமதாஸரும் தன்னை மறந்து அவர் முன்விழுந்து நமஸ்கரிக்கிறார். இருவரும் மெல்லயெழுந்து ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்கின்றனர்).

தா:—ராமதாஸுகாரு நான் மஹா அபராதியானேன். உமது நிர்மல பக்தியையறியாது உம்மை எவ்வளவோ ஹிம்ஸைப் படுத்தித் தொந்தரவுக்குள்ளாக்கினேன். மனம் நோகச்செய்தேன்-என்னை மன்னியும்! மன்னியும்! எனக்குகொடுக்கவேண்டிய கடன் எல்லாம் தீர்ந்தது—இதோ ரஸீது அங்கீகரியுங்கள்.

ராம:—(அதைப்பார்த்து) மஹாராஜ். தாங்கள் சொல்வது ஒன்றும் எனக்குத் தெரியவில்லையே! என்ன! ஸ்ரீ ராம லக்ஷ்மணர்கள் பணம் எல்லாம் செலுத்தினார்களா? எப்படி! எப்படி!

தா:—ஐயா! ராமதாஸுகாரு நேற்றிரவு எனது சயனமந்திரமணுகி நித்திரையிலிருக்கும் என்னை எழுப்பி என் ஆறுலக்ஷம் தனத்தையும் கொடுத்துப் போயினர்.

ராம:—ஆஹா! ஸ்ரீராம லக்ஷ்மணர்களே நேரில்வந்து தமக்கு தர்சனம் அளித்தார்களா? எவ்வளவு புண்யாத்மா தாம். (நமஸ்கரிக்கிறார். தானிஷா அவரைத் தூக்கி எழுப்புகிறார்).

தா:—இல்லை இல்லை: நான் மஹாபாபி—அவர்களது திவ்யஸுந்தராகாரங்களைக்கண்டு திக்ப்ரமையடைந்தேனேயல்லாது அவர்கள் ஸர்வேச்வரர்கள் என்ற ஞானம் ஏற்படவில்லையே! கையார அவர்களை அர்ச்சிக்கவும் ஆசைதீர அவர்களை ஸேவிக்கவும் புத்தியில்லாமற் போயிற்றே! அக்ஞானம் மேலீட்டால் ப்ரமையடைந்திருந்தேனே! ஆதலால் தாம் இப்பொழுது எனக்கு மறுபடியும் அவர்களைக் காண்பிக்கவேண்டும்.

ராம:—(ஆத்மகதமாய்) ராமா-ராமா—இவையெல்லாம் ஆலோசித்தால் நீயே இங்கேயும் வந்து நான் பானம் செய்யாதிருக்க இந்த பாத்ரத்திலிருக்கும் விஷத்தையும் கொட்டிப்போயிருக்க வேண்டும்: அவ்வளவு மாத்ரம் உன்கருணை ஏற்பட்டதேயல்லாமல் உன் தர்சனம் எனக்கு லபிக்காமற் செய்தனையே. (தானிஷாவைப்பார்த்து ப்ரகாசமாய்) அய்யா ஸ்ரீ ராமர் தமக்கு தர்சனம் அளித்தாரேயன்றி எனக்கு அந்தமட்டும் பாக்யம் லபிக்கவில்லையே. அப்படியிருக்கத் தமக்கு அவரை

எப்படி நான் காண்பிக்கமுடியும். தாமே தான் அவரை எனக்கு காண்பிக்கவேண்டும்.

தா:—ராமதாஸாகாரு இதென்ன இப்படி என்னைப் பரிஹஸிக்கின்றீர்! ஸ்ரீ ராமர் எனக்குத் தர்சனம் அளித்தது தமக்காகவேயல்லவா? இல்லாவிட்டால் அவர் என்னை கடைக்கண்ணும் பார்க்கத் தகுந்தவனா நான்? உமது ராமர் கொண்டுவந்து கொடுத்த அந்த ஆறு லக்ஷத்தில் அரைக்காசுகூட நான் தொடமாட்டேன்—எல்லாம் அந்த ஸ்ரீ ராமருக்கே ஸமர்ப்பித்துவிட்டேன். அதுவுமின்றி பத்ராசலம் தாலூகாவையே அவர் ஆலயத்திற்கு சாச்வதஜாகீராயும் கொடுத்துவிட்டேன்-தாமும் திரும்ப பத்ராத்ரி தஹஸீல்தார் பதவியை ஸர்வாதிகாரத்துடன் ஸ்வீகரித்து ஸ்ரீ ராம ஸேவையைச் செய்துகொண்டிருங்கள், எனக்கு ஸ்ரீ ராமருடைய தர்சனபாக்யம்மட்டும் செய்வித்து என்னை உத்தாரணம்செய்து ரக்ஷிக்கவேண்டும். கருணைசெய்து காண்பியும் நீலமேகச்யாமனை.

ராம:—தானிஷாகாரு தாம் உத்தமோத்தமர்: தமது ஆதிக்யத்தை ஸ்ரீராமரே ஸ்பஷ்டமாய் பஹிரங்கப்படுத்திவிட்டார். ஆகவே அவர் அவச்யம் தமது கோரிக்கைகளை நிறைவேற்றுவார். வாருங்கள் போவோம். நாமெல்லோரும் பத்ராத்ரிக்குச் சென்று அவரை வேண்டிக்கொள்வோம்.

தா:—தன்யனானேன்-தன்யனானேன்! வாருங்கள்—போவோம் இப்படியே (என்று அவஸரமாய்ச் செல்கிறார். ராமதாஸரும் பின் தொடர்கிறார்).

## அங்கம்—III. காக்ஷி—7.

(பத்ராசலம் ஆலயம். தானிஷாவும் மந்த்ரிகளும், ராமதாஸர் அர்ச்சகர் ப்ராம்ஹணர்கள் மற்றும் பௌர ஜனங்கள் கூடியிருக்கின்றனர். மூலஸ்தானத்திற்கு முன்னிருக்கும் திரையெடுத்ததும் அர்ச்சகர் தீபாராதனம் செய்கிறார்—முடிந்ததும்).

ராம:—தானிஷாகாரு அதோ பாருங்கள் ஸ்ரீ ரகுநாதனை (என்று விக்ரஹங்களைக் காண்பிக்கிறார்).

தா:—ராமதாஸ் காரு இது என்ன! இந்த ப்ராணரஹிதமான விக்ரஹங்கள் எனக்கெதற்கு?

ராம:—தானிஷாகாரு. தாம் தன்யராகுமாவதால் என்னப்பன். ஸ்ரீராமசந்த்ரமூர்த்தியின் தர்சனம் தமக்கு லபிக்கப்போ-நாமோ அந்த பாக்யத்திற்கு இன்னும் அர்ஹனல்லன்-ஆகவே இந்த நிர்ப்பாக்யனாகிய நான் தமக்கு அந்த தேவதேவனை மனோஹரமங்களமூர்த்தியை ஞானநேத்ரத்தை எப்படியும் காண்பிப்பேன். தாமே வேண்டிக்கொள்ளும் அவனை.

தா:—அது எல்லாம் எனக்குத் தெரியாது. உமது ராமனைத் தெய்வமாய் எனக்கு காண்பிக்காதபோனால் இப்படியே—இங்கே தானே என் ப்ராணனைவிடுகிறேன் நான்-இது நிச்சயம்.

ராம:-ஹா ஜகந்நாதா! ரகுநாதவனமாலா! கருணாலவாலா! எனக்காக இல்லாதபோனாலும் உனது பக்தன் இந்தத் தானிஷா உன்னை எப்படியும் பார்க்கவேண்டுமென்று கோருகிறார். தர்சனம் கிடைக்காவிட்டால் தான் ப்ராணத்யாகம் செய்வதாகவும் சொல்கிறார். ஆகவே இன்னும் தாமதமின்றி தர்சனம் அவருக்குக் கொடுத்து எங்களிருவரையும் ரக்ஷிப்பாய்—உத்தாரணம் செய்வாய். (ஸ்தோத்ரம் செய்கிறார்கள் தெய்வமாய்-உடனே விக்ரஹத்திலிருந்து ஸ்ரீ ராம லக்ஷ்மண ஸீதா தேவிகள் ப்ரத்யக்ஷமாய் அவர்களுக்கு காக்ஷி கொடுக்கிறார்கள்).

ராம / தானி :—ஆஹா! ஆஹா! பாக்யம்! பாக்யம்! தன்யோஸ்மி! தன்யோஸ்மி! இன்று எங்கள் ஜன்மம் க்ருதார்த்தமாயிற்று.

ஸ்ரீ ராமர்:—(ஆசீர்வதித்து) தானிஷா, ராமதாஸ் நீங்கள் உங்களுடைய கர்மபலத்தை நிவர்த்திசெய்தீர்கள். இனி உங்களுக்கு ஸர்வ மங்களமுமுண்டாகுக.

(மங்களம்)

பென்ட்லெண்ட் பிரஸ், பாளையங்கோட்டை—1933.

Triplicane
16th December 31.

It gave me real pleasure to go through your "Ramadasar"

Piety coupled with the humour of a life long dramatist is seen throughout the work.

N. A. Sundram Ayyar,
District Inspector
of Local Fund Accounts.

Post Box 367 Madras.
14—1—32

I have read "Ramadasar" by Mr. K. S. Sankara Ayyar. In a simple style the author has given an original touch to the old Puranic story. The drama is well adapted to the modren stage. I wish the author all success in his attempt.

P. N. S. Ayyar
(of Messrs P. N. S. Ayyar & Co.)

Mr. K. S Sankara Ayyar has dramatised in Tamil the well known Puranic Story of Ramadas in an excellent manner, very well adapted for the South Indian stage and I have read it with great interest. He has followed the telugu version of the story and that is only natural and even proper as the scene is laid in the Telugu Country.

Mr. K. S. Sankara Ayyar is a well known enthusiast in the field of Drama and is an actor of reputation. He has been devoting much of his spare time to the production of dramatic works and I wish him all success in the line.

P. RAJAGOPALACHARI,
Sub-Judge.
4—11—1932.

## அபிப்ராயங்கள்.

**இந்தியா—21—12—31**

இது எளிய நடையில் வெகு தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. பக்திரஸம் ததும்பும் சிறந்த நாடகம். ஸ்ரீராமபக்தர்களுக்கு மாத்திரமன்றி நாடகப்பிரியர்களுக்கும் மிக்க முக்கியமானது. பள்ளிக்கூடங்களில் பாடமாக வைக்க ஏற்றது.

**சுதேசமித்திரன் 22—12—31**

ராவ் பகதூர் சம்பந்தமுதலியார் எழுதியுள்ள முகவுரையில் இந்நூலில் ஆசிரியர் சில இடங்களில் தமது சாதுர்யத்தைக் காட்டியிருப்பதாகச் சொல்லியிருக்கிறார். நாடகங்களுக்கு அவசியமான ஹாஸ்யம் முதலிய ரஸங்கள் யுக்தமான அளவுக்குட்பட்டு காணப்படுகின்றன. தமிழ்நடை சுலபமானதாக இருக்கிறது. சிறைச்சாலையில் ராமதாஸர் பகவானை நினைந்து புலம்பல் மிகவும் உருக்கமாக இருக்கிறது. ராமதாஸ் சரித்திரத்தை நாடக மேடைகளில் நடிப்பதற்கு இந்தப் புஸ்தகம் மிகவும் உபயோகப்படும். பள்ளிக்கூடங்களில் இசைப்பாட புத்தகமாக உபயோகப்படுத்தும்படி "டெக்ஸ்டு புக் கமிட்டி" அங்கீகரிப்பது உசிதமாக இருக்கும்.

---

எனது நண்பர் ப்ரும்ஹ ஸ்ரீ கே. எஸ். சங்கரய்யரவர்கள் இயற்றியிருக்கும் "ராமதாஸர் சரித்திரம்" என்ற நாடகத்தை வாசித்து ஸந்தோஷமடைந்ததுடன் ஸ்ரீவிவேக ஸம்வர்த்தனீ ஸபையின் வருஷாந்த உத்ஸவதினத்தில் சுருக்கமாகவும் மற்றுமிரண்டு தினங்களில் விரிவாகவும் அவர்கள் முகமாவே ஸங்கீதத்துடன் வாசிக்கக்கேட்டு ஆனந்தித்தேன். படிப்போரின் மனப்பரிபாகத்திற்கு எவ்வித ப்ரயோஜனமுமன்னியில் பொழுது போக்குக்குமாத்திரம் புஸ்தகங்கள் கணக்கன்னியில் எழுதப்பட்டுவரும் இந்நாட்களில் பகவத்சரித்திரங்களையும் பாகவத சரித்திரங்களையும் எளிய தமிழ் நடையில் எழுதி பாமரர்களுக்கும் வித்வான்களுக்கும் ஸந்தோஷமளித்து பக்தி புகட்டக்கூடிய இம்மாதிரி புஸ்தகங்கள் விலையற்றதாகும். அதிலும் வசனரூபமாய் அச்சிட்ட புஸ்தகத்திற்கும் ஹாவபாவ விலாஸங்களுடன் த்வனி ஸ்வாஸ்யத்துடன் அபிநயித்துக் காட்டப்படும் நாடகத்திற்கும் உள்ள வித்யாஸம் சித்திரத்தில் எழுதிய மலருக்கும் கொடியில் மலர்ந்து மணம் வீசும் மல்லிகைக்குமுள்ள வித்யாஸத்திற்கே ஒப்பாகும். ஆகையால் இச்சரித்திரத்தையும் இதுபோன்ற நமது நண்பர் எழுதியுள்ள மற்ற அபூர்வ சரித்திரங்களையும் நன்கு ரஸிக்க நாடகமேடையில் நல்ல நடிகர்களைக்கொண்டு நடித்துக்காட்டினால் நேத்திரத்திற்கும் மனதுக்கும் ஆனந்தமும் தருவதுடன் பக்திமேலிட்டு ஈச்வரப்ரஸாதமேற்படவும் ஹேதுவாகும்.

திருநெல்வேலி
3—11—33

ஆர். க்ருஷ்ணஸ்வாமி அய்யர்,
எம். ஏ. பி. எல்.

# SRI KRISHNA THULABHARAM

(A TAMIL DRAMA)



BY

K. S. SANKARA AYYAR,
(L. F. Audit, Tinnevelly)

WITH FOREWORDS
BY

**Sir. T. N. Sivagnanam Pillai, Kt.**

AND

**The Hon'ble Diwan Bahadur**
**S. Kumaraswami Reddiar,** B. A. B. L.,
(Education Minister to the Government of Madras).



FIRST EDITION] [PRICE 8 AS.

PENTLAND PRESS, PALAMCOTTAH.

# ஸ்ரீக்ருஷ்ண துலாபாரம்

அல்லது

# பக்தி மஹிமை

[ஒரு தமிழ் நாடகம்]



திவான் பஹதூர்

ஸர். டி. என். சிவஞானம்பிள்ளை அவர்கள்,

ஆனரபிள் திவான் பஹதூர்

எஸ். குமாரஸ்வாமி ரெட்டியார் அவர்கள், பி.எ. பி.எல்.,

(சென்னை கவர்ண்மெண்டு கல்வி மந்திரி)

முன்னுரைகளுடன்

திருநெல்வேலி லோக்கல் பண்டு ஆடிட்,

திரு. கே. எஸ். சங்கரய்யரால்

எழுதப்பட்டது.

முதற் பதிப்பு]          [விலை: அணா எட்டு.

பென்ட்லென்ட் பிரஸ், பாளையங்கோட்டை.

1933

# FOREWORDS.

The stroy is simple but very telling and offers very many situations where love, pathos and humour find good opportunities for expression. The style is spirited and conveys to the reader or the audience those feelings in an eminently attractive and impressive manner. The inculcation of true Bhakti is the aim of the author and the story and the method of treatment are both eminently fitted to carry out his object.

T. N. SIVAGNANAM,
3—12—33.

Hon'ble Diwan Bahadur
S. KUMARASWAMI REDDIAR,
Minister for Education.

Mylapore,
Madras, 7th December '33.

I have read this drama of Mr. K. S. Sankara Ayyar in manuscript with great interest. The story of Krishna Thulabaram is profound in its significance and strong in its appeal to popular sentiment. Mr. Sankara Ayyar's version in Tamil has done justice to the theme and is written in excellent language and style and is quite readable. When put on boards, for which purpose it is essentially intended, I am sure the audience will greatly appreciate it for its picturesqueness and other excellence. I trust professionals and amateurs alike will avail themselves of this excellent production of Mr. Sankara Ayyar and give the benefit of their interpretation through the stage to the Tamil public in a liberal measure.

S. KUMARASWAMI.

# PREFACE.

This reproduces in the form of a Drama
' teresting and instructive episode in the life of Sri Krishna as described in one of the minor works dealing with that great Avatara. Satyabhama the junior queen is so much in love with her lord that she has come to look upon Him as her property. The Lord wants to teach her the lesson that true love is absolutely dissociated from any sense of egoism and from the consequent sense of "possession" of the beloved but really consists in an elimination of the ego in absolute self-surrender to the beloved. The love of Rukmani towards Him is of the latter sort. One day when Satyabhama is pleasantly engaged in enjoying the company of the Lord, Rukmani turns up and requests Him to go to her residence that day as that happens to be her birthday. Satyabhama pleads some other function in her own house but Sri Krishna prefers to accede to Rukmani's request. Satyabhama thus left alone is very much grieved and sage Narada makes a timely visit to her and learning of her grief and its cause suggests for securing the exclusive love of her Lord. the performance of a religious rite an essential function in which is to make a gift of her husband to some worthy Brahmana. Satyabhama is shocked at this suggestion but is relieved to know that He can be redeemed on handing over to that Brahmana gold and jewels or any valuable equal in weight to Him. In the afternoon she mentions to Sri Krishna about her intended religious function and He gladly consents to do the needful. On the day appointed, everything is properly done under the directions of sage Narada and he himself receives from

Satyabhama the gift of the Lord. When however Satyabhama tries to substitute gold and jewels of equal weight to her Lord's, she realises for the first time that all the property available with her are quite insufficient to make the scale in which Sri Krishna is seated smiling rise an inch. She is very much grieved to find that there is no chance of redeeming the Lord at all Sage Narada insists upon his proprietory right over the Lord gifted to him and says that as he has no use for such a person in his endless travels throughout the worlds he has no option but to sell Him in public auction. He takes Him therefore through the streets but nobody is possessed of anything competent to purchase Him with. Rukmani hearing of this is shocked at the way in which Satyabhama has behaved owing to her silly sense of proprietorship over the Lord, runs out to meet Narada and promises to redeem the Lord herself. They all meet at Satyabhama's house where the scales are ready for weighing Rukmani devoutly concentrates on her Lord. He steps into one scale. She offers against His weight a "Thulasi" leaf sanctified and weighted by her Bhakti of self-surrender. The scale in which the Lord is seated rises and the Lord is redeemed to the joy of all. Rukmani takes Satyabhama with her folly in conceiving of the Lord as an object of possession and tells her that true Bhakti is the forgetting of the self in the beloved Lord.

Tinnevelly, 9—12—33.

K. S. SANKARAN,

(Local Fund Audit).

# ஸ்ரீக்ருஷ்ண துலாபாரம்

## நாடக பாத்ரங்கள்



ஸ்ரீக்ருஷ்ணர்:— கதா நாயகர்-அவதார புருஷன்.

நாரதமுனி:— தேவ ரிஷி.

இந்த்ரன்:— தேவலோகாதிபதி.

வஸந்தகன்:— ஸ்ரீக்ருஷ்ணனின் ஸகா.

கர்க்காசார்யர்:— ஷை புரோஹிதர்.

ஸத்யபாமா:— ஸ்ரீக்ருஷ்ணனின் பார்யை—(கதாநாயகி).

ருக்மணி<br>ஜாம்பவதி<br>மித்ரவிந்தை } :— ஷை ஷை

இந்த்ராணி:— இந்த்ரன் மனைவி

நலினி — ஸத்யபாமாவின் தோழி.

(மற்றும்)-ப்ராம்மணர்கள்—பௌரஜனங்கள், யாதவர்கள், முதலானோர்.

கதை நிகழுமிடம்:—அமராவதி<br>த்வாரகை.



## அங்கம்--I. காக்ஷி--1.

*இடம்:—அமராவதியைச் சேர்ந்த வெளி ப்ரதேசம்.*

*(நாரதமுனி ஹரிஸ்மரண பரவசமாய் நடனம் செய்து கொண்டு ப்ரவேசம்).*

நார:—(மயிர்க்கூச்சலபிநயித்து). ஆஹா! எத்தனை சீக்ரம் இந்த இடமடைந்து விட்டேன். கார்யத்தில் கண்ணாயிருப்பவருக்கு காலம் கடப்பது தெரியுமா? இதுவரை ஹரி நாமஸ்மரணையில் ஈடு பட்டு மெய்மறந்து இருந்தேன். இனி காலதாமதமின்றி இந்த்ரனைப் பார்க்கவேண்டும். அவனோ பாரிஜாத ஹரணத்தினால் தன் பார்யைக்கு ஏற்பட்ட அவமானத்துக்காக ராஜ்ய கார்யம் கவனியாது இருக்கிறனென்று கேள்வி. இந்த ஸமயத்தில் நம்மைப் பார்த்தால் அவன் என்ன சொல்வானோ? ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவை அன்று வ்யாஜமாக ஒரு பாரிஜாத புஷ்பத்தை அளித்து அவரது பத்னி மூலமாய் பாரிஜாத வ்ருக்ஷத்தையே கொண்டுபோகச் செய்ததற்காக விரோத பாவங்கொண்டு நம்மை கவனியாதிருப்பானோ? எனக்கேன் இவ்வித ஸந்தேஹம்--அவன் நம்மையொத்த தேவரிஷிகளை திரஸ்கரிப்பக் கருதுவானோ?--ஜகன்னாடக ஸூத்ரதாரரான வாஸுதேவரின் மாயையை யறியாதவனோ?--இவ்விஷயத்தில் ஸம்சயம் ஏற்பட அவச்யமில்லை. இப்பொழுது அவன் இந்தப் பாரிஜாத புஷ்ப வ்ருக்ஷாந்தம் மூலமாய் அவமானமடைந்ததாகக் கருதி வ்யஸனத்திலிருக்கிறன்.--நாமொன்று நினைத்துச் செய்தால் தைவம் வேறொன்றாகச் செய்து அந்தக் கார்யம் எல்லாம் தாறுமாறாயது. (யோசித்து)—இதுவரை நான் ஆரம்பித்த கார்யம் நிறைவேறாது நடுவில் விட்டதுண்டா? என் கலஹ ப்ரணயம் எப்பொழுதும் ஸர்வ லோகோபகாரமாக ஸம்பவிக்குமேயல்லாது—ப்ரயத்னம் வேறு விதமாய் ஏற்படுமா? இந்த்ராணியை ஸந்தோஷிக்கும்படி செய்ய ஸ்ரீக்ருஷ்ணன் "பார்யா விதேய"னல்லாது "பக்த விதேயன்" தான் என்று நிரூபிக்கிறேன். ஸத்யபாமாவுக்கும் ப்ரேமைக்

கும் பக்திக்கும் உள்ள தாரதம்யம் என்னவென்று காண்பிவித்து நல்ல பக்தசிரோமணியாகும்படி செய்கிறேன். இதற்கு ஸர்வ ஸத் கார்ய ஸஹாயனான ஸ்ரீமந்நாராயணன் அனுகூலம் செய்வாராக.

(பாடிக்கொண்டு போகுதல்.)

## அங்கம்—1. காக்ஷி—2.

இடம்:—அமராவதி நகரம்—இந்த்ராணி அந்தப்புரம்.

(இந்த்ராணி துக்கமுகத்துடன் உட்கார்ந்திருக்க இந்த்ரன் சில புஷ்பங்கள் கையிற்கொண்டு பக்கத்திலிருக்க).

இந்த்ராணி:—நாதா! என் துக்கம் வரவர அதிகரிக்கிறதே யொழிய குறைந்தபாடில்லை.

இந்த்ரன்:—கண்ணே, கொஞ்சம் ஆச்வாஸப்படுத்திக்கொள்.

இ-ணி:—நாதா—செய்வது சொல்வதைப்போல் அத்தனை ஸுலபம்தான் என்று தமக்கு ரூபிக்க நான் என் துக்கத்தை மறக்க முடியுமா—அவ்விதம் என்னால் நடிக்கவும் முடியவில்லையே.

இ-ன்:—ப்ரியே—அப்படியானால் எத்தனை காலம்தான் இம் மாதிரி துக்காரண்ய அரண்மனை வாஸம்செய்ய உத்தேசம்—உன் கண்ணிலிருந்து விழும் நீர் என் காலுக்குப் பந்தமாக என்னை ராஜ கார்யம் கவனிக்கப் போகவொட்டாமல் தடுக்கிறது—எழுந்திரு ஸர்வ துக்க நிவர்த்தியாய உன் மந்தஹாஸ சந்த்ரிகையைக் கொஞ்சம் இந்தப் பக்கம் காண்பிப்பாய்—நான் இன்றாவது ஸபா மண்டபம்போகவிடு.

இ-ணி:—நான் என்ன! தம்மைப் போகவேண்டாமென்று சொன்னேன்—என் அவஸ்தைக்காக தாங்கள் ஏன் துக்கப்பட வேண்டும்—ராஜகார்யமும் கவனிக்கப்படாமலிருப்பதேன்?

இ-ன்:—ப்ரேமாமணி! நீ இவ்விதம் சொல்லலாகுமா? எனக்கு உன் மேலுள்ள அன்பின் மஹிமை அறிந்திலேயா? துக்கித்துக் கொண்டிருக்கும் உன்னைத் தனியே விட்டுப்போக என் கால்களும் ஸம்மதிக்குமா? இதோ பார். மந்தார புஷ்பங்கள்-ஹரிசந்தன புஷ்பங்கள் இவைகளையணிந்து உன் துக்கத்தை மாற்றுவாய். ஒரு பாரிஜாத வ்ருக்ஷம்போனால் இன்னும் அதற்கு ஸரிஸமான மான மற்ற இந்த வ்ருக்ஷங்களும் கொடிகளும் நம் நந்தனவனத்தில் இல்லையா? — அதற்காக இத்தனை வருத்தப்படலாமா?

இ-ணி:—ப்ராணேசா! எத்தனைதரம் தான் நான் சொல்ல வேண்டும். பாரிஜாத நஷ்டத்திற்காகவா என் வருத்தம்? இதன் மூலம் எனக்கு ஏற்பட்ட அவமானத்தை என் தாம் கவனிக்க வில்லை. எதையும் பொறுக்கலாம்-அவமதிப்பு மட்டும் ஸஹிப்பது ஸாத்யமா?

இ-ன்:—இன்னமும் நீ அதை மறக்கமாட்டாயா? கடந்த விஷயத்தைப்பற்றி இவ்விதம் சிந்திப்பது உன்னையொத்த புத்தி சாலிகளுக்கு அழகில்லை.

இ-ணி:—ஆம்—சக்தியில்லாதவர்களெல்லாம் இவ்விதமே தான் சொல்வார்கள்—அன்றியும் புருஷர்களை இந்தப் பராபவம் என்பது கொஞ்சமும் பாதிக்கிறதில்லை—என்னை அந்த ஸத்யபாமை அவமதித்தது என்றால் ஸஹிக்கக்கூடவில்லை.

இ-ன்:—(தனக்குள்) — வாஸ்தவம் — புருஷர்களுக்குள்ள சாந்த ஸ்வபாவத்தினால் அவர்கள் இதைப் பொருட்படுத்துவதில்லை. நிஜமே: ஸ்திரீகளைத்தான் அது அதிகம் பாதிக்கிறது (ப்ரகாசமாய்) கொஞ்சம் ஸஹித்துக்கொண்டிரு காலக்ரமத்தில் ஸரியாய்விடும். இம்மாதிரி துக்கத்தை மறக்கடிக்க வேறு வழியில்லை.

இ-ணி:—நாதா! என்ன உங்கள் ஆதரவான வார்த்தைகள். இவையெல்லாம் என்—(திரைக்குள் சப்தம் கேட்டுத் திரும்புகிறாள்)

இ-ன்:—கண்ணே! நமது குரு இந்தப்பக்கம் வந்துகொண்டிருக்கிறார்—(ப்ரஹஸ்பதி ப்ரவேசிக்க இருவரும் நமஸ்கரிக்கிறார்கள்).

ப்ரஹ:—மங்களமுண்டாகுக. (இந்த்ரன் ஓர் ஆஸனம் காண்பிக்க அதில் அமர்ந்து) தேவேந்த்ரா இன்றும்கூட ஸபாமண்டபத்துக்கு வரவில்லையே. ஸுராராஜாவாகிய நீ இப்படி ராஜதர்மம் நிறைவேற்றாதிருப்பது நியாயமா?

இ-ன்:—குரோ! என்ன செய்வது? நாரதமுனி மூலமாய் இப்படிப்பட்ட இடுக்கண் ஸம்பவித்தது. அவர் பாரிஜாத புஷ்பத்துடன் த்வாரகைக்குப் போகாதிருந்தால் நமக்கு இந்தமாதிரி அவஸ்தை ஏற்பட்டிருக்குமா? ஆகவே இந்த துக்கத்துக்குக் காரணம் அந்தக் கலஹப்ரியர் அல்லவா?

ப்ரஹ:— ஸுரேசா! நீயும் ஸாமான்யரைப்போல் சொல்லலாமா? நாரதர் எப்பொழுதும் தேவர்களுக்கு ஸஹாயம் செய்ய எண்ணமுடையவரல்லவா? அன்றியும் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவின் மஹாத்ம்யமும் நீ மறந்திருக்கிறாய்போலும்.

இ-ன்:—அப்படியானால் இந்த விஷயத்தில் நாரதர்மேல் தோஷமில்லையென்று தங்கள் அபிப்ராயமா?

இ-னி:— குருவர்யா நாரதர் தோஷமில்லாதவரானாலும் நந்தகுமாரர் தான் நம்மை இவ்விதம் தண்டிக்கலாமா?

ப்ரஹ:—இந்த்ராணி அந்த மஹானின் சரிதை எல்லோருக்கும் தெரியவருமா? எப்படியும் அவர் பக்தவத்ஸலன், நம்போன்ற பக்தர்களின் பக்திக்கு ஸந்துஷ்டியடைவார் என்பதற்கு ஸந்தேஹமா?

இ-னி:—ஆனால் இந்த விஷயத்தில் அவர் பக்தவத்ஸலனோ அல்லது பார்யை வத்ஸலன்தானோ என்று தெரியவில்லையா? தாம் உண்மையை மறைத்துப்பேசினாலும் எங்களுக்கும் கண்கள் இல்லையா, அவருக்கும் தர்மம் என்பது கொஞ்சமும் யோசனையுண்டாயிருக்குமா இதில்?

ப்ரஹ:— அம்மா உன் துக்க ஆவேசம் உன்னை இவ்விதம் ஆட்டிவைக்கிறது. இல்லையேல் உனக்கு என் வார்த்தையின் உண்மை தெரியாமலிருக்குமா? (நாரதரின் வீணாநாதம் கேட்டு).

இ-ன்:—குருஸத்தமா, அதோ நாரதர் வருகிறாப்போலிருக்கிறது.

ப்ருஹ:—(செவிகொடுத்து) ஆம்—வருவது நாரதர்தான்.

இ-ணி:—அவர் மறுபடியும் என்ன கலஹம் செய்வாரோ—எனக்கு பயமாயிருக்கிறதே.

ப்ருஹ:—பயப்பட வேண்டாம்—ஸுரேசா எதிர்சென்று அர்க்ய பாத்யங்கள் அளிப்பீர்கள். (நாரதர் ப்ரவேசிக்க இந்த்ரன் அர்க்ய பாத்யங்கள் அளித்து நமஸ்கரிக்க—கையெடுத்து).

நா:—மங்களமுண்டாகட்டும். ஸர்வதிக்விஜய—சாச்வத ஐச்வர்யமும் உண்டாகுக?

இ-ன்:—முனீந்த்ரா தாங்கள் ஆசீர்வாதங்கள் பலிதமாகட்டும்—இந்த ஆஸனத்தை அலங்கரிப்பீராக.

நா:—(ஆஸனத்திலமர்ந்ததும், இந்த்ராணி நமஸ்கரிக்க—கல்யாணமஸ்து என்று ஆசீர்வதித்து)—தேவேந்த்ரா இன்று ஏது உன் ஸபாமண்டபம் மூடப்பட்டிருப்பது இந்த ஸமயம்? உன் பார்யையின் முகத்திலும் கவலை காணப்படுகிறது? காரணம் என்ன கேட்கலாமோ?

இ-ன்:—ஸ்வாமீ! காரணம் என்ன நாம் அறியாததா? தமது ச்ருபாகடாக்ஷவீக்ஷண்யம் தானே காரணம்.

இ-ணி:—முனீந்த்ரா. காரணம் தமது மனமே தமக்குத் தெரிவிக்கவில்லையா

நார:—என்ன உங்கள் துக்கத்துக்கு நானே காரணபூதமா!

இ-ன்:—நாரதமுனீ—எங்கள் க்ரஹசார பலத்தினால் தேவ உபகாரியான தாமும் இப்பொழுது அபகாரியானீர்போலும்!

இ-ணி:—தேவ உபகாரியாயின் இந்த்ரனுக்கு வருத்தம் ஏற்படுத்தி வேடிக்கை பார்ப்பதுதான் லக்ஷணம் போலும்.

நார:—நானென்ன உங்களுக்காவது அல்லது தேவர்களுக்காவது அபகாரம் செய்வதா? எனது கலஹப்ரயத்னமும் எப்பொழுதும் உங்களுக்கு உபகாரம் செய்வதற்காகவே ஏற்படும்.

இ-ன்:—ஆனால் இப்பொழுது தாம் செய்ததும் உபகாரமாகவே தான் செய்யப்பட்டதோ?

நா:—ஸந்தேஹமில்லாமல். தைவீக ஏற்பாடுகள் எப்பொழுதும் சுபகரங்கள் தாம்—அல்பக்ஞர்களான நமது கண்ணுக்கு இந்த விஷயத்தில் தற்காலம் அபகாரமாகத் தோன்றினும் முடிவில் அவையெல்லாம் உபகாரம் என்று நன்றாய் எப்படியும் இதில் என்மேல் தோஷமில்லையென்று தெரியவரும்—காரண காரணரிருக்க கர்ம விதிப்படி எப்பொழுதும் நடக்கும். ஹிரண்யகசிபுவின் அஹங்காரம் போக்கப் புருஷோத்தமனை வேண்ட அன்று ப்ரத்யக்ஷமாக வில்லையா-நரஸிம்ஹ மூர்த்தியாக? பலிதான கர்வத்தையடக்கிப் பரிஹாரம் செய்யவில்லையா-வாமன மூர்த்தியாக? கம்ஸனின் மதத்தை த்வம்ஸம்செய்ய நமது வேண்டுகோளுக்கிரங்கி தாரகமாய் அஸுரர்களை ஸம்ஹாரம்செய்து நமக்கு எப்பொழுதுமே மங்களம் செய்பவராயிருக்கிறார். நம் துக்கத்தையெல்லாம் நிவர்த்தித்து நமக்கு எப்பொழுதும் உபகாரம்செய்யக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்.

ப்ரஹ:— நாரதா—நானும் இது விஷயம்தான் இவர்களுக்கு இப்பொழுது சொல்லிக்கொண்டிருந்தேன். இவர்களது துக்கமே இவர்களை இப்படிப் பேசத் தூண்டுகிறதென்று நினைக்கிறேன்-போகட்டும்.

நா:— குருசேகரா—துக்க பீடிதர்களானாலும் தர்மாதர்ம வித்யாஸம் மறந்து பேசலாமா? ஸுரேந்த்ரா—உனக்கேன் இந்த துக்கம்—ஸர்வ சராசர ஸ்ருஷ்டி ஸ்திதி லயகாரகனாயிருக்கும் அந்த சக்ரபாணியை ஜயிக்கவில்லையே யென்றா? அல்லது—ஸர்வேச்வரன் பாரிஜாத வ்ருக்ஷத்தைக் கொண்டுபோய்விட்டாரே யென்றா?

இ-ன்:— இல்லை நாரதமுனீ எனக்காக வருத்தம் ஏதுவுமில்லை. என் பார்யையின் மனக்கவலையைப் போக்க வழியறியாது தபிக்கிறேன்.

நா:— ஒஹோ! அப்படியா—ஆம் ஆம். இது ஸஹஜம்தான். இந்த்ராணீ உன் வருத்தம் தீருவதற்கு மார்க்கம் என்ன சொல்

வாய். நான் இது முதல் வேறு கார்யம் பாராது நிவர்த்திக்க வழி பார்க்கிறேன்.

இ-ணி:— (ஆத்மகதமாய்) ஆஹா! இதற்குமுன் செய்தது போதாதா—மறுபடியும் வழிபார்க்கிறேன் என்கிறாரே. இன்னமும் ஸ்ரீக்ருஷ்ணனை இங்கே அழைத்து வருவாரோ என்னவோ-என்ன பதில் சொல்வது இவருக்கு இப்பொழுது?

நா:—இந்த்ராணி ஏன் பதிலில்லை? என்னைப்போலுள்ள ஸாமர்த்யமில்லாதவர்களை ஒரு கார்யத்துக்கு அநுப்பது தனக்கே பத்ரவமாகுமென்று நினைக்கிறாயா? பயப்படவேண்டாம். அவச்யம் இந்த விஷயத்தில் எனக்கு ஜயம் கிடைக்கும்—தப்பாது.

ப்ரஹ:—இந்த்ராணி—நாரதர் அகடவிகட ஸமர்த்தர் என்று அறியாயா நீ? தெரிவிப்பாய்.

இ-ணி:—நானே சொல்லட்டுமா?

இ-ணி:—முனீந்த்ரா! தாம் அறியாதது ஏது? ஆனாலும் தெரிவிக்கிறேன் கேட்டதற்காக—என்னை அன்று அவமானம் செய்த அந்த ஸத்யபாமையின் கர்வ பங்கத்தைக்கேட்டு ச்ரோத்ரானந்தமடையும் வரை—அல்லது மறுபடியும் என் நந்தனவனத்தில் பாரிஜாத புஷ்பங்கள் பார்த்து நேத்ரானந்தமடையும்வரை—எனக்கு ஸந்தோஷமென்பது சிறிதுமேற்படாது.

நா:—உனக்கு ஸந்தோஷமுண்டாக மார்க்கம் அறிந்தேன். அது பலிதமாவதற்கு ப்ரயத்னம் செய்கிறேன் இப்பொழுதே. நீ கேட்டுக்கொண்டபடியே இரண்டு கார்யமும் ஸாதித்துத் தருகிறேன்.

ப்ரஹ:—நாரதா—உனக்கு இந்தக் கார்யத்திற்கு தைவ ஸஹாயம் உண்டாகட்டும்.

நா:—குருநாதா—எனக்கு இதில் தப்பாமல் வாஸுதேவர் ஸஹாயமாயிருப்பரென்று தோன்றுகிறது. ஏனெனில் அந்தக் கமலாக்ஷர் மற்றவர்களைவிட ஸத்யபாமாவிடம் அதிக ப்ரேமை

காண்பிப்பதாகக் கருதி எல்லோர் முன்னும் கர்வ சித்தத்துடன் நடந்துகொள்கிருள் அந்த அணங்கு. அவளுக்கு கர்வபங்கமே நிச்சயம் செய்யவேண்டுமென்று நம்புகிறேன். அதற்கு அந்த ஸ்ரீய: பதியே நமக்கு அனுகூலம் செய்வார்.

ப்ரஹ:—அப்படியே ஆகட்டும்.

இ-ன்:—நாரதமுனீ—இந்தக் கார்யம் நிறைவேற்றினல் எங்கள் ஜன்மாந்தர க்ருதபுண்யமாகும்.

இ-ணி:—தேவரிஷி சந்த்ரா, இது நிறைவேறினல் பாரிஜாதா பஹரணத்தினல் கவலையடைந்த என் மனஸில் ஸ்ரீக்ருஷ்ண பக்த வாத்ஸல்யத்தை நிச்சயப்படச் செய்வீர்.

நா:—அப்படியே செய்கிறேன்—நம்பலாம். இந்த்ரா இனி நான் போய் வருகிறேன்.

இ-ன்:—நாரதமுனீ—போய் வாரும்—உமது கார்யம் அநு கூலமானதை நாங்கள் இங்கிருந்து கண்டு ஜயமானதும் எங்கள் ஆனந்தத்தை உசித ரீதியாய் ப்ரசுரப்படுத்துகிறேம்.

நா:—அப்படியே செய்யுங்கள்-இந்த்ராணி. ஸுபரகுரு-போய் வருகிறேன். (பாடிக்கொண்டு போகுதல்).

ப்ரஹ:—இந்த்ராணி இனி உன் துக்கத்தை மறப்பாய்-உன் மனேரதம் நிறைவேறும்.

இ-ணி:—(மந்தஹாஸத்துடன்) குருவே-உங்கள் ஆசீர்வாதத் தினல் அப்படியேயாகட்டும்.

இ-ன்:—எத்தனையோ நாளாய் இல்லாமலிருந்த உன் மந்த ஹாஸ சந்த்ரிகை இன்று மறுபடியும் ப்ரகாசிக்கக் காணும் பாக்யம் அடைந்தேன். இனி ஸந்தோஷமாயிரு—நானும் இன்று ஸபா மண்டபம் போய் வருகிறேன்.

இ-ணி:—நாதா—போய் சீக்ரம் வாருங்கள்.

இ-ன்:—குருவர்யா—வாருங்கள் போவோம் ஸபாபவனத் திற்கு.

(இந்த்ரன் ப்ரஹஸ்பதியுடன் போகுதல்).

(திரைவிழுகிறது)

## அங்கம்—2. காக்ஷி—1.

### இடம்:—த்வாரகையைச் சேர்ந்த நந்தனவனம்.

(நாரதர் பாடிக்கொண்டு ப்ரவேசம்).

நா:—இந்தப் பாரிஜாதமலரின் மணம் நான் த்வாரகையை யடைந்து விட்டதாக அறிவிக்கின்றது. (கவனித்து) அதோ ஸத்யபாமா தேவியின் ப்ரிய நந்தவனம். அதில் ஸ்ரீ கிருஷ்ணர் எப்பொழுதும்போல் ஸத்யாதேவியுடன் உல்லாஸமாயிருக்கிறார். துரிதமாய்ச்சென்று அவரை தர்சித்து நமது கார்யத்துக்கு விதை போடுகிறேன் (கொஞ்சம் நடந்து) ஸ்ரீகிருஷ்ணனின் ஸஹாயமில்லாது கார்யம் எப்படி முடியுமென்று என் மனஸும் கவலையடைகின்றது. அந்த ஸத்யபாமா விதேயனான ஸ்ரீகிருஷ்ணனும் ஸத்யபாமா கர்வபங்கத்துக்கு ஸஹாயம் செய்வாரா? (யோசித்து) இவ்விதம் என்னைப்போலுள்ளவர் ஸம்சயம் கொள்ளலாகுமா? அந்த பக்தவத்ஸலன் தன் பக்தர்களின் மனோரதங்களை ஈடேறச் செய்யாமலிருப்பாரா? ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தன் ஸொந்த ஸத்யபாமா கர்வத்தை அடக்க எனக்கு உதவி புரியாமலிருப்பாரா? ஆகவே நிர்ப்பயமாய்ப்போய் முன் ஆலோசித்த விதமே செய்கிறேன் (கொஞ்சம் நடந்து) ஸத்யாதேவி ப்ராணேச்வரர் ஸம்பூர்ண அன்பு தன்னிடம் இல்லையென்று சிற்சில ஸமயத்தில் தனக்குத்தானே நினைந்து வருந்துகிறாள். இன்றும் அம்மாதிரி கலஹமொன்று ஏற்பட்டால் நல்லது. இல்லையேல் நானே ஏதோ ஒரு விதத்தில் அவ்விதம் ஒன்று உண்டாக்குகிறேன். கலஹாக் கல்பனையும் எனக்குப் பாலுடன் ஊட்டப்பட்ட வித்தையல்லவா? பிறகு ஸத்யாதேவிக்கும் புண்யகவ்ருத முபதேசித்து பாரிஜாத வ்ருக்ஷத்துடன் வாஸுதேவனைத் தானமாகப்பெற்று ஸத்யபாமையையும் ருக்மணியைப்போல் பக்தசிரோமணியாய்ச் செய்கிறேன். இந்த்ராணிக்கும் ஆனந்தமுண்டாகச் செய்கிறேன். என் மனோபீஷ்டத்தையும் நிறைவேற்றிக்கொள்கிறேன். தேவா! நந்த நந்தனா உம்மை நம்பினவர்களுக்கு என்ன குறை?

தூர்வாஸரின் அஸ்த்ரத்திற்குப் பயந்து உன்னை வேண்ட அந்த அம்பரீஷரின் ஆர்த்தி தீரவில்லையா? ஹிரண்ய கசிபுவின் பாலைக்குக்

தாளமுடியாமல் உன்னைப்போற்ற அந்த ப்ராஹலாதரின் பாதை தீரவில்லையா? துச்சாஸனனின் உபத்ரவத்திற்கு வருந்தி உன்னை யடைக்கலமடைந்த அந்த த்ருபத ராஜகுமாரியின் ஸங்கடம் நிவர்த்தியாகவில்லையா? முதலைவாயிலிருந்து விடுபட முறையிட்ட அந்த கஜராஜனின் கஷ்டம் தீரவில்லையா— பக்தர்களுக்கெல்லாம்—ஆர்த்த ரக்ஷணா—நீயிருக்க கஷ்டமேது—சிஷ்டபோஷணா நீயிருக்கச் சிந்தையேது—பக்தவத்ஸலா நீயிருக்க பயமுண்டாவதேன்?

(போருதல்).

## அங்கம்—2. காக்ஷி—2.

இடம்:—த்வாரகாபுரியைச்சேர்ந்த உத்யானவனம்.

(ஸத்யபாமாவும் ஸ்ரீக்ருஷ்ணனும் உத்யானவனத்தைப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். நலினியும் வஸந்தகனும் சேர்ந்து ஒரு பக்கமாய் நிற்கிறார்கள்.

ஸ்ரீ:—ஸத்யா இந்த உத்யானவன லக்ஷ்மி ச்ருங்கார மெதற்காக உனக்குத் தெரியுமா?

ஸத்:—ப்ராணேசா! இது ஸ்திரீஜன ஸஹஜவ்யாபாரம் தானே. மனோஹரனின் அன்பையடைய எங்களுக்கெல்லாம் ச்ருங்காரம் தானே மூலதனம்.

ஸ்ரீ:—ப்ரியே—ஆம். வாஸ்தவமே. அன்பு மதுபானம்போல் எப்பேர்ப்பட்டவர்களையும் இவ்விதம் ஆட்டம் ஆடும்படி செய்யாமலிருக்குமா?

ஸத்:—மனோவல்லபா! அந்த அன்பென்பது இல்லாமற் போனால் இந்த உலகமே பாழாய்விடுமல்லவா; தமது ஸல்லாபம் தானே எனக்கும் இந்த லோகத்தில் வாஸயோக்யமாகச் செய்கிறது. இந்த ஸல்லாபத்தின் மஹிமை வர்ணிக்கத்தரமில்லை. லோகத்தில் துக்கங்களைப்போக்க அன்பைப்போல் வேறு ஒன்று உண்டோ?

ஸ்ரீ:—(தனக்குள்) பக்தியென்பது உனக்குத் தெரியாதது ஒன்று உண்டு. நாரதர் உனக்கு சீக்ரமாய் அதனைத் தெரிவிப்பார்.

ஸத்:—நாதா என் பதிலில்லை. ஏற்ருதயேச்வரா ஸத்ரீகளுக்கு வாஞ்சையென்பதே கிடையாதா? அப்படியானல் தமது அன்பும் எனது அன்பைப்போல் ச்ரேஷ்டம் இல்லைபோலும்—ஆஹா! இது நிஜம்தானு?

ஸ்ரீ:—பாமா—உன்னை எல்லோரையும்விட அதிகமாய் நான் மதிக்கிறேன் என்பதற்கு இந்த ப்பாரிஜாத வ்ருக்ஷமே ஸாக்ஷியல்லவா? இன்னும் இம்மாதிரியனேக விஷயங்களில் உன் மீதுள்ள அன்பைக் காட்டியிருக்கவில்லையா? எத்தனைதரம்தான் இவ்விஷயத்தைப்பற்றி நான் சொல்லவேண்டும் உனக்கு.

ஸத்:—நாதா இந்த விஷயம் மட்டும் எத்தனைதரம் சொன்னுலும் கேட்பதற்கு சலிப்புண்டாகவில்லை—தமக்கு என்மேல் அன்புள்ளவரை—லோகமெல்லாம் எனக்கு அன்பு மயமாய்த்தானிருக்கிறது. இந்த அன்பின் மஹிமை வர்ணிக்க முடியாது. இதற்கு மேம்பட்டது எதுவும் இல்லை.

ஸ்ரீ:—இது எல்லாம் வஸந்தருதுவின் லக்ஷணம் அல்லவா?

ஸத்:—நாதா எதின் லக்ஷணமோ எனக்குத் தெரியாது. இவையெல்லாவற்றிற்கும்—அனுராகம் உண்டாகும்படி செய்த மஹானுபாவர் யாரோ?

ஸ்ரீ:—ஸமஸ்தசராசரங்களுக்கும் நீ சொல்வதுபோல் இம்மாதிரி அன்பு என்பதை போதித்த குரு எவரோ தெரியவில்லையே!

ஸத்:—ப்ராணகாந்தா தெரியாமலென்ன. தமது திருவாக்கால் இந்த ஸங்கதி கேட்கப்ரியப்பட்டேன்—அதோ பாரும்—சிறு மாலை—இவைகட்கும் அன்பு அதிகம்தான்.

ஸ்ரீ:— ப்ரியே இதற்கேன் இத்தனை ஆச்சர்யம்: இன்னும் இதற்கு த்ருஷ்டாந்தமாக— (திரைமறைவில் சப்தம்) (வஸந்தகன் மஸினியால் திரஸ்ரிக்கப்பட்டு—வெய்யில் கொடுமையாலும் பசியதிகமாயும் இருப்பதாக அபிநயித்து ஸ்ரீக்ருஷ்ணனிடம் வந்து).

வஸ:— நண்பா—நண்பா—நீ இந்த பாமையின் ஸரஸஸல்லாப ஆடல் பாடல்களில் என் ஞாபகமே யில்லாமல் மறந்துவிட்

டாய் போலும்—என் வயிறு பகபகவென்று பசியினால் அவஸ்தை யடைந்திருக்கிறது, இனி போஜனத்துக்குப் போகலாம் வா.

ஸ்ரீ:— நண்பா! உனக்கிப்பொழுதே பசியெடுத்துவிட்டதா?

வஸ:— ஆட்டம் ஆடுபவர்களுக்குப் பசி தெரியுமா? எவ்வளவு பொழுது போய்விட்டது பார்.

ஸ்ரீ:— (கவனித்து) ஆ[illegible]ராகமுடையவனால்—லோகபாந்தவனும்கூட—எப்படியாய்விட்டான். அன்பே இனி உன் அரண்மனைக்குப் போவோமா—என் நண்பன் பசி பொறுக்க முடியாதவனாயிருக்கிறான்.

ஸத்:— உமது நண்பனுக்குப் பசியெடுத்தால் — க்ஷணம் பொறுக்க முடியுமா? —உமக்கிஷ்டமானால் அந்தப்புரத்துக்கே போவோம் வாருங்கள்.

(ஸத்யாவும் ஸ்ரீக்ருஷ்ணனும் முன்னும் நலினிவஸந்தகர் பின்னுமாகப் போகிறார்கள்—ஜாம்பவதி மித்ரவிந்தையுடன் ருக்மணி ப்ரவேசம். எல்லோரும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரம் செய்கிறார்கள்).

ஸ்ரீ:— கல்யாணமஸ்து — பீமராஜபுத்ரீ ஏது இங்கே ஸபத்னிகளுடன் புறப்பட்டு வந்தாய்?

ரு:— (கைகூப்பி) நாதா கார்யார்த்தமாகத்தான் வந்தேன். என் விண்ணப்பம் ஒன்றுளது—உத்தரவளிக்க வேண்டும்.

ஸ்ரீ:— வைதர்பி தெரியப்படுத்துவாய் இன்னதென்று—அப்படியே யாகட்டும் (ஸத்யா கோபாவேசத்துடன் கண் சிவந்து வேறு பக்கம் திருப்பி நிற்கிறாள். நாரதர் மெல்ல ப்ரவேசித்து ஒருபக்கமாய் நின்று கவனிக்கிறார்).

நா:— நல்ல ஸமயத்திற்கே வந்தேன். இந்த ஸத்யபாமை முகத்தில் கலஹ அந்தகாரம் உதயம் ஆய்விட்டதாகத் தெரிகிறது. எதற்கும் இங்கிருந்தே கவனிப்போம்.

ரு:— நந்த நந்தனா! இன்று என் ஜனன தினமென்று அதி வைபவமாய் பந்துக்களுக்கும் ஸபத்னிகளுக்கும் ப்ராம்மணர்களை

அழைப்பித்து விருந்து செய்யவேண்டுமென்று என் ஆசை. தாமும் ஸத்யையுடன் என் க்ருஹத்திற்கு தயைசெய்து அனுக்ரஹிக்க வேண்டும்.

வஸ:— நல்லது. எனக்கு இன்று இரண்டு இடத்தில் வேட்டைதான். ஆனால் எங்கே போவது ஃ சிதா?

ஸ்ரீ:— (மந்தஹாஸத்துடன்) ஸத்யா நீ இந்த ப்ரார்த்தனையைக் கேட்டாயல்லவா—அப்படியே செய்வோமா?

ஸத்:— நாதா! இன்று தமது பட்டமஹிஷிக்குப் பிறந்த தினமானால் எனக்கு இன்றுதான் பதிக்ருஹம் புகுந்த தினம். அதற்காகவே விருந்துசெய்ய எல்லா ஏற்பாடுகளும் செய்தாய்விட்டது அப்பொழுதே. நலின் இன்று நாம் கோவிந்தனுக்கு விருந்து அளிக்க அக்னேயிட்டேனே அப்பொழுதே—சொல்லவில்லையா நீ?

ந:— ஆமாம் அம்மா. இன்றுதானே அந்த சுபதினம்.

நா:— (தனக்குள்) ஆஹா! ஸத்யதேவிக்குத் தகுந்த தாஸியே கிடைத்திருக்கிறாள்.

மித்:— ஸத்யாதேவி இதற்குமுன் எப்பொழுதும் இன்று அப்படி ஒரு சுபதினமென்று சொன்னதில்லையே.

ஸத்:— நான் எப்பொழுது சொன்னால் என்ன—அதற்கு என்னைக் கேட்பவர் யார்?

ரு:— ஸோதரி! அப்படி ஒரு தினம் கொண்டாடி விருந்து அளிப்பவர் உண்டா உலகில்?

ஸத்:— ஆஹா! விசேஷமான ஒவ்வொரு தினத்தையும் கொண்டாடி விருந்து நடத்தக்கூடாதோ?

ஜா:— ஸத்ராஜிதி தேவி. அப்படியானால்—

ஸ்ரீ:— (ஜாம்பவதியைத் தடுத்து) ஸத்யா ஆனால் உன் இஷ்டம்தான் என்ன?

ஸத்:— என் இஷ்டம் என்னவென்று ப்ரத்யேகமாய் என்னைக் கேட்கவேண்டுமா என்ன?—க்ஷணநேரத்துக்கு முன் தாமே என் க்ரஹம் வருகிறேனென்று சொல்லவில்லையா—ஸரி அதிருக்கட்டும்—இப்பொழுது தமக்கு யார் க்ருஹத்துக்குப் போக இஷ்டமோ அதைத் தாமே நிர்ணயித்துக்கொள்ளவேண்டும்—என்னைக் கேட்பானேன்.

ஸ்ரீ:— (தனக்குள்) ஸத்யைக்கு இப்பொழுதே கோபம் வந்தாய்விட்டது. இருக்கட்டும் இதெல்லாம் நாரதர் கார்யத்துக்கு அநுகூலம்தான். (ப்ரகாசமாய்) வைதர்பீ- கேட்டாயல்லவா உன் தங்கையின் பதிலை—இனி என்னை என்ன செய்யச் சொல்கிறாய்.

ரு:— தேவா—நானு தமக்கு போதிக்க? ஸர்வகார பரிக்ஞையும் ஸர்வக்ஞரையும் தம்மை வேதங்கள் ஸர்வதா கோஷிக்க தமக்கோ நான் தெரியப்படுத்த வேண்டிய கார்யமுளது—குருட்டுக் கண்ணன் கண்ணளிக்கும் கண்ணனுக்கு மார்க்கம் காண்பிப்பதா?

ஜா:— நாதா—தாம் ருக்மணி தேவியைப் பார்த்தனையைக் கேட்பதற்கு முன்னே ஸத்யையின் அபிப்ராயம் தெரிந்துகொள்ள வில்லையோ?

ஸ்ரீ:— வைதர்பீ! ஸத்யைக் கிஷ்டமானால் எனக்கும் ஆக்ஷேபமில்லை—ஸத்யையே கேள்.

நா:— ஸ்நானம் செய்யப் புறப்பட எதிரிலேயே தீர்த்தம் குறுக்கிட்டது போல்—இனி என் கார்யம் ஜயம்தான். ஸத்யை தன் ப்ராணனையாவது விடுவாளே யல்லாது ஸ்ரீக்ருஷ்ணனைவிடப் போகிறாளா!

மித்ர:— நாதா-நாங்கள் ஏன் ஸத்யையைக் கேட்கவேண்டும். தாமும் ஸத்யையைப்போல் எங்களையும் ஸ்வீகரிக்கவில்லையா? தம்மிடம் ஸத்யபாமைக்குள்ள ஸ்வதந்த்ரம் எங்களுக்கு

யில்லையா? யார் வேண்டினாலும் கோரிக்கைகளை அறிந்து நிறை வேற்றும் தாம் பீமராஜ புத்ரியின் ப்ரார்த்தனையை நிறைவேற்ற ஸபத்னியை வேண்டி உத்தரவு பெறச் சொல்வது ந்யாயமா? ஸபத்னிதான் லேசில் ஸம்மதிப்பாளா? இவர்களுக்குள் கலஹம் ஏற்பட்டு வேடிக்கைப் பார்க்கலாம் என்று அபிப்ராயமோ?

ஜா:— ப்ராணேசா தாம் அனுதினமும் ஸத்யை க்ருஹத்தி லேயே யிருப்பவர் அல்லவா? அப்படியிருக்க எங்கள் பிறந்தநா ளன்றாவது எங்கள் க்ருஹத்துக்கு வரக்கூடாதா?

ரு:— ஸோதரிகளே நாதன் கபட நாடகர் அல்லவா? குற்ற மில்லை—நானே கேட்கிறேன். (ஸத்யபாமா பக்கம்போய்) தங்காய் இன்று மாத்ரம் ப்ராணேச்வரனை என் க்ருஹத்துக்கு வந்து என் பந்துக்கள் முன்பாக என் கௌரவத்தை நிலைநிறுத்து. நீயும் இதன் பலமாய் புண்யமடைவாய். நீ "ஸரி" யென்றால் நாதனும் பதில்பேசாது அங்கீகரிப்பார்.

ஸத்:— ருக்மணி! இதென்ன பைத்யமாயிருக்கிறது! அன் பினாலேயே நாதன் அனுக்ரஹம் அடைந்து எண்ணத்தை நிறை வேற்றிக் கொள்ள வேண்டுமே யல்லாது மற்றவர்களைப் ப்ரார்த்தித் பதிலைப் பதியை ஸ்வாதீனம்செய்ய எண்ணுவாருண்டா? ஸபத்னி கள் வேண்டுகோளுக்கு தனம் தான்யம் அளிக்க இசைவார்கள். ஆனால் பதியின் ஒரு புன்சிரிப்பு ரஹஸ்யம் வேறுபக்கம் ஏற் பட ஸம்மதிப்பாரா? எப்படியானாலும் பர்த்தாவின் அன்பை விட்டுக் கொடுப்பாரா? இந்தப் பேச்சை நிறுத்திப் புறப்படுப்போ.

ரு:— ஸத்யா! நீ ப்ரதிதினமும் அனுபவிக்கும் ஸௌக்யம் நான் இந்த ஒருநாள் மாத்ரம் அனுபவிக்க ஸம்மதிக்கமாட்டாயா?

ஸத்:— ப்ராணேசரின் அன்பு எதற்கும் மேலல்லவா?— இதென்ன—

மித்:— ஸத்யா! இது உனக்கு நல்ல காலமென்று முன்பின் அறியாதவர்போல் பேசவேண்டாம். எப்பொழுதும் காலம் ஒரே மாதிரியா யிருக்காது.

ஜா:— ஸத்யா! எங்களுக்கெல்லாம் ப்ராணேசரிடம் வெறுப்பு உண்டாக்கி நீ யென்ன ஸுகப்படப் போகிறாய்? நீ மாத்ரம் ருக்மணியை வேண்டக்கூடிய காலம் வாராமலிருக்குமா? "லோபிக்கு இரண்டு பங்கு நஷ்டம்" என்ற பஹுஜன வாக்யம் உன்னிடமே உண்மையாகும் பார் நீ.

ரு:— ப்ரிய ஸோதரிகளே — சும்மாயிருங்கள் — ஸத்யையின் கோப வார்த்தைகளைப் பாராட்டாது வேடிக்கையாகப் பேசுவோம் வாருங்கள்.

ஸத்:— நாதா! இந்த ஸ்த்ரீகளை என்போல் ஏஸி வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பதென்ன? இப்படிப் பேசாமலிருந்தால் நான் இங்கிருக்கமாட்டேன். (போகப்புறப்பட ஸ்ரீ க்ருஷ்ணன் தடுக்க).

வஸ:— (ஸபையைப் பார்த்து) நான் எத்தனையோ தெரியாத் தனத்தினால் செய்த தப்புகளிருந்தாலும் என் நண்பனைப் போல் இப்படி அஷ்ட பார்யைகளை மாத்ரம் கட்டிக்கொண்டால் அப்பொழுது நான் படும் அவஸ்தை எப்படி யிருந்திருக்குமோ?

ஸ்ரீ:— ஸத்யா! இந்த ஸ்வல்ப விஷயத்திற்கு இத்தனை பிடிவாதமேன்—இத்தனை தர்க்கமெதற்கு. எப்பொழுதும் ப்ரார்த்திக்காத ருக்மணியே வந்து உன்னையும் என்னையும் எவ்வளவோ ப்ரேமையுடன் ஸுக போஜனத்துக்குத் தன் க்ருஹத்திற்கு தயை செய்ய வேண்டுமென்று விரும்ப அதற்கு நீ இவ்விதம் கோபம் செய்து கண்ணீர்விடுவதும் ந்யாயமா?

நா:— (தனக்குள்) ப்ரணயமாகிற அந்தகாரத்தில் மூழ்கியிருப்பவர்களுக்கு ந்யாயான்யாய பகுத்தறிவு எங்கிருக்கும்?

ஸ்ரீ:— ப்ரியே! நீ யெப்பொழுதும் வைதர்ப்பியின் அந்தப்புரம் பார்த்ததில்லை யல்லவா? இன்று அதுவும் பார்க்கலாம் வா— உன் அந்தப்புரத்திற்கும் அதற்குமுள்ள தாரதம்யம் அறிந்து கொள்ளலாம். (கையைப்பிடிக்க—அதை அவள் விடுவித்துக்கொண்டு)

ஸத்:— இந்த இச்சக வார்த்தைகளை என்முன் பாடவேண்டாம். உங்களுக்கு ஆசையாயிருந்தால் போய்வாருங்கள்.-நலினீ! நமக்கென்ன அந்த வீட்டிலே—வா. நாம் அரண்மனைக்குப் போவோம். (போகப்புறப்பட)

ஸ்ரீ:— (தனக்குள்) ஆஹா! ச்ருதி எதிர்போகிறாப் போலிருக்கிறது. (ப்ரகாசமாய்) ஸத்யா—நில், நில்—வஸந்தகா இந்த விஷயத்தில் உன் அபிப்ராய மென்ன.

வஸ:— (தனக்குள்) ஆஹாஹா—பாபத்துக்குப் பைவன்-நான் ஒருத்தனிருக்கிறேனென்று இதை என்தலைமேல் சுமத்த நண்பன் நினைத்திருக்கிறான்போலும்—ஆகட்டும்—இப்பொழுது எந்தப் பக்கம் பார்த்தாலும் என் கழுத்திற்கே வந்துசேரும் ஆபத்து-ஸதிபதிகளுக்குள் உண்டாகும் வாதங்களில் மத்தியில் வருபவர் பாடு திண்டாட்டம்தான்—ஆகவே—மௌனமே எனக்கு ஸர்வார்த்தஸாதனம்.

ஸத்:— துஷ்ட ப்ராம்மணா—என் பதில்லை? உனக்கு காது எப்பொழுது செவிடானது?

ரு:— ப்ராம்மணோத்தமா ந்யாயானுகுணமாகப் பதில் சொல்லுங்கள்.

வஸ:— (தனக்குள்) அடடா—இந்த தர்மஸங்கடத்திலிருந்து தப்புவது எப்படி—என்ன செய்யலாம்? (ஆலோசித்தல்)

ஸத்:— என்ன இன்னமும் ஆலோசனையா? சொல்கிறாயா—இல்லையா?

ஸ்ரீ:— நண்பா! என்ன உன் அதிதீக்ஷண்ய புத்திக்கு மிஞ்சின விஷயமாயிருக்கிறதா இது?

வஸ:— இதற்கு மிஞ்சின கஷ்ட விஷயம் வேறே எதுவுமிராது—இதோ சொல்கிறேன். நண்பா "ருக்மணி தேவி க்ருஹத்திற்கு"— (ஸத்யாபாமா 'ஆ' என்று உருமக் கண்டு) ஸத்யபாமாதேவி க்ருஹத்திற்குத்தான். (ஜாம்பவதியைப் பார்த்து)

இரண்டு க்ருஹங்களிலும்போய் விருந்து ஸாப்பாடு செய்வதுதான் மிகவும் உசிதமான கார்யமாகும்—ஸாப்பாட்டை விடவா—'

ஸ்ரீ:— நண்பா—என்ன நல்ல தீர்மானம்! உன்னைப்போன்ற போஜன ப்ரியனுக்கேற்றபடியே பதில் சொன்னாய்.

ஸத்:— மூர்க்கா! ஏதோ ஒருவர் க்ருஹத்திற்கு என்று தீர் மானமாய்ச் சொல்லலாகாதா?

வஸ:— உங்கள் க்ருஹத்திற்கு—இல்லை இல்லை—ருக்மணி தேவி க்ருஹத்திற்கு—இல்லை—உங்கள் க்ருஹத்திற்கே—ஐயையோ என் மதியும் போய்விட்டதே—என்னைக் கேட்கவேண்டா மிந்த விஷயத்தில்.

ஸத்:— நாதா! இவன் அங்குமிங்கும் ஆட்களின் முகம் பார்த்து மிகவும் பயப்படுகிறான்- இவன் அபிப்ராயம் மாத்ரம் தாம் எனது க்ருஹத்திற்கு வரவேண்டுமென்று தான்—வாருங்கள் (கையைப் பிடித்தழைக்க)

ஜா:— ருக்மணிதேவி வாரும் ஸத்யபாமா விஜேயஸ் என்ன- மற்றவர் ப்ரார்த்தனைக்கு ஸம்மதிப்பதாவது! அவருக்கு ஸத்யா தேவி கோபம் தப்புமாயின்? நமது பூஜை புரஸ்காரங்கள் எல்லா வற்றையும்விட ஆயிரம் மடங்கு இவளுடைய கோபமே மேலல் லவா? புருஷர்களுக்கெல்லாம் அப்படித்தானே.

வஸ:— (ஸபையை நோக்கி) நிஜமே! நிஜமே! இதற்கு என் நண்பனின் சரித்ரமே போதும்.

ஸத்:— ஜாம்பவதீ—பகவானின் சரிதை ம்ருகத்தின் புத்ரி தான் அறியக்கூடும்—அல்லவா? நாதனுக்கு நீ அந்த புத்தி போதிக் காமல் உன்வழி பார்த்துப்போ. நாதா வாரும் போகலாம். (போகப் புறப்பட)

ரு:— (நமஸ்கரித்துப் பாதங்களைப் பிடித்து)- பக்தவத்ஸலா- தாம் பக்தர்களின் ப்ரார்த்தனையை அங்கீகரிக்கக் கூடாதா? த்ரி லோக நாயகா—நம்பினவர்கள் எல்லோருக்கும் அபிஷ்ட ப்ரதானம்

செய்யக் கங்கணம் பூண்ட பக்தவத்ஸலா—தம்மை நம்பித் தமது மங்கள பாதங்களைப்பற்றி யிருக்க இந்த ஸமயம் என் பந்து ஜனங்களின் முன் எனக்கு அவமானம் ஏற்படாமல் என்னைக் காரும்.

நா:— நானிதோ போகிறேன். (பாடிக்கொண்டு ப்ரவேசம்).

ஸ்ரீ:— ப்ரிய மணிகளே! அதோ பாருங்கள் நாரதமுனி வருகிறார். வாருங்கள் எதிர்சென்று வணங்குவோம். (பார்யைகளுடன் நமஸ்கரிக்க)

நா:— மங்களமுண்டாகுக.

ஸ்ரீ:— நாரதமுனீந்த்ரா—தமது வருகையால் என் க்ருஹம் பாவனமானது. அன்றியும் ஸரியான ஸமயத்திற்கே வந்தீர் எனக்கு ஒரு தர்ம ஸம்சயம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது—பிறந்தநினமென்று ருக்மணியும்—புகுந்தநினமென்று ஸத்யையும் என்னை இன்று விருந்துக்கு அழைக்கிறார்கள்—ஏககாலத்தில்—தாம் தான் எந்த இடத்திற்குப் போவது உசிதமென்று சொல்ல வேண்டும்.

ஸத்:— நாதா ஸ்திரீ புருஷர் தர்க்கம் அன்யர்களா தீர்ப்பது? தமக்கு என்னைக் கோபமுண்டாக்கி வேடிக்கை பார்க்க ஆலோசனையோ? நான் போகிறேன்—தாமும் வருவதானால் என் கூட வாரும் (போகப்புறப்பட)

ஸ்ரீ:— இல்லையானால்—

ஸத்:— போம்—உமக்கிஷ்டம் வந்தபடி. நான் வேண்டாமென்றால் எனக்கு மாத்ரம் என்ன?—(நலினிக்கு ஸைகை செய்துவிட்டுப் போகிறாள்).

ஸ்ரீ:— ஸத்யா—(மந்தஹாஸத்துடன்) போகிறாயா?—இருக்கட்டும். நாரதரே! என்ன செய்யச் சொல்கிறீர்?

நா:—தேவா-தாமே தர்மகர்த்தா—தர்மபர்த்தா-தர்மபோக்தா-தமக்கா நான் தர்ம ஸம்சயம் தீர்ப்பவன்? நடந்தது—நடப்பது—நடக்கப்போவது-தமக்குத் தெரியாததா?

ஸ்ரீ:— நாரதரே—கேட்டேன் உம்மை—கேட்கக்கூடாதா? ஸத்யை அன்பிற் சிறந்தவள். ருக்மிணியோ—பக்தியே ஸ்வரூபம். இவர்களில் இரண்டுபேரிலும் யாருடைய ப்ரார்த்தனை யங்கீகரிப்பது—என்றுதான் தீர்மானப்படவில்லை.

நா:— பக்தவத்ஸலா—பக்த ஜனங்களை ரக்ஷிக்கவே அவதார மெடுத்திருக்கும் தமக்கும் இந்த ஸமயத்தில் செய்யவேண்டியது இன்னதென்று நான் தெரிவிக்கவேண்டுமா?

ஸ்ரீ:— அப்படியானால் ஸரி— வைதர்பீ—வா உன் க்ருஹத்திற்கே போவோம்.

ரு:—நாதா! பரம ஸந்தோஷம்-தம்மை நம்பினவர்களுக்கு என்ன குறை?

ஜாம்:— (தனக்குள்) இந்த ஸமயம் ஸத்யபாமை பார்த்தால் எப்படியிருக்குமோ?

ஸ்ரீ:— நாரதரே— எங்கள் அதிதியாய்த் தாங்கள் வரவேண்டும்—இனி போகலாமா?

ரு:— நாதா இப்படி—இப்படி (போகுதல்).

வஸ:—(போகும்பொழுது) அடடா! இன்று அவச்யம் ஏதோ ப்ளயம்தான் என் கழுத்துக்குக் கயிர் வராமலிருந்தால் போதும்.- (போகிறான்).

நலி:— (அவர்கள் போகும் பக்கம்பார்த்து)- இருக்கட்டும்—இந்த ஸங்கதியை தேவிக்குத் தெரிவித்து வேண்டிய ஏற்பாடு செய்கிறேன். (வேறு பக்கம் போகுதல்)

(திரை விழுகிறது)

---

## அங்கம் II—காக்ஷி 3

இடம்:— ஸத்யபாமா—அந்தப்புரம்.

(ஸத்யபாமா மனவருத்தத்துடன் சயனித்திருக்க நலினி பக்கத்திலிருந்து விசிறிக்கொண்டிருக்கிறாள்).

ஸத்:— நலினீ—என் ப்ராணப்ரியர் என் அன்பின் கண்யத்தை யறிந்திருந்தும் ருக்மிணி பக்தியுடையவளென்று அவள் ப்ரார்த்தனையை யங்கீகரித்தாரல்லவா—இனி நான் என்ன செய்வேன்.

நலி;— தேவீ! அதைர்யப்படக்கூடாது. ஸ்வாமி விதியில்லாமல் அந்த க்ருஹம் போனாரே யல்லாது அவர் தங்களைவிட அதிகமென்று எண்ணியா?

ஸத்:— நலினீ எப்படி நம்புவது நான்—அவரோ ருக்மணி பக்திக்கு மெச்சி அவர் வசமாய்விட்டாரே—ஸகி! யோசித்தால் எனக்கும் அவளது பக்தி மார்க்கமே பதியின் அன்பை நிலைநிறுத்தச்செய்ய உசிதமானதென்று தோன்றுகிறது—அய்யோ இனி என் ப்ராணநாதர் ஸௌக்யம் எப்படி ஏற்படப் போகிறது எனக்கு?

நலி:— தேவீ! வீண் கவலை வேண்டாம். ஸ்ரீக்ருஷ்ண ரெப்படியும் ஸத்யபாமா விதேயரல்லவா?

ஸத்:— இன்று நடந்த வ்ருத்தாந்தத்திலிருந்தே ஸத்யபாமா அவிதேயர் என்று தெரியவில்லையா.

நலி:— கொஞ்சம் பொறுத்துக்கொண்டிருந்து பாருங்கள் நான் சொல்வது ஸரியா அல்லவா வென்று.

ஸத்:— ஸகி ஒருவேளை ஸ்ரீக்ருஷ்ணன் இங்கே வந்தால்—வரட்டும்—வந்து இச்சக வார்த்தைகள் நான்கு சொல்லி அபலையான என்னை யேமாற்றிவிடுவார். என்ன செய்வது—என் அவமானம் அந்தக் கலஹக்காரர் நாரதருக்குத் தெரிந்தபின் லோகமெல்லாம் பறைசாற்றாதிருப்பாரா? இந்த்ராணி முதலியவர்களுக்கு இந்த ஸங்கதி பரம ஸந்தோஷ சமாசாரமாகுமே.

நலி:— தேவி! முன் அன்று பாரிஜாத வ்ருத்தாந்தம் மறந்துவிட்டீர்களா?

ஸத்:— அதை நான் மறப்பேனே? ஆயினும் இவ்விதம் அவமானப்படல் ப்ராணனையே வாட்டுகிறது. இந்த அன்பின் மஹாத்ம்யமெப்படியிருந்தாலும் ஸ்ரீக்ருஷ்ணன் ஓரவஞ்சக அனுராகம் காண்பிப்பதால் என் ப்ராணனும் பறந்துபோகும் போலிருக்கிறது- அப்பா! இப்பொழுது எந்த மஹா பக்தனாவது ஸ்ரீக்ருஷ்ணனைமட்டும் எப்பொழுதும் என் விஷயமாகவே ப்ரணய புத்தியுடையவனாகச் செய்து சலிக்கா திருக்க மந்த்ர மேதாவது உபதேசித்து எனக்குக் கவலையில்லாமல் செய்யக் காலம் வாராதா?

நலி:— தைவம் அவ்விதமே அனுக்ரஹிக்கும்—நீங்கள் எழுந்திருந்து போஜனம் செய்ய வாருங்கள்.

ஸத்:— உனக்கென்ன பைத்யமா—ஸ்ரீக்ருஷ்ணனைக் காணாமல் எனக்கு ஆஹாரமா?— (நாரதர் பாடிக்கொண்டு தூரத்தில் ப்ரவேசிக்க)

நலி:— தேவி! அந்தக் கலஹக்காரத் தாபஸியை உள்ளே வரவிடவா?

ஸத்:— தேவரிஷி நாரதரை அவ்விதம் சொல்வது அடாது- வரவிடு. விசேஷத்தைமட்டும் பார்த்துக்கொண்டிரு.

(நாரதர் ப்ரவேசிக்க ஸத்யபாமா நமஸ்கரிக்கிறாள்)

நா:— பர்த்தாவின் அன்பை அடைவாயாக.

ஸத்:— முனீந்த்ரா— வழிதப்பி இங்கு வந்தாற்போலிருக்கிறது.

நா:— அதென்ன அப்படிச் சொல்கிறாய். நன்றாய் வழி பார்த்துக்கொண்டேதான் வந்திருக்கிறேன் இங்கு.

ஸத்:— பக்தி ஸ்வரூபமான ருக்மிணி க்ருஹம் தம் போன்றவர்களுக்கு உசிதமான இடமாகும்—என்போன்றவர் க்ருஹம் வந்தால் பாவம் ஸம்பவிக்காமலிருக்குமா?

நா:— ஸத்யபாமாதேவி—நான் சற்றுமுன் செய்த தீர்மானந்தானே உன்னை இப்படிச் சொல்லச் செய்தது. நல்லது—நான்

எதற்காக இப்படிச் சொன்னேன் என்று இன்னும் தெரிந்து கொள்ளவில்லை யல்லவா? நான் எப்பொழுதும் உனது நலத்தைக் கோருபவனில்லையா — பாரிஜாதலதா வ்ருத்தாந்தம் ஒன்றாவது ஞாபகமில்லையா உனக்கு?

ஸத்: — முனீந்த்ரா — அது ஞாபக மில்லாமலென்ன — ஆனால், இதற்கும் அதற்கும் என்ன ஸம்பந்தம்?

நா:— ஸ்வல்ப அவமதிப்பு ஏற்பட்டால் பிறகு உனக்கு மஹா ஸந்தோஷத்தை உண்டாக்கினேன் — ஸரி போகட்டும் — உனக்கு நான் அபகாரம் செய்தேனென்று எண்ணினால் உனக்கு வேண்டிய உபகாரம் செய்கிறேன் — என்ன வேண்டும் கேள்.

நலி:— (காதில்) அம்மா — அந்த உபதேசம் விஷயமாய்க் கேளும்.

ஸத்:— நிச்சயமாய் உபகாரம் செய்வீர்களா? அப்படியானால் என் துக்கமெல்லாம் மாயமாய்ப் பறந்துபோகும் இனி.

நா:— நான் செய்கிறேனென்றால் அதற்கு ஸந்தேகமும் உண்டா — ஆயினும் உன்னைப்போன்றவர்களுக்கு நான் என்ன உபகாரம் செய்யமுடியும்? உனக்குங்கூட துக்கம் எப்படியுண்டாகும்? ஸத்ராஜித் புத்ரீ — ஸௌந்தர்யவதி ஸௌபாக்யவதிகளுள் முதன்மையான உனக்கு-ஜபதபானுஷ்டான ஸந்தானத்தினால் அடைந்த ஸ்ரீக்ருஷ்ண ஸஹாயமுடைய உனக்கு — என்னால் ஆகவேண்டியது என்ன — சொல்வாய். உனக்கென்ன குறையென்று என் உத்தாரத்தை விரும்புகிறாய்?

ஸத்: — முனிபுங்கவா! தாம் சொன்னபடி எத்தனை இருந்தாலும் என்ன ப்ரயோஜனம். குஸுமகோமளமான ஜீவ குஸுமங்களுக்கு அன்பே யல்லவா முக்ய ப்ராணாதாரம். இந்த ஸகிகள் — மஹாதனங்கள் — மேலா விசேஷங்கள் — நானாலங்காரங்கள். திவ்ய வஸ்த்ரங்கள் நவரத்னமணிஹாரங்கள் இவை யெல்லாமிருந்தும் — ஸ்வாமீ — அந்த ப்ராண வல்லபரின் அன்பு மட்டும் ஒன்று இல்லையானால் வானத்தின் மழை நீரில் பெய்ததுபோலே தான் அல்லவா?

நா:— ஸ்ரீக்ருஷ்ணன் உனக்கு எப்பொழுதும் விதேயனாயிருக்க உனக்கும் அந்தவிதமான சிந்தனையேன்.

ஸத்:— முனீந்த்ரா! அப்படி உண்மையா யிருந்தால் தாம் கொஞ்சம் முன்புதானே அதின் விவரமெல்லாம் நன்றாய்ப் பார்த் தீர்களே! அதிலேயே தெரியவில்லையா உண்மை. அனேக ஸ்த்ரீ களையுடைய ஸ்ரீக்ருஷ்ணன் சரிதம் நான் அநேக விதமாய் அவ ரது அன்புக்கும் ஆதரணைக்கும் ஒரே இருப்பிடம்தானோ என்று கண்டறிய ப்ரயத்னம் செய்து என் மனோரதம் வீணாயிற்று.

நா:— அம்மம்மா! இது நிச்சயமாகவா?

ஸத்:— ரிஷிபுங்கவா! என் மனோஹரனின் சரிதம் தமக்கு நன்றாய்த் தெரியாததா? எனக்கும் அவருக்கும் இதன் மூலமாய்க் கலஹம்கூட ஏற்பட்டிருக்கிறது. தாங்கள்தான் தயை செய்து ஏதாவது ஒரு வ்ருதமோ மந்த்ரமோ—தந்த்ரமோ செய்து-ஸ்ரீக்ரு ஷ்ணனை ஸத்யபாமா விதேயனாகச் செய்து புண்யம் கட்டிக்கொள் ளவேண்டும். இதுதான் தாம் எனக்குச் செய்யவேண்டிய உப காரம்.

நா:— (தனக்குள்) ஆஹா! அன்பினால் எத்தனை ஸ்வய நலக் காரியா யிருக்கிறாள்—என் வேலைக்கும் அநுகூலம்தான்.

ஸத்:— ஸ்வாமீ! என்ன பதிலில்லை. தமக்கும் இது ஸாத்ய மில்லையா?

நா:— ஸாத்ய மில்லாமலென்ன? கேள். பூர்வத்தில் இந்த் ராணி கௌரீ அருந்ததி முதலான நாரீமணிகள் நோற்ற சிறந்த வ்ருதம் ஒன்று இருக்கிறது. அதைத்தான் புண்யக வ்ருதமென் றும் இஷ்டபதிஸித்த வ்ருதமென்றும் சொல்வார்கள். அதையே நோற்று ஸதீமணிகள் எல்லாரும் தனவந்தர்களாயும் புத்ரவதி களாயும் முக்யமாய் ஸதிபதிகள் நகமும் சதையும் போல் சேர்ந்து வித்யாஸ மன்னியில் மற்றவர்கள் பார்த்து அதைக் கைப்பற்ற முயற்சிக்கும்படி ஏற்பட்டிருக்கிறது.

ஸத்:— இதையே நானும் அவச்யம் கைப்பற்ற வேண்டும். அதன் விவரம் என்ன! கொஞ்சம் ஸவிஸ்தாரமாய்ச் சொல்லுங் கள்.

நா:— ஸாவதான மனதுடன் செவிகொடுத்துக்கேள்—ஓர் சுபதினத்தில் ப்ராதக் காலத்தில் தம்பதிகள் இருவரும் புண்ய தீர்த்

தத்தில் ஸ்நானம் செய்து ஸர்வாலங்க்ருதராய் வ்ருதம் நோற்று விருந்து போஜனமளித்து வ்ருதம் உத்யாபனம் செய்யவேண்டியது. சாந்தசித்த விசிஷ்ட வம்சஜனும் ஸஜ்ஜன சரித்ரனும் வேதாந்த சாஸ்த்ர விசாரதனும் சுசியான தாபஸனும் இருக்கப்பட்ட மறையோனை யழைப்பித்து அவருக்கு களபகஸ்தூரிகளால் மங்கள அலங்காரம் செய்வித்து உன் காந்தனை தானம் செய்தால் உடனே எண்ணங்கள் எல்லாம் நிறைவேறும்.

ஸத்:— முனீந்த்ரா! என்ன-என்ன? பர்த்ரு தானமா? நன்று நன்று! இப்படிச் செய்தால் லோகமெல்லாம் பரிஹாஸம் செய்யாதா? இது சக்திக்கும் யுக்திக்கும் ஏற்றதா? தேவர்களுக்கும் மணி விசேஷங்கள் தனதான்ய வஸ்த்ர வாஹனங்கள் வ்ருதத்தில் தானம் செய்வது சுபமென்று நோன்பு ஆரம்பிப்பார்கள். யாராவது பதியை தானம் கொடுக்க ஸம்மதிப்பார்களா? என்ன முனீந்த்ர இது வேடிக்கையாக இருக்கிறதே.

நா:— வீணாய் ப்ரீதியடையாதே. இந்த தானம் பேருக்கு மாத்ரமேதான் அப்படி. தானம் செய்யப்பட்ட பர்த்தாவைத் திரும்ப அடைய அவரது நிறை தனமோ அல்லது மற்ற எந்த வஸ்துக்களோ நிராசில் வைத்து நிறுக்துக்கொடுத்து அவரைத் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். உன்னிடம் ஸ்ரீக்ருஷ்ணனின் நிறைக்கு ஸரியாக தனமோ மற்ற வஸ்துவோ இல்லையானால் நீ இந்த தானம் செய்கிற யோசனையை விட்டுவிடவேண்டியதுதான்.

ஸத்:— முனீந்த்ரா! பர்த்ருதான மென்றால் இவ்வளவுதானா? என்னவோவென்று மிகவும் பயந்தேன்—கட்டாயம் நான் செய்கிறேன். தனத்துக்கென்ன குறை எனக்கு? ஸ்ரீக்ருஷ்ணர் ராஜாக்களை யெல்லாம் ஜயித்து எனக்களித்த தனமில்லையா? ப்ரதிதினமும் இரண்டு பாரம் ஸ்வர்ணம் அளிக்கும் என் பிதா கொடுத்த ஸ்யமந்தகமணி தானில்லையா!

நா:— இருக்கலாம். ஆனால் அதனால் ஸ்ரீக்ருஷ்ணன் நிறை ஸரியாகுமா? யோசித்து வ்ருதத்துக்கு ஆரம்பம் செய்யவேண்டும். இன்றேல் எதாவது வருத்தத்தினால் பச்சாத்தாபப்பட்டு ப்ரயோசனம் உண்டாகாது.

ஸத்:— ஸ்வாமீ! நான் இந்த வ்ரதம் செய்து முடித்தால் ருக்மணி முதலியவர்கள் கதி என்னவாகும் என்று கருதி என்னைப் பயப்படச் செய்கிறீர்களா? —என்னிடமுள்ள தனத்தால் ஒரு க்ருஷ்ணனை மட்டுமில்லை; கோடி க்ருஷ்ணனை வேண்டுமானால் நிறுத்துப் பார்க்க முடியும். அத்தனை கொஞ்சம் தனம் கொடுத்தால் எனக்குக் குறைவாயிருக்குமே—ஆதலால் என் சொத்து எல்லாவற்றையுமே கொடுக்க ஸம்மதம்தான். தாம் உபதேசித்தபடி வ்ருதத்தினால் ஸ்ரீ க்ருஷ்ண அன்பாகிற தனம் நான் அடைவதானால் எனக்கு மற்ற இந்த தனமெல்லா மெதற்கு?

நா:— (தனக்குள்) என்ன ஏடவிச்வாஸம். (ப்ரகாசமாய்) தேவீ! ஸ்ரீக்ருஷ்ணனுடைய கனம் தனமோ மற்ற வஸ்துவோ முன்பு அளித்து பின் உன் இஷ்ட ப்ரகாரம் செய்யலாம். ஸ்ரீ க்ருஷ்ணனுடன் பாரிஜாதமும் சேர்த்துக்கொடுக்க வேண்டும்.

ஸத்:— அப்படியே செய்கிறேன். ஸ்ரீக்ருஷ்ணன் விஷயமாய் இந்த தானத்துக்கு அந்தப்பாரிஜாதம் உபயோகிக்கப்படாத போனால் அந்த வ்ருக்ஷம்தான் எனக்கென்ன ப்ரயோஜனம்—இனி இதற்கு எப்பொழுது நல்ல நாளென்றுமட்டும் பார்த்துச் சொல்லுங்கள்.

நா:— நாளையே சுபதினம்தான்: ஆனால் உன் பர்த்தாவை தானம் யாருக்குக் கொடுக்க உத்தேசித்திருக்கிறாய்? அவர் நான் சொன்ன ப்ரகாரம் ஸர்வலக்ஷணங்களும் உள்ளவராயிருக்க வேண்டும். தேவ ரிஷியாயாவது ப்ரும்ம ரிஷியாயாவது இருந்தால் மிகவும் உத்தமம்.

ஸத்:— முனீந்த்ரா! ஸர்வ லக்ஷணங்களுமுள்ள தேவரிஷி புங்கவரான தாமிருக்க நான் வேறு யாருக்கு இந்த விசேஷதானம் செய்ய எண்ணுவேன். தாமே தான் இந்ததானம் பெற்று என்னை அனுக்ரஹிக்கவேண்டும்.

நா:— கல்யாணி! இந்த தானத்தினால் நானும் தன்யர்களுள் தன்யனவேன்.

ஸத்:— நானும் தன்யளாய் விடுவேனல்லவா?

நா:—ஸந்தேகமில்லாமல் ஆனால் உன் ப்ராணேச்வரர் இதற்கு ஸம்மதிப்பரோ என்னவோ? அவரை அங்கீகரிக்கச் செய்ய இனி நீ ப்ரயத்தனப்பட வேண்டும்.

நலி:— தேவா! அந்த முகுந்தன் இங்கு வந்தால் இது எல்லாம் ப்ரமாதமா என் தேவிக்கு?

நா:— இதோ இப்பொழுதே வருவார் அவர் இங்கு—எல்லாம் உன் கையில்தானிருக்கிறது.

ஸத்:— ஸ்வாமீ! அந்த விஷயமாய் தாம் ஸம்சயமே கொள்ளவேண்டாம். அவர் இதற்குத் தவறாமல் ஒப்புக்கொள்வார். நாளை ப்ராதக் காலத்தில் தாம் வந்து வ்ருதத்தை நடத்தித்தர வேண்டும்.

நா:— வ்ருத விதானம் உங்கள் புரோஹிதர் கர்க்காசாரியாரை கேட்டால் அவர் சொல்வார். அவருக்கு இந்த விஷயமெல்லாம் நன்றாய்த் தெரியும். அவரே தானே வ்ருதத்தை நடத்துவார். நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்—ஸரி. இனி நான் போய்வரவா?

ஸத்:— அப்படியே போய்வாருங்கள். நாளை உதயமாத்ரம் தப்பாமல் வந்துசேர வேண்டும்.

நா:— தப்பாமல் வருகிறேன். அந்த விஷயத்தில் மாத்ரம் ஸந்தேகமே வேண்டாம் (போகுதல்).

ஸத்:— நலினீ—பார்த்தாயா என் அதிர்ஷ்டத்தை. இந்த மஹானுபாவர் ஸமயத்தில் வந்து என் கோரிக்கைக்கு அனுகூலமாய் இந்த வரமளித்தார். வ்ருதம் நோற்று க்ருதார்த்தளாகிறேன். இனி நாதர் வந்ததும் அவரை ஸம்மதிக்கச் செய்யவேண்டும். அது ப்ரமாதமா?—(நகைகளை சிலவற்றைக் கழற்றி) இந்த நகைகளை பத்ரம் செய்துவை. கோப க்ருஹத்துக்குச் சென்று கோபவேஷம் அணிகிறேன். அபலைகளுக்கு மஹாவீரர்களையும் ஜயிக்க ஸாதகமானது இந்த கோபவேஷம்தானே—

நலி:— இதற்கு தமது சரித்ரமே ஸாக்ஷி.

ஸத்:— நலினீ நீ வெளி வாசலிலிருந்து வாஸுதேவரோ, வஸந்தகனோ வந்தால் கொஞ்சம் தாமதிக்கச் செய்து உள்ளே வர விடு—தெரியுமா?

நலி:— அப்படியே செய்கிறேன் அம்மணி.

ஸத்:— இனி போகலாம்.

(இருவரும் வேறு பக்கமாய்ப் போகுதல்)

---

## அங்கம்—2. காக்ஷி—4.

இடம்:— த்வாரகாபுரி—ராஜவீதி.

(ஸ்ரீக்ருஷ்ணன் அவஸர அவஸரமாய் முன்நடக்க வஸந்தகன் மெல்ல மெல்ல நடக்கமுடியாமல் தள்ளாடி நடக்கிறான்—நலினி தெருவாசலில் காவலிருக்கிறாள்).

வஸ:— (தள்ளாடித் தடுமாறி ச்ரமப்பட்டு) நண்பா! நண்பா! கொஞ்சம் மெல்லநட. எனக்கு கால் தள்ளாடுகிறது அப்பா— அந்த ருக்மணி தேவி க்ருஹத்தில் பரிமாறின அப்பம், வடை, பூரி, ஸொஜ்ஜி, ஸோமாஸ, இவையெல்லாம் சேர்ந்து என் வயிற்றுக்குள் மஹா தடபுடல் செய்கின்றன.

ஸ்ரீ:— வஸந்தகா! இதுதானே ஸமயம் உன் பிரதாபங்களை வார்த்தைகளுக்கு-கொஞ்சம் விரைவாய் நடந்துவா. ஸத்யபாமை என் தர்சனத்துக்காக எவ்வளவு பரிதபித்துக் கொண்டிருப்பாள். நான் எத்தனை கடின சித்தனென்று தூஷிக்கிறாளோ?

வஸ:— என்ன ஸத்யாதேவி உனக்காக பரிதபிப்பாளா? நன்று "இஷ்டமானால் வாரும்" "இல்லாவிட்டால் போம்" என்று சொல்லித் திரும்பிப்பாராமல் ஓடிப்போனாளே.

ஸ்ரீ:— அப்படிச் சொன்னால் என் பின்னாலேயே ஓடிவர வேண்டுமென்று அர்த்தமில்லையா?

வஸ:— என்ன 'போ' வென்றால் 'வா' வென்று அர்த்தமா? இதென்ன விபரீத வ்யாக்யானம்?

ஸ்ரீ:— காமுகர்கள் காமினிகளின் வார்த்தைகளுக்கு இவ் விதம்தான் வ்யாக்யானம் செய்யவேண்டியது. இது தெரியாதா?

வஸ:— ஆனால் அவர்கள் ஹ்ருதயத்தைக் கண்டுபிடிப்பது கஷ்டம்தான்.

ஸ்ரீ:— அதற்குச் ஸந்தேஹமென்ன!

வஸ:— ஓஹோ! ஸமயம் விசித்ரம்தான்.

ஸ்ரீ:— அதோ பார்—வாசலில் நிற்பது நளினியல்லவா? நான் நினைத்தபடியே ஸத்யை இவளை நாம் உள்ளே போகாதபடி காவல் வைத்திருக்கிறாள்.

வஸ:— அப்படியானால் கஷ்டம் ஆரம்பமாய் விட்டது ஆனாலும் நண்பா—ருக்மணி தேவி க்ருஹத்துக்குப் போனதும் இந்த ஸத்ராஜித் தேவிக்கு இத்தனை மனஸ்தாபமேன்? இதிலேயே உன் அன்பெல்லாம் தீர்ந்துவிட்டதாக எண்ணிவிட்டாள் போலும்.

ஸ்ரீ:— நண்பா! அன்பு மிகுந்தவர்களின் பித்தத்துக்கு அளவுண்டா? அதற்கு காரண காரணமும் சொல்லமுடியுமா? ஹிதாஹித ஞானமும் போய்விடுமல்லவா அந்த ஸமயத்தில்? இருக்கட்டும். இந்த ஸத்யையின் ஆட்டவாட்டங்கள் எல்லாம் இன்னும் ஒருநாள் தானே.

வஸ:— இது மாத்ரம் நிஜமானால் நீயும் நானும்கூட க்ருதார்த்தர்களாய்விடுவோம்.

ஸ்ரீ:— அப்படியே ஆவது நிச்சயம். ஆயினும் இப்பொழுது செய்யவேண்டுவதென்ன—ஸத்யையின் பக்கம் செல்வது எப்படி?

வஸ:— உனக்குத் தெரியாத தந்த்ரமுண்டா?

ஸ்ரீ:— நான் போனால் இந்த நளினி கொஞ்சம் பிகுவு செய்வாள். ஆகையால் நீ முன்போய் நான் உள்ளே செல்ல வழி பார்.

வஸ:— இதென்ன ப்ரமாதம். நீ இங்குதானே மறைந்து இரு—நான் வருகிறேன் — (ஸ்ரீக்ருஷ்ணன் ஒரு பக்கமாய் மறைவாய் நிற்க—வஸந்தகன் நளினி பக்கம் போகிறான்.)

நளி:— அதோ ஸ்ரீக்ருஷ்ணனின் நண்பர் அந்த வஸந்தகர் வருகிறார். தேவி ஆக்ஞைப்படி கவனிக்கவேண்டும்.

(வஸந்தகன் உள்ளே ப்ரவேசிக்கப்போக நளினி தடுத்து)

நளி:— ஐயா வஸந்தகரே இது என்ன இப்படி கண்ணை மூடிக்கொண்டு போகிறீர்? நில்லும் நில்லும்.

வஸ:— என்ன தொண்டையை வற்றவைக்கிறாய் நீ? என்னைப்போலுள்ள ப்ராமஹணனுக்குமா உள்ளே போகத் தடை?

நளி:— உம்மையும் உமது நண்பரையும் கூட உள்ளே வரவிடக் கூடாது என்று எங்கள் தேவியின் உத்தரவு.

வஸ:— ஓஹோ! என் நண்பன் இங்கே வந்தால்தானே?

நளி:— என்னய்யா அப்படிச் சொல்கிறீர்! உம் நண்பர் உமது பின்னாலே வரவில்லையா?

வஸ:— யார் சொன்னார்—நீ தான் பாரேன் இருக்காரோ வென்று. உனக்கும் கண்ணில்லையா—கொட்டை கொட்டையாய்—என் நண்பனா இனி இங்கு வருவான். தன்னைத் தெய்வமாகப் பாவித்து பாத பூஜை செய்யும் ருக்மணியைவிட்டு—கலஹத்தையே ப்ரியப்படும் உன் தேவியிடம்? கண்ணாலேகூடப் பார்க்கமாட்டாரே.

நளி:— என்ன என்ன! இது நிஜமாகவா?

வஸ:— நிஜமில்லாமல்—நான் என்ன உன்னிடம் சும்மா விளையாடவா வந்திருக்கிறேனென் றெண்ணினாய் பின்?

நலி:— அப்படியானால் நீர் சொன்ன வார்த்தைகளை நான் என் தேவிக்குச் சொல்லி வருகிறேன். நீரிங்கு தானே இரும் (நலினி வருத்தத்துடன் அதிக அவஸரமாய்ப் போகுதல்- ஸ்ரீக்ருஷ்ணன் வஸந்தகனிடம் வந்து)

ஸ்ரீ:— வஸந்தகா! நன்று நன்று—எங்கு கற்றாய் இந்த ஜாலமெல்லாம்.

வஸ:— இதெல்லாம் நண்பா உனது ஸஹவாஸபலம்தானே.

ஸ்ரீ: — (மந்தஹாஸத்துடன்) போதும் போதும்-வா நாம் உள்ளே போகலாம்.

வஸ:— நண்பா! அப்படியே செய்வோம். ஆனாலும் ஒரு வார்த்தை சொல்கிறேன்—கோபமுண்டாகாதல்லவா?

ஸ்ரீ:— வஸந்தகா உன் வார்த்தைக்கும் நான் கோபம் கொண்டதுண்டா எப்பொழுதாவது? என்ன அது சொல்.

வஸ:— (ஸ்ரீக்ருஷ்ணன் ஸமீபம்வந்து மெல்ல,- இந்தத் தடவையும் ஸத்ராஜித் தேவிக்குக் கோபம்தான் இருக்கும்—முன் பாரிஜாத பஹரணகாலத்தில் இருந்ததுபோல் கால் பக்கத்திலில்லாமல் தலைப்பக்கமாய் நின்றால் நல்லது என்று தெரிவித்தேன்.

ஸ்ரீ — (சிரித்து) வஸந்தகா-உன் விளையாட்டுப் போதும்-வா.

(போகுதல்)

## அங்கம்—2. காக்ஷி—5.

இடம்:— ஸத்யபாமையின் கோபக்ருஹம்.

(ஸத்யபாமா நகைகளன்னியில் அழுக்கு வஸ்த்ரம் அணிந்து கோபமுகத்துடன் படுத்திருத்தல்— நலினி பரபரப்புடன் ப்ரவேசித்தல்).

நலி:— தேவி! தேவி! எழுந்திருங்கள். இன்று முதல் தங்களுடைய ப்ராணேச்வரர் ருக்மணிதேவி க்ருஹத்திலேயே இருக்கப்போகிறாராம்.

ஸத்:— (படுக்கையில் எழுந்து) என்ன சீ; யாருனக்கு இந்த வார்த்தை சொன்னது.

நலி:—வஸந்தகர் அம்மா.

ஸத்:— நான் இந்த வார்த்தையை ஒருகாலும் நம்பமாட்டேன். ஸ்ரீக்ருஷ்ணராவது என்னைவிட்டு வேறிடம் தங்குவதாவது? இது அந்த ப்ராம்ஹணரின் ஸொந்தக் கைச்சரக்காயிருக்கும்— நாரதமுனீச்வரர்கூட அவர் இங்கு வருவதாகச் சொல்லவில்லையா.

(வஸந்தகனுடன் ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரவேசித்து ஸத்யபாமை பின்பக்கமாகவந்து கண்களைப் பொத்தி)

ஸத்:— யாரது (கையால் தடவிப் பார்த்து ஸ்ரீக்ருஷ்ணனென்று அறிந்து கைகளால் விடுவித்துத் தள்ளி) என் பக்கம் வரவேண்டாம். (தூரப்போய் வேறுபக்கம் திரும்பி நிற்கிறாள்)

ஸ்ரீ:— ஸத்யா! என் அன்பின் தன்மையை நன்றாய் அறிந்தும் நீ இப்படிக் கோபம் கொள்ளலாமா? இதோ பார். என் பக்கமாய் உன் த்ருஷ்டியைச் செலுத்தி உன் கிளிமொழிகளால் என் செவிக்கின்பமடையச் செய். இந்த மோடியை விட்டுவிடு. (பக்கலில்செல்ல இன்னுக் தூரத்தில் சென்று) ஒருமுறை உன்ப்ரஸன்ன பார்வையை என் பக்கம் திருப்புவாய்.

வஸ:— அப்பா! பஹுவல்லபத்வம் என் மித்ரனுக்காகாதும் கூடாது. அப்பா. (நலினியுடன் தூரத்தில் போகுதல்).

ஸ்ரீ:— ஸத்யா! மனோ வாக்காய கர்மங்களில் உன்னைத் தவிர நான் அன்ய ஸ்திரீகளைக் கோரினவனோ? பெயருக்கு மாத்ரம் கொஞ்சம் அப்படிப் பார்ப்பேனேயன்றி—நிச்சயமாய் உன்னையே நான் அன்புடன் பார்ப்பது என்பதை மறந்தாயோ?

ஸத்:— கபடநாடகா! இந்த நயவஞ்சக வார்த்தைகளுக்கென்னகுறை? நீ பிறந்தவுடன் உனக்குப் புகட்டின எண்ணையுடன் சேர்ந்த வித்தையல்லவா நயவஞ்சகம்! தாய் தகப்பன் குரு தைவம் பந்து மித்ரர்கள் எல்லாம் பதியேவல்லபர் ஒருவரேயென்று எல்லா அன்பையும் சேர்த்து உம்மீது வைத்திருக்கும் என்னை எல்லோரும் அவமதிக்கச் செய்துவிட்டு இன்னும் என்ன செய்ய எண்ணி இங்கு இப்பொழுதும் வந்தீரோ—ஆத்ம ஸுகி ப்ராணயவஞ்சகா?

ஸ்ரீ:— நீயும் என்னை யறியாதவள்போல் பேசலாமா? நான் உனது தாஸனல்லவா? தாஸர்களிடம் கோபம்காட்டுதலே தண்டனைக்கு ஸமானமல்லவா — இதோ வேண்டுமென்றால் உனக்கு நமஸ்காரம் செய்கிறேன் அங்கீகரிப்பாய். (ஸமீபத்தில்போய் நமஸ்கரிக்கப்போக)

ஸத்:— (தடுத்து) வேண்டாம்! வேண்டாம். தாம் தூரவேயிருந்தால் போதும். உம்முடைய ஸாஹஸவார்த்தைகள் எல்லாம் போதும்—உம்மையும் உமது தாஸத்வமும் நம்பித்தான் கெட்டேன்— போதும் உமது மந்தஹாஸப் பேச்சு. எத்தனை தரம் என்னிடம் இந்த இச்சக நச்சு வார்த்தைகள் சொல்லிப் பிறகு மற்ற ஸ்திரீகளுடன் அநேக லீலையுடன் திரிவதும்—ஒரே நிச்சயமாய் என்னைவிட்டு அவர்களையே ஸந்தோஷிக்கச் செய்யலாகாதோ?

ஸ்ரீ:— ப்ரேமமணி! இப்படிக் கடின வார்த்தைகள் சொல்வது தர்மமா? இனியாவது உன் ப்ரணய கோபத்தைவிட்டு நீயும் ஸுகப்பட்டு என்னை ஸுகப்படச் செய்வாய் — இந்த வஸந்த ருதுவில் இப்படிப்பட்ட ப்ரணயகோபம் ப்ராணாந்தகமாகும். அதோ பார் (பக்கத்தில் நெருங்கிப் போய்த் தூரத் தள்ளப்பட்டு) ப்ரியே! இன்னமும் பிடிவாதம்தானா? நான் சொல்வதைக் கேள். பிறகு—

ஸத்:— தாம் சொல்வதைக்கேட்டே நான் இந்த அவஸ்தைக்கு வந்து சேர்ந்தேன். இனி என்னை விட்டுவிட்டுப்போய் உம்மை பக்தியுடன் ஸேவிக்கும் ஸ்த்ரீகளை இம்மாதிரியே நம்பச் செய்து அவர்களையும் மோசம் செய்யும். உமக்கு இனி என் அன்பு எதற்காக?— போதும் போதும்—அப்பா (காதைப் பொத்திக்கொள்கிறாள்).

ஸ்ரீ:— அன்பே! இதுவரை நான் அவ்வப்போது காண்பிக்கும் உதாஸீனத்திற்கு காரணமில்லாமல் போகவில்லை. எனக்கு உன்னிடமிருக்கும் இந்த அன்பு அளவிட்டுச் சொல்ல முடியாதது. (ஸத்யபாமா ஸம்சயத்தைக் காண்பித்து அபிநயிக்க) இதற்கு என் அந்தராத்மாவே ஸாக்ஷி. உன் ஹ்ருதயமும் ஸாக்ஷிதான். நான் இனிதப்பார்க்கிலும் என்னதான் சொல்ல முடியும்.

ஸத்:— உமது நடத்தையில்—

ஸ்ரீ:— அதெல்லாம் எனக்கு உன்னிடமுள்ள அன்பின் அடையாளங்களே.

ஸத்:— ஆமாம் ஆமாம்—என்னைத் திரஸ்கரிப்பதுகூடத் தமது அன்பின் அடையாளந்தானே?

ஸ்ரீ:— ஸம்சயமில்லாமல்: அந்த ஸந்தோஷத்திற்கு கங்கு கரையுண்டா? இந்த ரஹஸ்யம் அறிந்து உனக்கு என்னைப்போலே யே அவ்வப்பொழுது உன் ஸபத்னிகளும் உன்னை ஸந்தோஷிக்கச் செய்து உன் மூலமாய் என்னிடம் வரம்பெறக் கோருகிறார்கள்.

ஸத்:— (கிட்ட நெருங்கி) நாதா இது நிஜமாகவா? நம்ப லாமா?

ஸ்ரீ:— கண்ணே நிஜமில்லாமலா? பாரிஜாதலதா வ்ருத்தாந்தம் கொஞ்சம் ஞாபகப்படுத்திக்கொள்—ப்ரிய ஸதியின் கோரிக்கையை ஈடேற்றி அவளைத் திருப்திசெய்து தானும் ஸந்துஷ்டியடைவதல் லவா புருஷதர்மம்.

ஸத்:— ஆனால் தாமும் என்னிடம் என்ன வரம் வேண்டு மென்று கேட்கவா இப்பொழுது இங்கு வந்திருக்கிறீர்.

ஸ்ரீ:— ஸத்யா! அவ்வளவு நம்பிக்கையில்லையா? இப்பொ ழுது நீயே ஒருவரம் கேட்டுப் பரீக்ஷைபாரேன்.

ஸத்:— (தனக்குள்) இனி நாரதமுனி சொன்னபடியே செய்வேன். (ப்ரகாசமாய்)—(கையைப் பிடித்துக்கொண்டு)—அப் படியே செய்கிறேன். கொஞ்சம் முன்பு நாரதமுனீச்வரர் இங்கு வந்து எவ்வளவோ ப்ரீதியுடன் எனக்குச் சொன்னார்—வ்ருத மொன்று நோற்று அத்யந்த சுபமடையவேண்டுமென்று. அதற் குத் தமது ஸஹாயம் அவச்யம் வேண்டும். அது செய்வீரா— சொல்லும்-

ஸ்ரீ;— ஸத்யா! நாரதர் வ்ருதம் உபதேசித்திருந்தால் நீ அதைச்செய்ய என் ஸஹாயத்திற்கு ஸந்தேகப்படுவானேன். சொல் உடனே செய்வோம் தாமதமின்னியில்.

ஸத்:— நாதா! நாரதர் என்னைப் புண்யக வ்ருதம் நோற்க வேண்டுமென்று சொன்னார். அதன் விவரம் உங்களுக்குத் தெரியுமோ?

ஸ்ரீ:— அன்பே! எப்பொழுதும் நாரீவிஹார சித்தத்துடனிருக்கும் எனக்கு அந்த வ்ருதத்தின் விவரம் எப்படித் தெரிய வரும். அது எப்பேற்பட்டதாலுைம் த்ரிகாலவேதியான நாரத மஹரிஷி சொன்னால் அவச்யம் செய்யவேண்டியதுதான்.

ஸத்:— ப்ராண வல்லவா! அதற்கு—ஒரு தானம் அவச்யகமாம்—அதற்கு தாம்தான் ஸம்மதிக்கவேண்டியதாயிருக்கிறது.

ஸ்ரீ:— என்னது! தனமா தான்யமா பூஷணமா ஹாரமா மணியா—என்ன வேண்டும் சொல்.

ஸத்:— இவை யெல்லாமில்லை. தமது அனுக்ரஹத்தில் இவையெல்லாம் கோடி கோடியாய் என்னிடமில்லையா!

ஸ்ரீ:— பின் என்ன வேண்டும் சொல்.

ஸத்:— நீரே யோசித்துப் பாரும்.

ஸ்ரீ:— ஆனால் அது எதுவோ—நீயே தான் கேட்கவேண்டும். எனக்கொன்றும் தோன்றவில்லை.

ஸத்:— தாம் அதை ஸஹிக்க முடியவில்லையென்று ஒப்புக்கொள்ளும். அப்படியானல்—இப்படி ஸமீபமாய் வாரும்: காதில் சொல்லுகிறேன். (க்ருஷ்ணனின் காதில்) பர்த்ரு தானம் தான்.

ஸ்ரீ:— ஸத்யா! என்ன தானமது? பர்த்ரு தானமா?- உன் அன்பெல்லாம் இவ்வளவுதானே—இதென்ன அஸம்பவமான கார்யம்.

ஸத்:— ப்ராணேசா! அது அஸம்பவமான கார்யமென்று எனக்குத் தெரியாதா? தமது பூர்ண அனுராகமுண்டாக இந்த வ்ருதம் நோற்க நிச்சயித்தேன். வ்ருத அந்தத்தில் தமது தானமும் ஆவச்யகமாம்.

ஸ்ரீ:— ஸத்யா! இது மிகவும் விந்தையான வ்ருதமாயிருக்கிறதே. என்னை யாருக்குத் தானம் செய்ய எண்ணினாய்?

ஸத்:— யாருக்கோ என்பதென்ன? தம்மையே எப்பொழுதும் த்யானம் செய்யும் அந்த நாரதமுனீந்த்ரருக்குத் தான்.

ஸ்ரீ:— ஓஹோ! நாரதருக்கு என்னைத் தானம் செய்யப்போகிறாயா? ஸத்யா! நான் உனது தாஸன் என்பதைவிட்டு அனுயாஸமாய் அந்த ஜடதாரியின் தாஸனாகச் செய்யலாமா?—கஸ்தூரி திலகத்தைவிட்டு அர்த்தபுண்ட்ரம் பூணச் செய்வாரோ?—கௌஸ்துப மணி ஹாரத்தை எடுத்து தபஸிகள் அணியும் மணியை அணியச் சொல்வாரோ? பீதாம்பரங்களைக் களைந்து காஷாய வஸ்த்ரமும் கட்டச் சொல்வரோ! ஸ்த்ரீகளின் ஸங்கத்தை த்யஜித்து ஸன்யாஸியாயிருக்கச் சொல்வரோ? இன்னும் அவர் என்ன சொல்வரோ என்ன செய்வரோ அந்த கலஹாஸனன். த்ரிலோக ஸஞ்சாரி? அவரது வசம் மாத்ரம் என்னை ஒப்புவிக்காவிட்டால் போதும்.

ஸத்:— மனோஹரா! தம்மை அவருக்குத் தாஸனாய்ச்செய்து நான் சும்மா விட்டுவிடுவேனா? தானம் செய்த உத்தரக்ஷணமே தம்மைத் திரும்ப அடையாமல் நான் ஜீவனுடன் இருப்பேனா? தமக்கு இதுகூடத் தெரியாதா?

ஸ்ரீ:— ஸத்யா! தெரியாமலில்லை—பரிஹாஸத்திற்கே சொன்னேன்—ஸம்சயப்படாமல் உன் இஷ்டம்போல் தானம் கொடுத்து உன் மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்.

ஸத்:— நாதா! தம்மைப்போன்ற பதியிருந்தாலல்லவா ஸ்த்ரீகளுக்கு ஸௌகம் ஏற்படும். தானம் செய்தபிறகு நாரதமஹரிஷிக்கு தமது நிறை தனமோ மற்ற வஸ்துவோ கொடுத்துத் திரும்பப் பெற்று விடுவேன்.

ஸ்ரீ:— ஆனால் என்னத்தனை நிறை தனமோ மற்றவஸ்துவோ உன்னிடம் இருக்கிறதா? இல்லாவிட்டால் புண்யக வ்ருதம் ஆரம்பித்துப்பின் தனமில்லாமல் என்னையும் உன்னையும் மோசத்திற்குளாகாமல் பார்த்துக்கொள். முன்யோசனை யில்லாமல் வ்ருத ஆரம்பம் செய்யாதே.

ஸத்:— நாதா! நாரத மஹரிஷியைப்போல் தாமும் என்னிடமுள்ள தனதான்யங்களின் அளவு தெரியாதவர்போல் சொல்கிறீர்களே? இதற்குத் தாமும் ஸந்தேஹப்பட வேண்டுமா?

ஸ்ரீ:— ஸத்யா! ஆனால் நாரதரும்கூட உன் தன அளவைக் குறித்து ஸம்சயப்பட்டாரா?

ஸத்:— அவர் அறியாமல் அவ்விதம் பேசத் துணிந்தார்—இனி ஊரில் அழைக்க யாரை யனுப்பலாம்.

ஸ்ரீ:— அதற்கென்ன—நம்முடைய வஸந்தகனை யனுப்புவோம். வஸந்தகா! நீ போய் இந்த ஊர் ப்ராம்ஹணர்களை ப்ரத்ரு தான வ்ருத்தாந்தம் மட்டும் சொல்லாமல் நாளை வ்ருதத்திற்கு அழைத்துக்கொண்டு வருகிறாயா?

வஸ:— தப்பாமல் அழைத்து வருகிறேன். நாளை எனக்கும் பூரி ஸம்பாவனை அதிகமாய் கிடைக்குமல்லவா?

ஸ்ரீ:— அப்படியே: போய்வா. (வஸந்தகன் போகுதல்)

ஸத்:— நலினி நீ சென்று நாரீமணிகளை யெல்லாம் அழைத்து வா. (நலினி போகுதல்)

ஸ்ரீ:— ஸத்யா! என் மாதா பிதா ஸோதரர்களையும் உன் ஸபத்னிகளையும் மாத்ரம் அழைக்கவேண்டாம். அவர்கள் தானத்துக்கு ஆக்ஷேபிப்பார்களோ என்னவோ?

ஸத்:— நாதா! ப்ராம்ஹணர்களைத் தவிர பந்துக்களை அழைக்க உத்தேசமில்லை. இனி உள்ளே போய் நாளை வ்ருதத்திற்கு வேண்டியவைகளைத் தயாரிப்போம் வாரும்.

ஸ்ரீ:— அன்பே அந்த வஸந்தகன் ப்ராம்ஹணர்களை அழைக்காமல் ஏதாவது விகட சேஷ்டைகள் செய்வானோ வென்று என் மனஸில் ஸந்தேஹமுண்டாகிறது.

ஸத்:— அவன் என்ன செய்தால் என்ன—தமது அன்பின் நோக்கம் என்மேல் பூர்ணமாயிருக்க எனக்கு ஏதாவது பயப்பட வேண்டிய அவச்ய முண்டா?

ஸ்ரீ:— கண்ணே உன் ஸம்சயம் எல்லாம் நாளைத்தினம் தீர்ந்துவிடும். அப்பொழுது நீயும் தன்யளாய் விடுவாய்.

ஸத்:— நிச்சயமாய்த் தன்யளாய்விடுவேன். இதெல்லாம் தம்முடையவும் நாரதமுனீந்த்ரருடையவும் அனுக்ரஹபலமே யல்லவா? இனி வாரும்—உள்ளே போவோம்.

ஸ்ரீ:— (தனக்குள்) நாளைத்தினம் ஸத்யா நிச்சயமாகத் தன்யளாவாள் என்பது மாத்ரம் ஸரி. ஆனால் அது அவள் எண்ணுகிற மாதிரியல்ல (ப்ரகாசமாய்) ஸத்யா! ஸத்யா! வா. [போகுதல்]

## அங்கம் III—காக்ஷி 1

இடம்:— ஸத்யபாமா அந்தப்புரம்.

(ஸ்ரீக்ருஷ்ணர் பட்டு வஸ்த்ரமணிந்து ஆஸனத்திலமர்ந்திருக்க வஸந்தகன் பக்கத்தில் நிற்கிறான்).

ஸ்ரீ:— வஸந்தகா பர்த்ருதானம் துலாபாரம் விஷயமாய் யாரிடமும் சொல்லவில்லை யல்லவா?

வஸ:— நண்பா! எல்லா க்ருஹத்திலும் இரண்டு மூன்று பொய்கள் சொல்லி தப்பித்துக்கொண்டு வந்தேன். ஆனால்—ஆனால்—

ஸ்ரீ:— மித்ரா! என்ன ஸம்சயப்படுகிறாய் யாரிடமேனும் சொன்னாயா என்ன?

வஸ:— வெளியிலே எவருடனும் இல்லை. என் க்ருஹத்திலேதான். என் பார்யைக்குச் சொல்லக்கூடாது என்று எவ்வளவோ ஜாக்ரதையாய் வாயைக்கூடத் திறவாமலிருந்தேன். ஆனால் அவளோ எப்படியோ என்னை இல்லாத கேள்விகள் எல்லாம் கேட்டு என் புத்தியையும் மயக்கி நான் சொல்லாதபோனால் எனக்குப் போஜனம் திண்டாட்டமாய்விடுமென்ற ஸ்திதிக்கு வந்து சேர்ந்தது. அப்பொழுதுதான் விதியில்லாமல் சொல்லியாகவேண்டி வந்தது. அப்படிச் சொன்னதிலிருந்து தானும்கூட

இந்த வ்ருதம் நோற்க வேண்டுமென்று ஒரே பிடிவாதமாய் சாதிக்கிறாள்.

ஸ்ரீ:— வஸந்தகா உன் பார்யையும் இன்றே புண்யகவ்ருதம் செய்கிறாளா என்ன?

வஸ:— அவளும் ஸத்யபாமா தேவியும் இந்த மாதிரி விஷயங்களில் ஒரே குருவிடம் படித்தவர்கள் தான்.

ஸ்ரீ:— அப்புறம் என்ன நடந்தது?

வஸ:— நான் அப்பொழுது ஸரி என்று அங்கீகரித்தேன். ஆனால் என்னைத் தானம் செய்ததும் இந்த உபயோகமில்லாத ப்ரதி பிம்பமான புருஷன் தொலைந்தால் போதும் என்று திரும்ப அடையாமலிருந்தால் என்ன செய்வது? யாருக்கு தாஸ்யனாகச்செய்து விடுவாரோ வென்று உதயம் முதல் வ்ருதத்துக்கு ஏற்பாடு செய்து வருகிறேன் என்று சொல்லிவிட்டு உன்னிடம் ஓடி வந்து விட்டேன்.

ஸ்ரீ:— நண்பா! உன் பார்யை நமது குட்டை வெளிப்படுத்தி விடுவாளோ?

வஸ:— அதற்கு ஸந்தேகமேயிருக்காது என்று என் அபிப்ராயம். ஸமுத்ர அலையின் சப்தத்தை நிறுத்தினாலும் நிறுத்தலாம். ஆனால் அவள் வாயை யடைக்க முடியாது.

ஸ்ரீ:— போகட்டும். தானத்தினால் நமக்கு ஒரு குறையும் உண்டாகாது. (நாரதர் கானம் கேட்டு) அதோ நாரதரும் வந்து விட்டார். நீ உன்னைபோய் எல்லாம் ஸித்தமாய்விட்டதா பார். நானும் நாரதரும் க்ஷணத்தில் வருகிறோம்.

வஸ:— அப்படியே செய்கிறேன். (போகிறான்)

(நாரதர் ப்ரவேசம்)

நா:— தேவ தேவா—புராண புருஷா் கோபாலசூடாமணீ— உனது கதா விசேஷங்கள் கேட்கக்கேட்க த்ருப்தியாகுமோ?—

மேயூதாந்த ஸத்கோஷ்டியிலிருப்பவனே பவாபஹரஸாரோப ஸ்வ ரூபா— ஹேஜகன்னுதா-உனது மஹா கடாக்ஷம் அறிய முடியுமா முக்தி கோருபவர்களுக்கும்.?

ஸ்ரீ:— நாரதா உன் பக்திக்கு எவ்வளவோ ஸந்துஷ்டி யடைந்தேன். உனது மனோபீஷ்டத்தை யறிந்தேன். அது இன்றே ஈடேறும். ஸத்யையின் ப்ரேமையை பக்தியாகமாற்ற உத்தேசித்து நானே இதெல்லாவற்றிற்கும் உன்னைக் காரண பாத்ர மாகச் செய்தேன். இந்த்ராணிக்கும் வருத்தத்தை யுண்டாக்கியது நானே. உனக்கும் பச்சாத்தாபபுத்தியும் ஸ்வோபகார சிந்தையும் வரச் செய்ததும் நானே. ருக்மணியின் ஜனனதினமென்று என்னை அழைக்கச் செய்ததும் நானே. ஸத்யைக்கு புண்யக வ்ருதம் நோற்க விருப்பமடையச் செய்ததும் நானே. இன்றே ஸத்யையின் அக்ஞானத்தைப் போக்கி பக்தி மஹிமையை அறி யச்செய்யப்போவதும் நான்தான். இவை யெல்லாம் அதற்கு ஆவச்யகமாய் ஏற்பட்டது—எப்படி யென்றால் ப்ரேமா வாஞ்சை யுடையவளாயிருந்தும் ஸ்வயநலக் காரியானுள். "தேஹ ஸம்பந்தி ஐஹிதிக ஸெளகார்த்தி" இதைவிட எல்லா விதத்திலும் விசேஷமா னது பக்தி. முத்தமிடுவதுபோல் எனக்கு ப்ராணிகளை கஷ்ட மடையச்செய்து பரீக்ஷித்தாலன்றி மோக்ஷமடையச் செய்யப் புத்தி ஜனிக்காது. அஞ்ஜலி மர்மமறிய கஷ்டப்வராமல் கண்ணீர் விடும் காலம் ஏற்படாது. மனுஷர்களை கஷ்டத்துடன் போராடி மக்னமாய் பாபங்களைச் சித்தத்தில் நினைத்து வருந்தி அதன்மூலம் அவைகளை நிவர்த்தி செய்து கைவல்யம் அடையச் செய்வேன். கஷ்டமனுபவிப்பதால் ப்ராணிகணங்கள் எல்லாம் நிஜதுஷ்க்ருதஸ்வ பாவங்கள் விட்டுத் தத்வமறிந்து பக்தி மஹாத்ம்யமும் தெரிந்து பரமபதம் அடைவார்கள்.

நா:— தேவா! இவ்விதம் மாஹாத்ம்ய ச்ரவணத்தினால் தன் யனானேன்.

ஸ்ரீ:— நாரதா! எல்லோரும் இதை க்ரஹித்து முக்தியடை வார்களாக—இனி தானமண்டபத்திற்குப் போகலாம் வா.

[போகுதல்].

## அங்கம்—3. காக்ஷி.—2.

இடம்:— தானமண்டபம்.

(ஸ்ரீக்ருஷ்ணன் பக்கத்திலிருக்க ஸத்யபாமை ஸ்நானமாய் பட்டுவஸ்த்ரம் தரித்து ஸர்வாலங்கார பூஷிதையாய் புஷ்பங்கள் தரித்து இருக்க கர்க்காசார்யார் ஸத்யபாமைக்கு வ்ருதம் செய்விக்கிறார். நாரதர் பக்கத்தில் ஓர் ஆஸனத்திலமர்ந்திருக்கிறார். வஸந்தகன் நலினி ப்ராம்ஹணர்கள் ஸ்த்ரீ ஜனங்கள் எல்லோரும் சுற்றுப் பக்கங்களில் உட்கார்ந்திருக்கிறார்கள். ஒரு பக்கம் ஓர் திராசு கட்டப்பட்டிருக்கிறது.)

கர்:— ஸாத்ராஜிதீ தேவி—வ்ருதம் முடிந்துவிட்டது. இனி தானம்தான் செய்யவேண்டியது: முதலில் பர்த்ருதானம்—அதற்கு ஆரம்பிக்கலாமா?

ஸத்:— ஆர்யா அப்படியே ஆகட்டும்.

கர்:— ஸபா ஜனங்களே! இந்த வ்ருதம் நோற்கும் ஸ்த்ரீகள் தம் ப்ராணேச்வரரை ஒரு நல்ல வம்சத்திலுதித்து ஸர்வ சாஸ்த்ரங்களும் கற்று சாந்தஸ்வரூபியாய் நல்ல ஆசாரமுள்ள பெரியவருக்குத் தானம்செய்யவேண்டும். பிறகு தானம் பெற்றவருக்கு சக்தி ப்ரகாரம் பர்த்தாவின் நிறை தனமோ மற்ற வஸ்துக்களோ கொடுத்து பர்த்தாவைத் திரும்ப அடையவேண்டும். அந்த தானம் இப்பொழுது செய்யப்படவேண்டியது. தானம் பெறுவதற்கு உங்களில் யாராவது பாத்ரர்களானவர் தெரியப்படுத்தக் கோருகிறேன்.

அப்பய்யா தீக்ஷிதர்:—வஸந்தகா! நாலுபேர் மத்தியில் என் மானத்தைப் போக்கிவிடாதே. இல்லையோ உன் கன்னம்—பத்ரம் தெரியுமா.

வஸ:— (ஓடிப்போய் வேறொரு ப்ராம்ஹணனைப் பிடித்து) ச்யாமா சாஸ்த்ரிகளே! உமக்கு இந்த தானம் ஸம்மதம்தானா?

ச்யா:— உன் குரங்காட்டத்தை கொஞ்சம் காட்டவேண்டாம். எனக்கு கிடைக்கும் தக்ஷிணையில் பாதி உனக்கு கொடுத்துவிடுகிறேன்.

ஸோமயாஜி:— ஆர்யர்களே! இந்த விஷயத்தில் ஸந்தேஹ மெதற்கு? நாம் கேட்ட ஸர்வலக்ஷணங்களும் பொருந்தியிருப்பவர் அந்த நாரதமுனீந்த்ரர்தான். அவரைவிட இந்த உத்தம தானம் பெறுவதற்கு யோக்யதையுடையவர் யாரிருப்பார்? ஆகவே அந்த தேவரிஷி ச்ரேஷ்டரே இந்த தானம் பெறவேண்டும்.

கர்:— ஸபையோர்களே! இனி ஏதாவது வேறு அபிப்ராயம் உண்டா? (கொஞ்சம் பொறுத்து) இதனால் தமது மௌனம் பூர்ண அங்கீகாரத்தைத் தெரிவிக்கிறது. நாரதருக்கே ஸ்ரீக்ருஷ்ண தானம் செய்யலாமா?

நா:— பெரியோர்களே இந்த மஹா உத்தம தானம் எனக்களிக்க நீங்கள் அங்கீகரித்ததற்கு நான் மிகவும் வந்தனம் செலுத்துகிறேன். இந்த தான பரிக்ரஹணத்தினால் நான் எவ்வளவோ தன்யனானேன். தானத்தின் பிறகு ஸ்ரீக்ருஷ்ணனை தராஸில் வைத்து அவரது நிறை தனமோ மற்ற வஸ்துக்களோ அடைந்து ஸத்யாதேவிக்கு அவரைத் திரும்பக் கொடுப்பேன்.

கர்:— தேவி! இந்தப் புஷ்ப ஹாரங்களால் ஸ்ரீக்ருஷ்ணன் கைகளைக்கட்டி அந்தப் பாரிஜாத மரத்துடன் கட்டுவாய். அந்த மரத்தையும்கூட தானம் கொடுப்பதாக உத்தேசமல்லவா?

(ஸத்யபாமா புஷ்பங்களைக் கையிற்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணன் ஸமீபம் மந்தஹாஸ முகத்துடன் வர ஸ்ரீக்ருஷ்ணன் புன்சிரிப்புடன் எழுந்து தன் கைகளை ஸத்யையின் கைகளில் ஒப்புவிக்க).

ஸ்ரீ:— கண்ணே! இதில் என்ன வெட்கம். வ்ருதம் செய்ய வேண்டிய க்ரமப்படி ஸங்கோசமில்லாமல் என்னைத் தானம் செய்து இந்த முனீந்த்ரர் சொன்னபடியே என் நிறை தனம் கொடுத்து என்னைத் திருப்பப் பெற்றுக்கொள்.

(ஸத்யபாமா பூஹாரங்களால் ஸ்ரீக்ருஷ்ணனை பாரிஜாத வ்ருக்ஷத்துடன் கட்டிவிடுகிறாள்).

நா:— (எழுந்து தனக்குள்) தேவா! என்ன தேவதேவனின் விசித்ர வ்ருத்தாந்தம்! அன்று பலியைக்கட்டினவர்--இந்த்ரியங்களை

அடக்கிய தபோதனர்கள் மானஸீக பந்தத்தில் கட்டுப்படுபவர்—இன்று ஒரு அபலையின் கையினால் பாரிஜாத வ்ருக்ஷத்து புஷ்ப ஹாரங்களால் கட்டுப்பட்டிருக்கிறார். இந்த மஹானின் மஹிமை விவரிக்கக் கூடியதா?

கர்:— தேவீ! இனி நாரதருக்கு உன் ப்ராணேச்வரனைத் தாரை வார்க்கலாம். நாரதமுனீந்த்ரா இங்கு வாரும். (நாரதரின் பாதப்ரக்ஷாலனம் செய்து ஸத்யை ஹஸ்தத்தில் தீர்த்தத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனின் கைகளை நாரதரின் கைகளில்வைத்து "துப்யமஹம் ஸம்ப்ரததே நமோ நம:" என்று சொல்லி தானம் செய்து கைகளை விட்டுவிடச் செய்கிறார்).—முனீந்த்ரா இனி பாரிஜாதமும் ஸ்ரீக்ருஷ்ணனும் தம்முடையதே.

நா:— ஆஹா எவ்வளவு தன்யனானேன்! என்ன தபம் தான் செய்து இந்த பாக்யம் கிட்டியதோ—இன்று ஸத்யபாமாமணி வ்ருதத்தில் இந்த மஹாதானம் பெற்று காமிதார்த்த ஸித்திக்கு ஆதாரமாயும் கண்டிதத்துஷ்டனும் ஸர்வதேவ பூஜிதாங்க்ரியாயும் அச்சுதனை அடைய?

கர்:— தேவீ! இனி ப்ராம்ஹணர்களுக்கு தக்ஷிணை தாம்பூலம் அளிக்கலாமா?

ஸத்:— முதலில் துலாபாரம் நடைபெறக்கூடாதோ?

கர்:— அதை இதற்குப் பிற்பாடு வைத்துக்கொள்வோம். நலினீ—வஸந்தகா—ஸ்த்ரீ ஜனங்களுக்கும் ப்ராம்ஹணர்களுக்கும் தக்ஷிணை தாம்பூலம் கொடுங்கள்

[நாரதர் ஸ்ரீக்ருஷ்ணனை கையிற் பிடித்துக்கொண்டு ஒரு பக்கம் நிற்க நலினி வஸந்தகர் தக்ஷிணை தாம்பூலம் கொடுக்கிறார்கள். ப்ராம்ஹணர்கள் தக்ஷிணை தாம்பூலம் பெற்று தமது த்ருப்தியை வெளியிடுகின்றனர். ப்ராம்ஹணர்கள் எழுந்து வெளியில் போகப் புறப்பட—ஸத்யை ஸ்ரீக்ருஷ்ணன் பக்கமாய்ப் பார்த்தல்.]

நா:— ப்ராம்ஹணர்களே! இருங்கள் துலாபாரமும் பார்த்துப்போகலாம். தேவீ! இனி துலாபாரத்துக்கு ஆரம்பிக்கலாம்.

ஸத்:— ஸரி—சீக்ரமாகவே செய்யலாம்.

கர்:— முனீந்த்ரா! ஸ்ரீக்ருஷ்ணனுடன் இங்கு எழுந்து வாரும்.

நா:— அப்படியே, தேவா வாரும். (ஸ்ரீக்ருஷ்ணனைப் பூ மாலையால் கட்டிப்பிடித்து த்ராஸில் உட்காரவைத்து) தேவி! இனி உன் பதியை நிறுப்பதற்கு வேண்டிய தனம் வரவழைக்கலாம்.

ஸத்:— நலினீ—அந்தப் பெட்டியிலிருக்கும் தங்கக்கட்டிகளை அப்படியே கொண்டுவந்து த்ராஸுக்கட்டில்வை.—வஸந்தகா நீயும் நலினிக்கு ஸஹாயமாயிரு. (நலினி வஸந்தகர் பெட்டியை வைக்க த்ராஸு முனை அசையவில்லை) த்ராஸு முனை அசையவே யில்லையா—இதென்ன இப்படி—என்மற்ற ஆறு பெட்டிகளை நகைகளுடன் கொண்டுவை. (அவ்விதம் செய்தும் த்ராஸு முனை அசையாமலிருக்க) என்ன இது! த்ராஸு தாங்கமுடியாத கன வஸ்துக்கள் வைத்தும் கொஞ்சமும் அசையவில்லையே! (த்ராஸை கவனித்து) வஸந்தகரே இந்த த்ராஸில் ஏதாவது லோபம் இருக்கிறதோ—பார்த்துச் சொல்லும்.

வஸ:— (த்ராஸை இங்குமங்கும் ஆட்டிப் பார்த்து) இதில் ஒரு குற்றமும் எனக்குத் தெரியவில்லை—ஆனால் ஏதோ மோசம் மாத்ரம் இருக்கிறது: இல்லையானால் இத்தனை கனம் வைத்தும் அசையாமலிருக்குமா? இன்னும் பார்ப்போம்.

ஸத்:— அப்படியே—தப்பாமல் அவசியம் செய்து பார்ப்போம். நலினீ நீ மறுபடியும் சென்று ஸ்யமந்தகமணி கொடுத்த தங்கக் கட்டிகளெல்லாவற்றையும் கொண்டுவந்து வை. அப்பொழுது நிச்சயமாய் ஸரியாய்விடும். (அப்படிச் செய்தும் பலனில்லாதுகண்டு)—ஆஹா இதுவென்ன மாயையோ—முனீந்த்ரா! என் மனோவல்லபர் நிச்சயமாகவே இத்தனை கனமுள்ளவரா!

நா:— தேவி! எனக்கு மாத்ரம் என்ன தெரியும்? அவர் எத்தனை கனமோ! அது அவருக்குத்தான் தெரியவரும்.

ஸத்:— நலினீ! என் ப்ராணபதி அனேக ராஜாக்களை ஜயித்து எனக்களித்த தனம் எல்லாம் கொண்டுவந்து த்ராஸில் வைத்துவிடு.

இதென்னமோ விசித்ரமாயிருக்கிறது. (அவ்விதம் செய்தும் த்ராஸு முனை அசையாதிருக்க ப்ரமித்து) அடாடா! என் முள்ள தனமெல்லாம் த்ராஸில் வைத்தாய்விட்டதே—த்ராஸுமட்டும் கொஞ்சமும் அசையவில்லையே! இனி யென்ன செய்வது! இம்மாதிரி விபரீதம் எப்பொழுதாவது நடந்ததுண்டா?

ஸ்ரீ:— ஸத்யா! என்ன சும்மாய் நிற்கிறாய் உன்னிடமுள்ள தனமெல்லாம் இவ்வளவேதானா நிச்சயமாய்?

ஸத்:— நாதா! உண்மையாய் என்னிடமுள்ள நிதியெல்லாம் இவ்வளவே —வேறு ஒரு சல்லிக் காசு கூடக் கிடையாதே.

ஸ்ரீ:— அப்படியானால் ஸத்யா! நான் நாரதருக்கு தாஸனாயிருக்கவேண்டியதுதானா? என்ன கார்யம் செய்தாய் நீ?

ஸத்:—ப்ராணப்ரியா தம்மை அந்த ஜடதாரியிடமிருந்து திரும்ப அடைய ப்ரயத்னமன்னியில் எப்படியும் சும்மாயிருப்பேனா? கொஞ்சம் வருந்தாதேயும் (நாரதர் பக்கம் திரும்பி) முனீந்த்ரா—தனமாவது—மற்ற எந்த வஸ்துவாவது என் ப்ராணேச்வரர் நிறை பெற்றுக்கொள்ளலாமல்லவா?

நா:—உன்னால் எது முடியுமோ அதைச் செய்து பார்.

ஸத்:— நலினீ நமது க்ருஹத்துக்குச் சென்று அங்குள்ள எல்லா பதார்த்தங்களையும் கொண்டுவை த்ராஸில். (அப்படிச்செய்தும் ப்ரயோஜனமில்லாததால்)—முனீந்த்ரா இதில் ஏதோ தந்த்ரமிருக்கவேண்டும். இல்லாவிட்டால் என் நாதன் என்ன—இத்தனை விபரீதமான நிறையிருப்பதாவது!

நா:— தேவீ! இத்தனை கனமா? அந்தக் கனம் யாருக்குத் தெரியவரும்? அகிலாண்டகோடி ப்ரும்ஹாண்டமும் அவரது குக்ஷியில் கொண்ட அந்த மஹானின் நிறையைச் சொல்லவா—அல்லது நிர்ணயிக்கவா?

ஸத்:—முனீந்த்ரா—என்னை வ்ருதம் நோற்க உபதேசித்தபொழுது இந்த வார்த்தை சொல்லலாகாதா—அப்பொழுதே இவர் இத்தனை கனம் உண்டென்று?

நா:—தேவி! நான் அப்பொழுதே சொன்னேன்: ஆனால் நீ அந்தக் காது கொடுத்து கேட்கவில்லை. "இந்த ஸ்ரீக்ருஷ்ணனை எனக்குத் தெரியாதா" என்றாய்—அவர் நிஜ ஸ்வரூபமறியாமலிருந்தாய்—அதற்கு நான் என்ன செய்வது?

ஸத்:— என் மனோஹரன் நிறைக்கு ஒரு வஸ்துவுமில்லையே! உமது இஷ்டப்ரகாரம் ஏதாவது வஸ்துவைப்பெற்று என் நாதனை எனக்கு அளித்துப்போம். அவர் தமக்கு என்ன ப்ரயோஜனம்? இதோ இந்த ஸ்யமந்தகமணியையே பெற்றுக் கொள்ளும்.

நா:— எனக்கு ஸ்ரீக்ருஷ்ணனின் நிறைபோட்டதே வேண்டும். மற்றவை எவையும் நான் விரும்பவில்லை. அப்படி ஸமமான நிறை உன்னிடமில்லையேல் அவரை நான் கடைத்தெருவில் கொண்டு போய் எவருக்காவது விற்றுவிடுவேன் என்னைப்போன்ற ஏழையான ஏகாங்கிக்கு இந்த மஹானைக் காப்பாற்ற சக்தியுண்டா?

ஸத்:— என்ன! என்ன! என் பர்த்தாவை கடைத்தெருவில் கொண்டுபோய் விற்பீரா—என்ன நாரதரே—இதென்ன ப்ரபுத்வம். பெருந்தன்மையா இது: தம்மை நான் எங்களுக்கு அனுகூலம் செய்பவரென்றல்லவா எண்ணியிருந்தேன்—இப்படி என் விரோதி பக்கம் சேருவீர் என்றறியேனே! புலியைப் பசுவென்றெண்ணி உண்மையறியாது உம்மை நம்பி நான் மோசம் போனேன்.

நா:—ஸ்ரீக்ருஷ்ணா—இந்த வார்த்தைகளாலுண்டாகும் லாபம் என்ன—எழுந்திரு கடைத்தெருவிற்குப் போவோம் இனி. (ஸ்ரீக்ருஷ்ணன் எழுந்திருக்க).

ஸத்:— இருங்கள் கொஞ்சம் பொறுங்கள்—இதோ எனது மங்கள ஸூத்ரம் தவிர மற்ற நகைகளையெல்லாம் வைக்கிறேன் த்ராஸில். (அவ்விதம் செய்தும் பயன்படாமல்)—நளினீ வஸந்த கரே—ப்ராம்ஹணர்களே! சும்மாய்ப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்களே! ஏன்—உங்கள் எல்லோருடைய நகை நாணயங்கள் எல்லாவற்றையும் த்ராஸில் வையுங்களேன்—அப்படியாவது எனது நாதர் எனக்குக் கிடைப்பாரோ என்னவோ (நளினி நகைகளையும்

வஸந்தகன முதலானோர் மேல் உத்தரீயம் தக்ஷிணை தாம்பூலம் எல்லாம் வைத்தும்—பலனன்னியில்)—நாதா! (ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரம் செய்து) என்னைத் தாமே ரக்ஷிக்கவேண்டும்— என் தப்பகளை மன்னியும்.

ஸ்ரீ:—ஸத்யா—மனப்பூர்வமாக என்னைத் தானம் செய்து விட்டு இவ்விதம் சொன்னால் என்ன ப்ரயோஜனம்—என் நிறை தனம் உன்னிடம் இல்லாதிருக்க இவ்விதம் வ்ருதம் ஆரம்பித்து என்னை அவஸ்தைக்குள்ளாக்கிறாய்—யோசனையன்னியில் செய்யும் கார்யம் இப்படித்தான்—அதிக ஆசையுடையவர்களின் கோடி யோசனைகளெல்லாம்.

ஸத்:—ப்ராணப்ரியா என் அக்ஞானத்தையெல்லாம் க்ஷமித்து எனக்குத் தம்மை இந்த ஜடதாரியிடமிருந்து தப்புவிக்க மார்க்கம் உபதேசிக்க வேண்டும்.

நா:—க்ருஷ்ணா—என் ஆக்ஞையின்றி நீ யாரிடமும் பேசக் கூடாது—தெரியுமா? எழுந்திரு— ஸ்ரீக்ருஷ்ணன் எழுந்திருக்க).

ஸத்:— நாரதரே இதென்ன அன்யாயம்! என் நாதனுடன் நான் பேசக்கூடாதா? தம்மைக் கலஹக்காரர் என்று சொல்வதற்கு ஸரியாய்ச் செய்து காண்பித்துவிட்டீரே! இத்தனை மோசக்காரரென்று நான் எண்ணவில்லையே இதுவரை.

நா:— க்ருஷ்ணா! ஸத்யபாமை உன்னை எனக்குத் தானம் செய்தது உண்மையானால் என் ஆளான நீ நான் ஏவும் வேலைகளைச் செய்யவேண்டுமல்லவா?

ஸ்ரீ:— நாரதரே! அதற்குக் காத்திருக்கிறேன்.

நா:— அப்படியானால் இங்கே வா. (ஸ்ரீக்ருஷ்ணன் வர) அங்கே போ. (போக) உட்கார் (உட்கார) எழுந்திரு (எழுந்திருக்க) இதோ இந்த வீணையைப்பிடி—இதோ கமண்டலம் இதில் ஜலம் நிரம்பி இருக்கிறது ஜாக்ரதை—இதோ எனக்கு ஈச்வரர் அளித்த புலித்தோல்—வா என் பின்னால். (ஸ்ரீக்ருஷ்ணன் நாரதர் பின்னால் அவைகளுடன் போகுதல்).

[போகும்பொழுது ஸபையைப பார்த்து

வணங்கப்படுவதேயன்றி வணங்கியறியாத ஸ்ரீநாதனும் இப்பொழுது எனக்கு ஸேவகனாய்ப் பாவிப்பது பக்தர்களுக்கெல்லாம் எப்பொழுதும் தாஸானுதாஸன் தான் என்று லோகத்திற்குக் காண்பிப்பதேயல்லவா—க்ருஷ்ணா! வா கடைத்தெருவிற்குப்போவோம். [நாரதரும் அவருக்குப் பின் ஸ்ரீக்ருஷ்ணனும் போகுதல்]

ஸத்:— நாரதரே! நாரதரே! இந்த அன்யாயம் அடுக்குமா? தமக்கு—நில்லுங்கள் நில்லுங்கள். (ஸத்யைபோக நலினி வஸந்தகர் ப்ராம்ஹணர்கள் எல்லோரும் பின் செல்கிறார்கள்).

## அங்கம்—3. காக்ஷி—3.

இடம்:— த்வாரகாபுரி—கடைவீதி.

(ஸ்ரீக்ருஷ்ணனை புஷ்பமாலையால் கட்டிப்பிடித்துக்கொண்டு நாரதர் முன்வருகிறார்.)

நா:— பௌர ஜனங்களே! வாருங்கள்—வாருங்கள். ஸ்ரீ க்ருஷ்ணன் நிறை தனம் கொடுத்து அவனை விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள். இவர் பக்தர்களுக்கெல்லாம் எளிதில் அடையக் கூடியவர்—விலைக்கு வாங்குங்கள்.

"நீலாப்புவாஹ ஸன்னிப சரீரன்
ஸத்யாகடாக்ஷ விசேஷ பந்திதன்
ஸர்வஸம் பூஜார்ஹ சரிதன்
ஆர்த்தஜன ப்ரதிபாலன விக்ரஹன்
தேவாவனீ தேவ தேவன்
தாருணீ ராஜ்யபார விதூரன்
ராஜராஜ ப்ரபஞ்ச ஸாம்ராஜ்யன்."

என்ன நீங்கள் யாரேனும் இவனை வாங்க மாட்டீர்களா? -க்ருஷ்ணா அதோ ஸத்யபாமா தேவி இங்கேயும் வருகிறாள். வா நாம் இன்னொரு வீதிக்குப்போவோம்.

(நாரதர் ஸ்ரீக்ருஷ்ணனுடன் போகுதல்—ஸத்யபாமா நலினி ஸஹிதம் துக்கத்தால் பீடிக்கப்பட்டவளாய்ப் பாடிக்கொண்டு ப்ரவேசம்.)

அடடா—என் நாதனை அந்த நாரதர் இனி வேறொரு வீதிக் கழைத்துப் போகிறாரே—என்ன செய்வேன். எத்தனை காலம் இப்படி அலைந்து திரிவேன். எப்பேர்ப்பட்ட கெட்ட நேரத்தில் நான் அந்த ஊர் சுற்றும் கபட தாபஸியின் போதனைக்கு ஸம்மதித்தேனோ?

நலி:— தேவீ! இதெல்லாம் அந்தக் கலஹக்காரன் சூழ்ச்சி தான்.

ஸத்:— ஸகீ—ஆமாம். இருக்கட்டும் இப்பொழுது இந்த ஸங்கடத்திலிருந்து தப்பித்துக்கொள்ளும் வழிதான் அகப்படுமோ—என்னவோ தெரியவில்லையே? காலமும் வீணாய்க் கடக்கின்றது, என் பந்துக்கள் எல்லோரும் இந்த ஸமாசாரம் கேட்டு என்னை நிந்திக்க வருவார்களே—நான் என்ன செய்வேன். அவர்களுக்கு நான் என்ன பதில் சொல்வேன்! தேவகீவஸுதேவர்களே வந்து என் புத்ரனை என்ன செய்தாயென்றால் என்ன சொல்வது. பலராமர் ஸாத்வகி வந்து எங்கள் ப்ரிய ஸோதரனெங்கே என்றால் என்ன சொல்வேன்! ஜாம்பவதி முதலியோர்வந்து எங்கள் பதியெங்கே என்றால் என்ன சொல்வது! மற்றும் யாதவர்கள் வந்து கேட்டுக் கோபம் கொள்வார்களே:—ஐயையோ!

நலி:— தேவீ வருந்த வேண்டாம். வாருங்கள் உங்கள் பராசபதியிடம் சேருவோம்: பிறகு எப்படியும் எல்லாம் ஸரியாய் விடும்.

ஸத்:— அப்படியே யாகட்டும் அவர் க்ருபையால்—வா. ஸ்ரீக்ருஷ்ணனை எப்படியும் நான் விடமாட்டேன். [போகுதல்]

நா:— (மறுபடியும் ஸ்ரீக்ருஷ்ணனுடன் வந்து) பௌர ஜனங்களே! வாருங்கள்: வாருங்கள். இவரது மஹிமையைக் கேளுங்கள்.

"இவர் பாதமே பதிதஜனபாவனஸாரா
பாகீரதீ ஜன்மபூமி.
இவர் வக்ஷஸே இந்திராஸுந்தரி
மாணிக்கேளிகா க்ருஹம்.
இவர்சக்ரமே வ்ருதவதோர் வீர்ய
கர்வாந்தகைத் யானேக பாங்குசம்.
ஸ்தமே பூஜமார்க ஸஞ்சார
ஸம்ரக்ஷண ஸக்த ஸாதனம்."

க்ருஷ்ணு—இங்கு ஒருவரும் வாங்குபவரைக் காணேம் இன்னும் ஸத்யா தேவியும் இங்கே வருகிருள்—வா இன்னெரு வீதி போவோம் (போகுதல்)—(ஸத்யபாமா துக்கத்துடன் ப்ரவேசம்).

ஸத்:— ஆஹா! மறுபடியும் என் நாதனை என் கண்ணுக் ககப்படாமல் செய்துவிட்டாரே—அடடா சும்மா உட்கார்ந்திரா மல் அந்த வ்ருதத்திற்கு ஏன் ஒப்புக்கொண்டேன். எப்படி என் பதியைவிட்டு நான் ஜீவித்திருப்பேன்! எப்படி அவரை நாரதரிட மிருந்து விடுவிப்பது? ஐயோ எப்படி அந்த நாரதரைக்கண்டு அவரை வேண்டுவேன். (ஜாம்பவதி மித்ரவிந்தை நக்கு வழிகாண்பி வித்துக்கொண்டு வஸந்தகன் ஸத்யபாமைக் கெதிராகவர).

வஸ:— தேவிகளே! அதோ ஸத்யபாமா தேவி உங்கள் பதி யைத் தானம் செய்துவிட்டு துக்கப்படுகின்ருள் இப்பொழுது.

ஸத்:— அடடா அருகில் என் ஸபத்னிகளும் வருகிருர் களே. அவர்கள் என்ன சொல்வார்களோ? அவர்களுக்கு என்ன நான் பதில் சொல்வேன். ஐயோ தெரியாத்தனமாய் என்ன கார்யம் செய்துவிட்டேன்.

ஜாம்:— (ஸத்யபாமையைப் பார்த்து) ஸத்யபாமாதேவி! இந்த வஸந்தகன் சொல்வது நிஜந்தானு? உன் கையாலே நாதனை இன்னெருவருக்கு எப்படி தானம் செய்யத் துணிந்தாய் அம்மா— தேவர்களும் பாமரர்களும்கூட பரிஹாஸம் செய்யும்படி செய்து விட்டாயே. மற்றவர்களிருக்கட்டும்; நமக்கெல்லாம் பதியான அந்த ஜகத்பதியை அன்யருக்குத் தானம்கொடுக்க இப்படி ஒரு வ்ருதம் உண்டென்று இதுவரை கேட்டதுமில்லையே!

மித்:— ஸத்யாதேவி! நீ யென்ன ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் அத்தனை அலுத்துப்போனுயா என்ன—அவரை தானம் கொடுப் பதா?

ஜாம்:— ஏன் சும்மாயிருக்கிருய்? நீ யென்ன அதிகாரத் துடன் ஸ்ரீக்ருஷ்ணனை நாரதமுனிக்கு தானம் கொடுத்தாய்? அவ் விதம்செய்ய அதிகாரம் உனக்கு யார் கொடுத்தது? பெற்றுப்

பெருகவிட்ட மாதாபிதாக்கள் இல்லையா? ஸஹோதரர்களில்லையா? மற்றும் பதியே தெய்வமென்று ஸதா ஸர்வகாலமும் பூஜிக்கும் பட்டமஹிஷியில்லையா? உன்னைப்போலே ஸ்த்ரீகள் அவருக்கு எத்தனைபேருண்டு.

மித்:— ஸ்வயநலத்தைக் கருதி உன்னுடன் போகாமல் எங்கள் எல்லோரையும் சேர்த்து கஷ்டத்துக்குள்ளாக்கிவிட்டாயே.

ஸத்:— ஸபத்னிகளே! உங்கள் வாயால் நான் இத்தனை வார்த்தை கேட்கவேண்டுமென்றிருப்பதால் அதை யாராலும் தப்புவிக்கமுடியுமா? அன்பு மிகுதியால் ஓர் பாழும் முனீந்த்ரரின் மோசம் அறியாது அவர் உபதேசித்த வ்ருதம் நோற்று என் ப்ராணனுக்கு ப்ராணாதாரமான நந்தகுமார கோபாலரைக் கொடுத்தேன் தானமாய். எனது அக்ஞானத்தை இப்பொழுதுதான் நன்குயறிந்துகொண்டேன். ஐயோ—ஆனது ஆய்விட்டது—இனி எப்படியாவது நீங்கள் எல்லோரும் ஒரேமனதாய்த் தயைசெய்து ப்ராணநாதனை விடுவிக்கவேண்டிய முயற்சி செய்து ஸஹாயம் செய்யுங்கள்.

ஜாம்:— அப்படியே செய்யலாம் வா—அந்த நாரதரைப் போய்க் காணுவோம் (போகுதல்)

(நாரதர் ஸ்ரீ க்ருஷ்ணனுடன் ப்ரவேசிக்க யாதவர்கள் வருகிறார்கள்).

நா:— யாதவர்களே! வாருங்கள் வாங்குங்கள் உங்கள் யதுகுலஸார்வ பௌமனை—

“ கோருபவருக்கு கட்டித் தங்கம்.
கையெடுப்பவருக்கு கையில் சிந்தாமணி.
நமஸ்கரிப்போருக்கு வல்ல நல்லநிதி.
தபிப்பவருக்கு தாகத்துக்கு அம்ருதம்.
அர்ச்சிப்பவருக்கு கல்பகதருவே.”

என்ன வாங்கமாட்டீர்களா? அப்படியானால் இவரை இனி வேறு ஊருக்குக் கொண்டுபோக வேண்டியதுதான். அங்கே கண்ணை மூடிக்கொண்டு வாங்குவார்கள்—வா க்ருஷ்ணா வா. (போகப் புறப்பட)

யாதவர்கள்:— ஏ ஜடதாரி எங்கள் க்ருஷ்ணமூர்த்தியை எனக்கு ஒருக்கில்லாமல் எங்கேயோ கொண்டு போகிருயா? சும்மா பார்க்கிருயா—அடியுங்கள்! அடியுங்கள்! (ஸமீபம் போக)

நா:— தேவா! என்னை இவர்களிடமிருந்து ரக்ஷிக்கவேண்டும்

ஸ்ரீ:— யாதவ ஸஹோதரர்களே! என்ன இது? என் ஸம்மதத்தின்பேரில் என் பத்னியிடமிருந்து என்னை தானமாய்ப்பெற்ற அந்த தேவ ரிஷிச்ரேஷ்டரையா நீங்கள் அடிக்கப் புறப்பட்டீர்கள்? இந்தச் சண்டைக்கு என்மேலுள்ள அன்பினுல் புறப்பட்டவர்களாதலால் உங்களை மன்னித்தேன் — போங்கள்.

யாதவர்கள்:— சித்தம் தேவா! மன்னிக்கவேண்டும். (போகுதல்)

நா:— தேவா! ஸத்யபாமை வருகிருள் அதோ: கர்வத்தினுல் தலை கொழுத்திருந்ததற்கு இவ்வளவு போதாதா? இனி விமோசன வழியைக் காண்பிக்க உத்தரவாக வேண்டும்.

ஸ்ரீ:— நாரதரே! அப்படியே செய்யலாம்.

[ஜாம்பவதி மித்ரவிந்தையுடன் ஸத்யாபாமா பாடிக்கொண்டு ப்ரவேசம்.]

ஜா:— நாரதமுனீந்த்ரா! இந்த மாயக்காரியை வஞ்சித்து எங்கள் நாதனைத் தானம் அடைந்தீர்களா! எல்லா மறிந்த தாமே ஸகல சாஸ்த்ரபண்டிதனுயிருந்தும்—தாய் தகப்பனுவது தனது மைந்தனைத் தானம் கொடுப்பதுண்டு—அவ்விதம் தானம் பெறல் முறையாகும். எங்களில் ஒருவள்—சபலசித்தமுடையவள் தானமளிக்க மாதவனை அடைவது அழகா தமக்கு?

நா:— தேவி! தர்மவிஷயமாய் என்னைக் கேட்கவேண்டாம். ஸ்ரீக்ருஷ்ணன் அங்கீகரித்தே ஸத்யாதேவி அளித்தாள் தானம். நானும் பெற்றுக்கொண்டேன். மற்ற விஷயங்களெல்லாம் உங்கள் நாதனையே கேட்கவேண்டும.

ஜா:— (ஸ்ரீக்ருஷ்ணன் பக்கம் திரும்பி) ப்ராணேசா! தாமும் எப்படி இந்த தானம் கொடுக்க ஸம்மதித்தீர்களோ?

ஸத்:— (ஸ்ரீக்ருஷ்ணனின் பாதங்களில் விழுந்து) மனோஹரா! தெரியாத்தனத்தினால் தம்மைத் தானமளித்து நமது கஷ்டம்—இத்தன்மையாயதே—என்ன—தாம் பதில் சொல்லலாகாதா—நாதா! தமது பாதாரவிந்த சரணங்களை அடைந்தேன். இன்று என் கண்கள் நன்றாய்த் தெளிவடைந்தன. என் அக்ஞானத்தை அறிந்தேன். எனக்கினி தம்மைத் தப்புவிக்கும் மார்க்கம் உபதேசிக்க வேண்டும்.

நா:— ஸ்ரீக்ருஷ்ணா இனி நீ பேசலாம்: இவள் கேட்பதற்குப் பதில் சொல்.

ஸ்ரீ:— ஸத்யா! நாரதரையே கேள் மார்க்கம்: அவரே உனக்கு வழி காண்பிப்பார்.

ஸத்:— முனீந்த்ரா! இனியாவது என்னை சோகஞ்செய்யாது ரக்ஷியும்.

ஜாம்:— முனீந்த்ரா! இனி எங்கள் தனகனகவஸ்து வாஹனாதிகளெல்லாம் நிறைபோட்டுப் பெற்றுக்கொண்டு எங்கள் பதியை விட்டுவிடும்.

நா:— நாரீமணிகளா! இன்னமும் ஸ்ரீக்ருஷ்ணனை தனத்தாலாவது இதர வஸ்துக்களாலாவது நிறுத்துக்கொள்ளும்படி சொல்கிறீர்களா! பக்திப்ரபாவம் அறியாது பக்த ஜனாவனனென்று கங்கணதாரியாய் அந்த பரமாத்மாவே ஸ்ரீக்ருஷ்ணாவதார மெடுத்திருக்கிறார் என்று நன்றாய்த் தெரிந்திருந்தும் நம்பாமல் நீங்கள் இன்னும் அக்ஞானத்திலிருக்கிறீர்களே. இவர் பக்தர்களுக்கெல்லாம் அவரவருக்குத் தக்கவிதமாய் ஸுலபஸாத்யரல்லவா—அவர்களைத் தன்வசமாக்கிக்கொண்டு அவரும் அவர்கள் வசமாய் ஸர்வதா ஸஞ்சாரம் செய்துகொண்டிருப்பார். இவரை வசமாக்க நினைப்பவருக்கு பக்தி யொன்றுதான் வச்ய ஔஷதம்.

"ஸர்வேச்வரனுக்கு சௌரி கைங்கர்யம்
செய்யப்பெற்ற தனமே—பக்தி.
ஸஹாதேவன் சக்ரியை பந்தனம் செய்ய
ப்பெற்ற பலமே—பக்தி.
ஸர்வக்ஞனாயினும் கேசவனை மெப்பிக்க
த்தகுந்த வித்தையே—பக்தி."

ஸத்:— (தனக்குள்) ஆஹா! அதினாலே யல்லவா ப்ரேமைச் சரின் மஹிமையறியாது தப்புவழியில் போய் அவஸ்தையடைந் தேன். இன்றுதான் உண்மை வெளியாயது: ருக்மணியின் மார்க் கமேதான் ஸரி.

நா:— நாரீமணிகளே! பக்தர்களுள் யாராவது ஒரு த்ருணம் வைத்து இந்த மஹானுபாவரை த்ராஸில் நிறுத்தால் நிறை ஸமமா கும். அப்பேர்ப்பட்டவரிடம்போய்ப் ப்ரார்த்தித்துக் கூட்டிவர வேண்டும்

ஸத்:— (ஆத்திரத்துடன்) முனீந்த்ரா! அப்பேர்ப்பட்டவர் யாராவது இருக்கிறார்களா?

நா:— அபலா அதற்கும் ஸந்தேகமா? பக்தர்களே இல்லை யாயில் இந்த லோகமே பாழாய்விடும் அல்லவா?

ஸத்:— அத்தனை மஹிமை யுடையவர் எங்கிருக்கிறார் ஸ்வாமீ?

நா:— எங்கேயோ என்பானேன்: இந்த ஊரிலேயே இருக் கிறார்கள்.

ஸத்:— அவர் யாரோ தெரிவியுங்கள்—அவரது பாதங் களைப் பற்றி ப்ரார்த்தித்து அழைத்து வருகிறேன்.

நா:— நிச்சயமாய் அப்படிச் செய்வாயா?

ஸத்:— அதற்கும் ஸந்தேகமா? சொல்லிப் பின் பாருங்கள்.

நா:— நான் சொன்னால் நீ சொல் தவறாமல் அவ்விதம் செய்வாயா?

ஸத்:— முனீந்த்ரா! என் வார்த்தையில் இத்தனை அவநம் பிக்கை என்? அவர் யாரோ தெரியப்படுத்துங்கள் உடனே.

நா:— யாரோ என்றிருக்கவேண்டாம்—சொல்லச் சொல் கிறாயா?

ஸத்:— இத்தனை ஸம்சயமேன் ஸ்வாமீ—தயை செய்து உத்திரவு செய்யுங்கள். யாராயினும் ஸரி நானே போய் நேரே அழைத்து வருகிறேன்.

நா:— சொல்லவா—ஸரி. உன்—உன்—உன்—ஸபத்னி—ருக்மணி தேவியே.

ஸத்:— அடடா—இது உண்மையா? அல்லது விளையாட்டா?

நா:— தேவீ! இது ஹாஸ்யத்துக்கு ஸமயமா—அந்த பக்த ச்ரேஷ்டை வந்து த்ருணம் கொண்டு வைத்தாலும் ஸ்ரீக்ருஷ்ணனின் த்ராஸுத்தட்டு உயரும். என் வார்த்தையை நம்பாவிட்டால் உன் நாதனையே கேட்டுப்பார்.

ஸத்:— ப்ராணேசா! இது உண்மைதானா? இல்லாவிட்டால் இந்தக் கலஹக்காரரும் தாமும் சேர்ந்து என்னை அவமானப்படுத்தச்செய்த ஏற்பாடோ? (பாதங்களில் வீழ்ந்து)

ஸ்ரீ:— ஸத்யா! எழுந்திரு. நாரதர் சொன்னதுதான் வாஸ்தவம். பக்தியில்லாமல் தனம் தான்யம் வஸ்த்ரவாஹனங்கள் அளித்தும் கூட கோபுரங்கள் கட்டியும் என்னை வசப்படுத்த முடியாத கார்யம். பக்தியுடன் “பத்ரமோ பலமோ தீர்த்தமோ புஷ்பமோ” யார் கொடுப்பரோ அவருக்கே நான் தாஸானுதாஸனாய் விடுவேன்—இதுதான் பக்தி மஹிமை. இனி செய்யவேண்டியதைச் செய்து என்னை அடைவாய்.

ஸத்:— ஆஹா நாதா! என் ஸபத்னியை நான் போய் அழைத்துவா வேண்டுமென்கிறீர்களா? இத்தனை அசட்டுக் கார்யம் செய்துவிட்டு எந்த முகத்துடன் என் ஸபத்னியின் அருகே செல்வேன்! தமக்கேன் இத்தனை பக்ஷபாதமும் என் கர்வபங்கத்துக்கு என்னை இப்படியும் விஷமப்பரீக்ஷை செய்யலாகுமா?

நா:— க்ருஷ்ணா வா! சொல்லவேண்டியதெல்லாம் சொல்லியாய்விட்டது. உன்னை அடையவிருப்பமிருந்தால் நீ போதித்தபடி செய்து உன்னை அடையட்டும். நாம் தான மண்டபத்துக்குப் போகலாம் வா.

[ஸ்ரீக்ருஷ்ணனுடன் போகுதல்].

ஜாம்:— ஸத்யா இன்னமும் கர்வமா?

மித்:— ஸத்யா செய்தபாபம் சொன்னால் கொஞ்சமாவது தொலையும் என்பார்கள்—நீ தானே சொல்லிவிடு.

ஸத்:— அக்கா நேற்று நாரத முனீந்த்ரர் என்னிடம் வந்து ப்ராணேச்வரரின் பூர்ண அனுக்ரகமடைய எனக்கு புண்யகவ்ருதம் உபதேசித்தார். இன்று ப்ராதக் காலத்தில் நான் அந்த வ்ருதம் நோற்று நமது ப்ராணபதியை அந்த முனீந்த்ரருக்கே தானம் செய்தேன்.

ரு:— அடடா! என்ன அசட்டுக் கார்யமிது—புத்ரபாக்யம் பெறவிரும்பிச் செய்த கார்யத்தில் பதிபாக்யம் தங்கிலைபோதும் என்றாயது என்று சொல்வார்களே—பர்த்ருதானம் கொடுத்துச் செய்யும் வ்ருதமும் ஒரு வ்ருதமா? நமது பூர்வபுண்ய பரிபாகத்தினால் பதியாய் அடைந்த நந்தகுமாரரை தானம்செய்ய உனக்கெப்படித்தான் மனஸு ஒப்பினதோ! அவர் நமது நாதன் மட்டுமல்லாது ஸகல ஜகன்னாதனல்லவா? அவரை தானம் அளித்து அடையும் இச்சை என்ன? ஸுரயக்ஷகின்னர கருட ப்ரமுகாதிகளுக்கும் ஸர்வகாம்யமளிக்கும் ஸ்ரீய:பதியை அன்யருக்குத்தானம்கொடுத்து மனோபீஷ்டமடைய எண்ணினையா? இது என்ன புத்திஹீனம்.

ஸத்:— அக்கா! என் அக்ஞானமெல்லாம் இப்பொழுது தான் நீங்கி கொஞ்சம் தெளிவடைகிறேன். நாரதர் தனக்கு நாதன் நிறை த்ரவ்யமோ அல்லது வேறு வஸ்துவோ கொடுத்து திரும்பப் பெற்றுக்கொள்ளலாம் என்றதால் யோசனையில்லாது நான் தானத்துக்கு ஏற்பாடு செய்தேன். அப்படிச் செய்ய துராஸில் என்னென்ன வைத்தும் நாதன் நிறைக்கு ஸரியாகவில்லை.

ரு:— ஸத்யா! நமது நாதன் விச்வரூபனல்லவா? அவரது நிறை பதார்த்தங்கள் எவ்வளவானாலும் ஸரியாகுமா? இத்தனை நாளாய் அவருடன் இருந்து அவரை யறிந்தும் அவரை மானிடர் என்று மாத்ரம் எப்படி நம்பினாய்? பார்க்கக் கண்களும் கேட்கக் காதுகளும் க்ரஹிக்க மனமும் இருந்தும் இவையெல்லாம் இப்பொழுது என்ன ப்ரயோஜனமில்லாமற் போய்விட்டது.

பூதனை சகடாஸுரன் இவர்களை மாய்த்தது அறியாயா? கோவர்த்தனகிரியைக் குடைபிடித்தது என்ன! தேனுகாஸுரன் ஸங்கதிதான் என்ன—கம்ஸ வதம் காளீயமர்த்தனம் சிசுபாலவதம் இவையெல்லாம் மறந்தாயா நீ? சிஷ்டபரிபாலன துஷ்டகண்டன தர்மத்தை நிலைநிறுத்தும் தர்மமூர்த்தி நமது பூர்வ புண்யத்தினாலும் தானபலத்தினாலும் நமக்கு மானிடவடிவமாய் காணப்படுகிறார். மத்ஸ்ய கூர்மாவதாரமெடுத்து லோக ஸம்ரக்ஷணம் செய்த மஹா புருஷர் நமது நாதனாய் நந்த நந்தனனாய் வந்திருக்கிறார்.

ஸத்:— அக்கா இத்தனை காலமாய் ஸ்ரீக்ருஷ்ணன் பத்னியாயிருந்தும் தீர்த்தத்திலிருக்கும் மீனுக்கு தீர்த்த மஹிமை அறியச் சக்தியில்லாதது போல் வீண்காலக்ஷேபம் செய்துவந்தேன். இந்தப் புண்யக வ்ருதத்தினால் உண்மை கண்டேன். இப்பொழுது நாரத முனீந்த்ரர் ஸ்ரீக்ருஷ்ணனை நிறுத்துப்பார்க்க உன்னை அழைத்துவரச் சொன்னார். நீ என்னுடன் தான மண்டபத்துக்கு வந்து ப்ராணபதியை நாரதரிடமிருந்து விடுவிப்பாய்.

ஜாம்:— ஸத்யா! நம் ருக்மணிக்கு பூர்வம் மாதாபிதாக்கள் கொடுத்த நகைகள் தவிர ஸ்வாமி கொடுத்தது என்று சொல்ல ஒன்றும் இல்லையே. இப்பொழுது அந்த மஹானை நிறுத்துப் பார்க்க எதைக் கொண்டுவரச் சொல்கிறாய்?

ஸத்:— ஸோதரிகளே! நீங்களே ப்ராணேச்வரரும் நாரத முனீந்த்ரரும் சொன்ன வாக்யம் கேட்டிருந்தும் இப்படிச்சொல்லத்தகுமா? இந்த வைதர்பியிடம் பக்தி தனமேயிருக்க வேறு தனம் எதற்காக? ஸ்ரீக்ருஷ்ணன் பக்திக்கே வசப்படுவார் அல்லவா? அன்றியும்—

ரு:— ஸோதரீ! ப்ராணேச்வரரை தானம் கொடுத்துவிட்டால் நானும் சும்மாயிருப்பேனா—உடனே போகலாம் வாருங்கள்.

**ஸத்:— அக்கா! போகலாம் ஸரிதான்--ஆனால் எதைக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை நிறுத்து ஸரிஸமனாக்கலாம் த்ராஸை.**

ரு:— ஸத்யா! எதைக்கொண்டு என்பதென்ன-பக்தி யொன்றினால் முடியுமே யல்லாது வேறெதாலும் இந்தக் கார்யம் ஸாதிக்க முடியுமா? ஆகவே ஹரிஸமாராதனைக்குத் துளஸி தளமே ப்ரதானமென்று பெரியோர்கள் சொல்வார்கள்: அவற்றில் ஒன்றைக்கொண்டுதான் ஸ்ரீக்ருஷ்ணனிடம் போகவேண்டும்.

ஸத்:— அக்கா! இந்த துளஸிக்கு அத்தனை ப்ரபாவம் இருக்கிறதா?

ரு:— என் ப்ரிய ஸோதரிகளே! துளஸி மஹாத்ம்யம் வர்ணிக்கமுடியாதென்று அறியீர்களா? இந்த துளஸிதான் விஷ்ணு ப்ரியை: துளஸி பூஜைதான் பக்திஸாதனங்களில் மிகச்ரேஷ்டமானது—உத்தமோத்தமம். ஆகையால் நம்மைப் போன்றவர்கள் அவச்யம் ஆசரிக்கத்தக்கது. துளஸிச் செடி இருக்கும் ஸ்தலத்தில் வஸிப்பார்கள் லக்ஷ்மியும் வாணியும்—துளஸிச் செடிக்கு ஒரு கலசம் ஜலம்விட்டால் பாபகர்மங்கள் எல்லாம் பஞ்சாய்ப் பறந்து போம்—துளஸிதளத்தை தரித்தால் ஸகலாகமபலமாம் பாபபதமுள்! துளஸி வ்ருக்ஷத்தை பூஜை செய்தால் அதினாலுண்டாகும் புண்யம் மற்றெதிலுமில்லை ஹரிஸமாராதனைக்கு துளஸிக்கு மிஞ்சின வஸ்து எதுவுமில்லை. ஆகவே துளஸியே மாதவனின் நிறையை ஸரிஸமனாக்க யோக்யதையுடையது.

ஸத்:— அக்கா! உன் உபதேசப்படி இனி ஹரிபூஜையைப் போல் துளஸி பூஜையும் நித்யம் செய்கிறேன்.

ஜாம்:— தேவி! எங்களுக்கும் ஸத்யாதேவி வ்ருத்தாந்தமாய் அக்ஞானத்வம்ஸம் ஆய்விட்டது. நாங்களும் அவ்விதமே செய்கிறோம்.

மித்:— இனி உன் சரித்ர மூலமாய் எப்பொழுதும் ஸ்மரித்து க்ருதார்த்தர்களாகிறோம்.

ரு:—ஸோதரிகளே! உங்கள் வார்த்தை எனக்கு எத்தனையோ ஸந்தோஷம் அளித்தது. இனி துளஸீதளம் ஒன்றைப் பறித்துக் கொண்டு தானமண்டபத்திற்குப் போவோம்.

[ஹாரத்தியெடுத்து துளஸிச் செடிக்கு மூன்றுமுறை ப்ரதக்ஷிணம் செய்து ஒரு துளஸி தளத்தைப் பறித்து ஒருதட்டில் எடுத்துக்கொண்டு ருக்மணி தன் ஸபத்னிகளுடன் சேர்ந்து போகுதல்]

---

## அங்கம்—3. காக்ஷி.—5.

இடம்:— தான மண்டபம்—துலாபாரம்.

[ஸ்ரீக்ருஷ்ணன் த்ராஸில் உட்கார்ந்திருக்கிறார். நாரதர் பக்கத்தில் நிற்கிறார். வஸந்தகனும் நளினியும் வேறுபக்கம் நிற்கிறார்கள்.]

நா:— தேவா! மாதலிவசம் பாரிஜாத வ்ருக்ஷம் இந்த்ரனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி அனுப்பிவிட்டேன். இனி துலாபாரம் ஒன்றுதான் பாக்கி.

ஸ்ரீ:— வஸந்தகா! ருக்மணி இன்னும் வரவில்லையா!

வஸ:— மித்ரா! அதோ வருகிறாள். ஒரு தட்டில் துளஸி தளமும் கொண்டு.

ஸ்ரீ:— ஓஹோ! நாரதரே பார்த்தீரா துளஸிதளமும் கொண்டு வருகிறாள்.

நா:— அதுதானே அல்லவா நமக்கு வேண்டியவஸ்து— துளஸியைப் பார்க்கிலும் நமக்கு ப்ரியமானது வேறுண்டா!

[ருக்மணி துளஸிதளத் தட்டுடன்—ஸத்யபாமா மித்ரவிந்தை ஜாம்பவதியுடன் ப்ரவேசம்]

ரு:— முனீந்த்ரா! என் தங்கை ஸத்யை சொல்வது நிஜம்தானா?

நா:—ஸத்ராஜித் புத்ரி அம் வாஸ்தவமே. பதி பூர்ணமாகமாய ஸத்யை என்னை வேண்ட நான் வ்ரதம் ஒன்றுண்டு என அதைத் தான் உடனே கோற்று எனக்கு பத்ருதானம் கொடுத்தாள். திரும்ப நாதனை த்ராஸில் வைத்து அவரது நிறை தனம் எல்லாம் வைத்தும் ப்ரயோஜனப்படாமல் உன்னை உடனே அழைப்பிக்கச் செய்தோம் இனி நீ எந்த வஸ்துவையாவது வைத்து நிறை ஸமமாக்கி வாஸுதேவனை யடைந்துகொள்.

ரு:— அப்படியே செய்கிறேன். இதோ என் நாதனின் நிறையை ஸமனாக்கக்கூடிய வஸ்துவைக் கொண்டுவந்திருக்கிறேன். நிறுத்துப் பாருங்கள். (ஸ்ரீக்ருஷ்ணனைச் சுற்றி மூன்று

காரம் ப்ரதக்ஷணம் செய்து நமஸ்கரித்து) தேவதேவா—புராண புருஷா—வேதாந்தவேத்யா—நிருவணு—பக்தவத்ஸலா—உமது ப்ரபாவம் அறிய யாருக்கு சக்தியுண்டு?—உமது லீலா விநோதங்களை ஊஹிக்க ஸாத்யமா—உமது யதார்த்த ரூபம் அறிய யாருக்கு முடியும்? மாதவா—நீர் நிர்விகாரர்—நிரஞ்ஜனர், நிர்குணர்—உமது மஹிமையையறியாத கோடி ப்ராணிகளை அவித்யா ஸஞ்ஜாதாளாய் அஹங்காரமமகாரங்களைவிட்டு இறந்தும் பிறந்தும் பிறந்தும் இறந்து இருக்கிறார்கள். ஏதோ ஒருவர் க்லேசானுபவங்களைக் கண்ணில் காணாது ஸத்யத்தையே கண்டுகொண்டு உமது பாதஸேவையே ஜன்மவிமுக்தி ஹேதுவென்று அறிந்து தமது காலத்தை யெல்லாம் அதிலேயே விநியோகப்படுத்தி உமது பக்தர்களாகிறார்கள். அப்பேர்ப்பட்டவருக்கே தாமும் வசமாய் நடந்துகொள்கிறீரல்லவா? பக்தவத்ஸலா! இனி நான் வந்த கார்யம் கைகூட அநுக்ரஹிக்க வேண்டும்.

ஸ்ரீ:— ருக்மணி! அப்படியே செய்து என் பக்தர்களுள் முதன்மையாவாய்.

ரு:— தமது ஆசீர்வாத பலமுண்டானால் எனக்கு இது என்ன ப்ரமாதம்? ஸத்யா—இந்த த்ராஸிலுள்ள வஸ்துக்களை வெளியிலெடுத்துவிடு.

ஸத்:— நளினி அவைகளை எடுத்துவிடு. (நளினி வணங்கி அவ்விதம் செய்ய) ருக்மணி துளஸிதளத்தைக் கையில் எடுத்துக் கொண்டு த்ராஸில் வைக்கப் போகையில்)—

நா:— வைதர்பி! கொஞ்சம் பொறு—ஸாத்ராஜிதி தேவி—ஒருவார்த்தை சொல்ல மறந்தேன்—ஸ்ரீக்ருஷ்ணனை யார் இப்பொழுது வாங்குகிறார்களோ அவர்களுக்கே அவர் வசமாவார்—இது உனக்கு இஷ்டந்தானா? இனி ஸத்யபாமா விஜயம் ருக்மணி விஜயமாய்விடுவார்—என்ன சொல்கிறாய்?

ஸத்:— முனீந்த்ரா! இதற்கு இனியும் பயப்படவேணுமா? ப்ரேமையே பக்தியைவிட நிஜவல்லமையுடையதென நம்பி தலை கிறுங்கியிருந்த நான் தமது வ்ருத்தத்தினால் பக்தியே உத்தமமெனக் கண்டுகொண்டேன். இனி நான் பயப்படவேணு! நானும் இனி பக்திபூர்வமாக அவரை வசமாக்க ப்ரயத்னம் செய்வேன்.

ரு:— (துளஸிதளத்தைக் கையிலெடுத்து).

"பலமோ பத்ரமோ புஷ்பமோ தீர்த்தமோ அளித்து பக்தியுடன் உம்மை பஜிப்பவர்க்குத் தாம் வசமாவது ஸத்யம்" என்றீர்களல்லவா? அந்த வாக்யம் நிஜமானால் இந்தத் துளஸிதளம் உமது நிறைக்குக் குறையாததாகட்டும் (துளஸிதளம் வைத்ததினால் ஸ்ரீக்ருஷ்ணனிருந்த தட்டு மேலேபோகிறது துளஸிதளமிருந்த தட்டு தாழ்கிறது. புஷ்பவர்ஷம் பெய்கிறது. ஸ்ரீக்ருஷ்ணனும் த்ராஸிலிருந்து இறங்குகிறார். நாரதரும் அந்த துளஸிதளத்தை எடுத்து சிரஸில் அணிந்து நர்த்தனம் செய்கிறார்). எல்லோரும் "இந்த தினமே ஸுதினம் இந்த தினமே ஸுதினம்."

நா:— தேவா தாமது பக்தவாத்ஸல்யத்தைக் கண் குளிரக் கண்ட தேவர்களும் ஆனந்தபரிதர்களாய் புஷ்பவர்ஷம் செய்கிறார்கள். தம்மை நம்பினவர்களுக்கு சுபம் வராமலிருக்குமா அச்யுதா!

ஸத்:— (நாரதர் ஸமீபம் சென்று) முனீந்த்ரா புண்யகவ்ருதத்தினால் எனக்கிந்த புராண புருஷரின் அபூர்வ மஹிமையைத் தெரிவித்தீர் ஸம்ஸாரக்கடல் கடத்துவித்து நான் க்ருதார்த்தளான தாமது பாதத்தில் அனந்தகோடி நமஸ்காரம்.

நா:— தேவி! இதெல்லாம் என்னாலும் இல்லை: உன்னாலும்-மற்றெவராலும் இல்லை: அத்தனையும் உனது மனோஹரனின் லீலாவினோதமே தான்.

ஸத்:— (ருக்மணியிடம் போய்) உன் பக்தி விசேஷத்தினால் ப்ராணபதியை விடுவித்து என்னைப் போலுள்ள ஸபத்னிகளெல்லோரையும் க்ருதக்ருதர்களாகச் செய்துவிட்டாய். இன்றுடன் என் அஹங்காரம் எல்லாம் பறந்துபோய்விட்டது இனி உன் சரித்ரத்தையே வழிகாட்டியாகக்கொண்டு ப்ராணேச்வரரை ஸேவித்துக்கொண்டு இருக்கிறேன்.

ரு:— ஸத்யா! அப்படியே செய்து பக்தசிரோமணி யென்று பெயர் பெற்றுக்கொள். இனி ப்ராணேச்வரரிடம் போவோம் வா. (ஸ்ரீக்ருஷ்ணன் பக்கம் போய் நமஸ்கரிக்க இருவரையும் எழுந்திருக்கச் செய்து).

ஸ்ரீ:— ருக்மணி உனக்கு நான் எவ்வளவு கடமைப்பட்டவன். உன் பக்தியினால் என்னை நாரதரிடமிருந்து விடுவித்தாய்.

ரு:— நாதா! யார் யாருக்குக் கடமைப்பட்டவர் என்று தெரிவிக்கவேண்டுமா? தமது பக்தர்களுக்கு ஸாத்யமில்லாத கார்யமும் ஒன்றுண்டோ? தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு—ஸமுத்

ரம் வற்றவும் ஸிம்ஹம் மானாகவும் விஷம் அம்ருதமாகவும் மலை அணுவாகவும் செய்ய ஏதாவது ச்ரமமுண்டா?

ஸ்ரீ:— ஸத்யா! என்றால் நீ கஷ்டமடைய நேர்ந்ததல்லவா?

ஸத்:— நாதா! இவ்விதம் பலமடைய அந்த கஷ்டம் எத்தனை தரமானாலும் அனுபவிக்கலாம். இவைகளைக் கஷ்டம் என்று சொல்லலாமா? அவைகள் நிருபமான ப்ரம்ஹானந்தத்துக்கு ஸமானம்தான்.

ஸ்ரீ:— ஸத்யா! அப்படியானால் உனக்கு எதன்மேல் இஷ்டம் சொல்—பூர்த்தி செய்கிறேன்.

ஸத்:— தேவா! இனியும் எனக்கு இஷ்டம் என்பது உண்டா? ஆனாலும் என்னையும் ருக்மணிதேவியைப் போல் பக்தசிரோமணியாக அனுக்ரஹிக்கவேண்டும். அதுதான் எனது அபீஷ்டம் உமது கைங்கர்யத்திலே என் கரமும் உமது காக்ஷியிலே என் நேத்ரங்களும் உம்மைத் தொழுவதிலே சிரமும் உமது ஸேவையிலேயே புத்தியும் உமது காவ்ய ச்ரவணத்திலே செவிகளும் உமது ஸ்தோத்ரத்திலேயே என் நாக்கும் இருக்கும்படி அனுக்ரஹிக்க வேண்டும். ஜகதீசா! பக்தி சிந்தாமணி!

ஸ்ரீ:— அப்படியே யாகட்டும். (ருக்மணி ஸத்யபாமையைக் கையிற் பிடித்துக்கொண்டு இருபக்கமும் நிற்க.) நாரதரே தேவ கார்யம் நிறைவேறிவிட்டதா—இனி என்ன வேண்டும்?

ஜாம்:— தேவா! என்னையும் ஸத்யையைப்போல் அனுக்ரஹிக்கவேண்டும்.

மித்:— நாதா! என்னையும் பக்தவர்க்கங்களில் சேர்த்து ரக்ஷிக்கவேண்டும்.

வஸ:— க்ருஷ்ணா! என் வார்த்தையையும் மறவாமல் என்னையும் ரக்ஷிக்கவேண்டும்.

ஸ்ரீ:— அப்படியே.

நா:— தேவா! உமது பக்தவாத்ஸல்யம் லோகமெல்லாம் ஸ்பஷ்டமாயது—இந்த்ராணி முதலோரும் பாரிஜாத லாபத்தினால் ஸந்தோஷமடைந்தார்கள். ருக்மணிதேவி பக்தி ப்ரகாசமாய் வெளிப்பட்டது. ஸத்யபாமாதேவியின் ப்ரேமை யெல்லாம் பக்தியாய் மாறிவிட்டது. கலஹாகக்ஷனுக்கும் சாந்தி ஏற்பட்டது. இனி எனக்கென்னவேண்டியது. ஆகவே இப்படியாகட்டும்—

[மங்களம்.]